தூதுவரவ்வழியயோத்திதுன்னினார்
மாதிரம்பொருதகோண்மன்னர்மன்னன்முன்
ஓதினார்முனிவரவோதவேந்தனுங்
காதலென்றளவறுகடலுளாழ்ந்தனன். 69

எழுந்தனன்பொருக்கெனவிரதமேறினன்
பொழிந்தனமலர்மழையாசிபூத்தன
மொழிந்தனபல்லியமுரசமார்த்தன
விழுந்தனதீவினைவேரினோடுமே. 70

பிதிர்ந்ததெம்மனத்துயர்ப்பிறங்கலென்றுகொண்
டதிர்ந்தெழுமுரசுடையரசர்கோமகன்
முதிர்ந்தமாதவமுடைமுனியைக்கண்களால்
எதிர்ந்தனன்யோசனையிரண்டொடொன்றினே. 71

நற்றவமனைத்துமோர்நவையிலாவுருப்
பெற்றிவணடைந்தெனப்பிறங்குவான்றனைச்
சுற்றியசீரையுமுழையின்றோற்றமு
முற்றுறப்பொலிதருமூர்த்தியான்றனை. 72

அண்டர்கடுயரமுமரக்கராற்றலும்
விண்டிடப்பொலிதரும்வினைவலாளனைக்
குண்டிகைகுடையொடுகுலவுநூன்முறைத்
தண்டொடுபொலிதருதடக்கையான்றனை. 73

இழிந்துபோயிரதமாண்டிணைகொடாண்மலர்
விழுந்தனன்வேந்தர்தம்வேந்தன்மெய்ம்மையான்
மொழிந்தனனாசிகண்முதியநான்மறைக்
கொழுந்துமேற்படர்தரக்கொளுகொம்பாயினான். 74

அயல்வருமுனிவருமாசிகூறிடப்
புயல்பொழிதடக்கையாற்றொழுதுபொங்குநீர்க்
கயல்பொருவிழியொடுகலைவாளனை
இயல்பொடுகொணர்ந்தனனிரதமேற்றியே 75

அடிகுரன்முரசதிரயோத்திமாநகர்
முடியுடைவேந்தனம்முனிவனோடுமோர்

71. முதிர்ந்த மாதவமுடை முனியை, பிறங்குவான்றனை மூர்த்தியான்றனை, வினைவலாளனை, தடக்கையான்றனைக் கண்களால் யோசனையிரண்டொடொன்றின் எதிர்ந்தனனெனக் கூட்டி முடிக்க.

கடிகையினடைந்தனன்கமலவாண்முக
வடிவுடைமடந்தையர்வாழ்த்தெடுப்பவே. 76

கசடுறுவினைதம்தாழ்றகளவராயுழல்
அசட்டர்களவரையறுவராக்கிய
வசிட்டனுமருமறைவடிவுபோன்றொளிர்
விசிட்டனும்வேத்தவைபொலியமேவினார். 77

மாமணிமண்டபமன்னிமாசறு
தூமணித்தவிசிடைச்சுருதியேநிகர்
கோமுனிக்கரசனையிருத்திக்கொள்கடன்
ஏமுறத்திருத்திவேறினையசெப்பினான். 78

சான்றவர்சான்றவதருமமாதவம்
போன்றொளிர்புனிதநின்னருளிற்பூத்தவென்
ஆன்றதொல்குலமினியரசின்வைகுமால்
யான்றவமுடைமையுமிழப்பின்றுமரோ. 79

என்னலுமுனிவரனினிதிநோக்குறு
மன்னவர்மன்னகேள்வசிட்டனென்னுமோர்
நன்னெடுந்தவன்றுணைநவையில்செய்கைநீ
நின்னையிவ்வுலகினினிருபர்நேர்வரோ. 80

என்றனபற்பலவினிமைகூறிநற்
குன்றுறழ்வரிசிலைக்குவவுத்தோளினாய்
நன்றிகொளரிமகநடத்தவெண்ணியோ
வின்றெனையழைத்ததிங்கியம்புவாயென்றான். 81

உலப்பில்பல்லாண்டெலாமுறுகணின்றியே
தலப்பொறையாற்றினென்றனையர்வந்திலர்
அலப்புநீருடுத்தபாரளிக்குமைந்தரை
நலப்புகழ்பெறவினிநல்கவேண்டுமால். 82

77. வினைத்தொழில் ஒரு பொருட் பன்மொழி, ஈண்டுத் தீவினையை யுணர்த்திற்று.

79. இட்சுவாகுதொட்டுவந்த அரசர் பரம்பரையாதலின் ஆன்ற தொல் குலமென்றார்.

80. மன்னவர் மன்ன - சக்கரவர்த்தியே.

81. அரிமகம் - பரிமேதம்.

82. அலப்புநீர் - கடல்.

என்றலுமரசநீயிரங்கலிவ்வுல
கொன்றுமோவுலகமீரேழுமோம்பிடும்
வன்றிறன்மைந்தரையளிக்குமாமகம்
இன்றுநீயியற்றுதற்கெழுகவீண்டென்றான். 83

ஆயதற்குரியனகலப்பையாவையும்
ஏயெனக்கொணர்ந்தனர்நிருபர்க்கேந்தலுந்
தூயநற்புனல்படீஇச்சுருதிநான்முறை
சாய்வறத்திருத்தியசாலைபுக்கனன். 84

முழங்கழன்மிம்மையுமுடுகியாகுதி
வழங்கியேயீராறுதிங்கள்வாய்த்தபின்
றழங்கினதுந்துபிதாவில்வானகம்
விழுங்கினர்விண்ணவர்வெளியின்றென்னவே. 85

முகமலரொளிர்தரமொய்த்துவானுளோர்
அகவிரைநறுமலர்தூவியார்த்தெழத்
தகவுடைமுனியுமத்தழலினுப்பணை
மகவருளாகுதிவழங்கினானரோ. 86

ஆயிடைக்கனலினின்றம்பொற்றட்டமீந்
தூயநற்சுதைநிகர்பிண்டமொன்றுசூழ்
தீயெரிப்பங்கியுஞ்சிவந்தகண்ணுமா
ஏயெனப்பூதமொன்றெழுந்ததேந்தியே. 87

வைத்ததுதரைமிசைமறித்துமவ்வழி
தைத்ததுபூதமத்தவனும்வேந்தனை
உய்த்தநல்லமிர்தினையுரியமாதர்கட்
கத்தகுமாபினாலளித்தியாலென்றான். 88

மாமுனியருள்வழிமன்னர்மன்னவன்
றாமமென்சுரிகுழற்றொண்டைத்தூயவாய்க்

தாமுறவளித்தனன்சங்கமார்ந்தெழ. 89

---

83. மைந்தரையளிக்குமாமகம் - புத்திரகாமேஷ்டியாகம்.

85. அழன் - மும்மையுமென்றது ஆகவனீயம், தக்ஷணாக்கினி, காருக பத்தியம் என்பவற்றை. இதனை, முத்தீச்செல்வத் திருபிறப்பாளர். என்புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

88. உரியமாதர் என்றது - ஈண்டு பட்டமகிஷிகள் மூவர்.

கைகயன் றனையைதன்கரத்துமம்முறைச்
செய்கையினளித்தனன்றேவரார்த்தெழப்
பொய்கையுநதிகளும்பொழிலுமோதிமம்
வைகுறுகோசலமன்னர்மன்னனே. 90

நமித்திரர்நடுக்குறுநலங்கொண்மொய்ம்புடை
நிமித்திருமரபுளான்முன்னர்நீர்மையின்
சுமித்திரைக்களித்தனன்சுரர்க்குவேந்தினிச்
சமித்ததென்பகையெனத்தமரொடார்ப்பவே. 91

பின்னுமப்பெருந்தகைபிதிர்ந்துவீழ்ந்தது
தன்னையுஞ்சுமித்திரைதனக்குநல்கினான்
ஒன்னலர்க்கிடமும்வேறுலகினோங்கிய
மன்னுயிர்தமக்குநீள்வலமுந்துள்ளவே. 92

வாம்பரிவேள்வியுமகவைநல்குவ

ஒம்பிடமுடிந்தபினுலகுகாவலன்
ஏம்பலோடெழுந்தனன்யாருமேத்தவே. 93

முருடருபல்லியமுழங்கியார்த்தன
இருடருமுலகமுமிடரினீங்கின
தெருடருவேள்வியின்கடன்கடீர்ந்துழி
வருடருமவையின்வந்தரசனெய்தினான். 94

செம்முறைகடன்முறைதிறம்பலின்றியே
மெய்ம்முறைக்கடவுளருக்கீந்துவிண்ணுளோர்க்
கம்முறையளித்துநீடந்தணாளர்க்குங்
கைம்முறைவழங்கினன்கனகமாரியே. 95

வேந்தர்கட்கரசொடுவெறுக்கைதேர்பரி
வாய்ந்தநற்றுகிலொடுவரிசைக்கேற்பன
ஈய்ந்தனன்பல்லியந்துவைப்பவேகிநீர்
தோய்ந்தனன்சரயுநற்றுறைக்கணெய்தியே. 96

முரசினங்கறங்கிடமுத்தவெண்குடை
விரசிமேனிழற்றிடவேந்தர்சூழ்தர

91. நமித்திரர் - பகைவர். சமித்தது - அடங்கிற்று.
92. பின்னும் - வினைமாற்றுப் பொருளில்வருவதோரிடைச்சொல்.

அரசவையடைந்துழியயனுநாணுற
வுரைசெறிமுனிவன்தாள்வணங்கியோங்கினான். 97

அரியநற்றவமுடைவசிட்டனாணையால்
இரலைநற்சிருங்கமாவிறைவன்றாடொழா
உரியபற்பலவுரைபயிற்றியுய்ந்தனன்
பெரியநற்றவனிப்பெறுவதியாதென்றான். 98

எந்தைநின்னருளினாலிடரினீங்கியே
உய்ந்தனனடியனேனென்னவொண்டவன்
சிந்தையுண்மகிழ்ச்சியால்வாழ்த்தித்தேர்மிசை
வந்தமாதவரொடும்வழிக்கொண்டேகினான். 99

வாங்கியதுயருடைமன்னன்பின்னரும்
பாங்குடைமுனிவர்தாள்பழிச்சியேத்தல்கொண்
டோங்கியவுவகையராசியோடெழா
நீங்கினாரிருந்தனனின்றவேந்தனே. 100

தெரிவையர்மூவருஞ்சிறுநாட்செலீஇ
மருவியவயாவொடுவருத்தந்துய்த்தலாற்
பொருவருதிருமுகமன்றிப்பொற்புநீ
டுருவமுமதியமோடொப்பத்தோன்றினார். 101

ஆயிடைப்பருவம்வந்தடைந்தவெல்லையின்

வேய்புனர்பூசமும்விண்ணுளோர்புகழ்
தூயகற்கடகமுமெழுந்துதுள்ளவே. 102

சித்தருமியக்கருந்தெரிவைமார்களும்
வித்தகமுனிவரும்விண்ணுளோர்களு
நித்தருமுறைமுறைநெருங்கியார்ப்புறத்
தத்துறலொழிந்துநீடருமமோங்கவே. 103

ஒருபகலுலகெலாமுதாரத்துட்பொதிந்
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ்சோதியைத்
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை. 104

98. இரலை நற்சிருங்கமாவிறைவன் - கலைக்கோட்டுமுனி.
100. வாங்கியதுயர் - துன்பநீங்கின.

ஆசையும்விசும்புநின்றமரரார்த்தெழ
வாசவன்முதலினர்வணங்கிவாழ்த்துறப்
பூசமுமீனமும்பொலியநல்கினாள்
மாசறுகேகயன்மாதுமைந்தனை. 105

தளையவிழ்தருவுடைச்சயிலகோபனுங்
கிளையுமந்தரமிசைக்கெழுமியார்ப்புற
அளைபுகுமரவினோடலவன்வாழ்வுற
விளையவற்பயந்தனளிளையமென்கொடி. 106

படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார்
நடங்கிளர்தரமறைநவிலநாடக
மடங்கலுமகமுமேவாழ்வினோங்கிட
விடங்கிளர்விழியினாண்மீட்டுமீன்றனள். 107

ஆடினரரம்பையரமுதவேழிசை
பாடினர்கின்னரர்துவைத்தபல்லியம்
வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
ஓடினருலவினரும்பர்முற்றுமே. 108

ஓடினரரசன்மாட்டுவகைகூறிநின்
றாடினர்சிலதியரந்தணாளர்கள்
கூடினர்நாளொடுகோளுநின்றமை
நாடினருலகினிநவையின்றென்றனர். 109

மேடமாமதிதிதிநவமிமீன்கழை
நீடுறுமாலைகர்க்கடகநீதிசேர்
ஓடைமாகளிறனானுதயராசிகோள்
நாடினேகாதசர்நால்வருச்சரே. 110

நீதி - ஒழுக்கமானது, சேர் - சேர்ந்த, ஓடை - நுதலணியை யுடைய, மா-பெருமைபொருந்திய, களிறு-யானையை, அனான்-ஒத் தவனாகிய (இராம மூர்த்தியினது அவதாரகாலையில்) மா-பெருமை பொருந்திய, மதி-மாஸமானது, மேடம்-மேஷமாயும், திதி-திதி யானது, நவமி-நவமியாயும், மீன்-நட்சத்திரமானது, கழை-புநர் பூசமாயும், கற்கடகம்-கடகமானது, உதயராசி-உதயமும், இராசி லக்கினமாகிய சந்திரலக்கினமுமாயும், மால்-புதன், ஐ-ராஜஸ்தான

106. சயிலகோபன் - பூருவத்தில் மலைகளைக்கோபித்துச் சிறகுகளை வெட்டினன் ஆதலால் இந்திரனுக்குச் சயிலகோபனென்று பெயர் வழங்கி வருகின்றது.

மாகிய பத்தாமிடத்திலும், கோள்-கோதுவிற்கு, நாடு-மிதுனமானது, இல்-வீடாயும், ஏகாதசர்-பதினொன்றுக்குடையவர், நால்வர்-நான்கு பேர், உச்சர்-உச்சஸ்தானத்திலும், நீடுறும்-பலமாய் நிற்கும், ஏகாரம்-தேற்றம்.

இராம ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | இராசி | | சந்திரன் லக்கினம் குரு |
| செவ்வாய் | | | |
| இராகு | | சனி | |

என்றனர்சாதகமீசற்கேனையர்

தொன்றியதமனியத்தெழுதியோதினர்
வன்றிறற்சுரர்குருவாழ்த்தெடுப்பவே. 111

மாமுனிதன்னொடுமன்னர்மன்னவன்
ஏமுறப்புனல்படீஇவித்தொடின்பொருள்
தாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக்
கோமகார்திருமுகங்குறுகிநோக்கினான். 112

இறைதவிர்ந்திடுகபார்யாண்டொரேழ்நிதி
நிறைதருசாலைதாணீக்கியாவையும்
முறைகெடவறியவர்முகந்துகொள்கென
அறைபறையென்றனனரசர்கோமகன். 113

படையொழிந்திடுகதம்பதிகளேயினி
விடைபெருகுகமுடிவேந்தர்வேதியர்
நடையுறுநியமமுநவையின்றுகுக
கடவுளர்விழவொடுகளிப்பவெங்கணும். 114

111. ஈசன் - ஈண்டு ஸ்ரீராமன்-

ஆலயம்புதுக்குகவந்தணர்தஞ்
சாலையுஞ்சதுக்கமுஞ்சமைக்கசந்தியுங்
காலையுமாலையுங்கடவுளர்க்கணி
மாலையுந்தீபமும்வழங்குகென்றனன். 115

என்புழிவள்ளுவர்யானைமீமிசை
நன்பறையறைந்தனர்நகரமாந்தரு
மின்பிறழ்நுசுப்பினர்தாமும்விம்மலால்
இன்பமென்றளக்கருமளக்கரெய்தினர். 116

ஆர்த்தனர்முறைமுறையன்பினாலுடல்
போர்த்தனபுளகம்வேர்பொடித்தநீணிதி
தூர்த்தனரெதிரெதிர்சொல்லினர்க்கெலாந்
தீர்த்தனென்றறிந்தவேதாவவர்தஞ்சிந்தையே. 117

பண்ணையுமாயமுந்திரளும்பாங்கருங்
கண்ணகன்றிருநகர்களிப்புக்கைமிகுந்
தெண்ணெயுங்களபமுமிழுதுநானமுஞ்
சுண்ணமுந்தூவினவீதிதோறுமே. 118

வேறு

இத்தகைமாநகரீராறுநாளுஞ்
சித்தமுறுங்களியோடுசிறந்தே
தத்தமையோன்றமுணர்ந்திலதாவா
மெய்த்தவனும்விதிப்படிசெய்த்தான். 119

காமலையத்தளர்கைக்கரியெய்த்தே
யராவணையிற்றுயில்வோயெனவந்நாள்
விராவியளித்தருண்மெய்ப்பொருளுக்கே
இராமனெனப்பெயரீந்தனனன்றே. 120

கரதலமுற்றெருளிர்நெல்லிகடுப்ப
விரதமறைப்பொருண்மெய்ந்நெறிகண்ட
வரதனுதித்திடுமற்றையவொளியைப்
பரதனெனப்பெயர்பன்னினனன்றே. 121

உலக்குநர்வஞ்சகரும்பருமுய்ந்தார்

119. ஈராறுநாள் - என்றதனைப்பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் எனப் பெரியாரும் பணித்தமையான் அறிக.

விலக்கருமொய்ம்பின்விளங்கொளிநாமம்
இலக்குவனென்னவிசைத்தனனன்றே. 122

முத்துருக்கொண்டுசெம்முளரியலர்ந்தால்
ஒத்திருக்கும்மெழிலுடையவிவ்வொளியால்
எத்திருக்குங்கெடுமென்பதையெண்ணாச்
சத்துருக்கனென்னச்சாத்தினனாமம். 123

பொய்வழியின்முனிபுகறருமறையால்
இவ்வட
கைவழிந்தியெனாநிகலைமறையோர்
மெய்வழியுவரிநிறைத்தனமென்மேல். 124

காவியுமொளிர்தருகமலமுமெனவே
ஓவியமெழிலுடையொருவனையலதோர்
ஆவியுமுடலமுமிலதெனவருளின்
மேவினானுலகுடைவேந்தர்தம்வேந்தன். 125

அமிர்துகுகுதலையொடணிநடைபயிலாத்
திமிரமதறவருதினகரனெனவுந்
தமரமதுடன்வளர்சதுமறையெனவுங்
குமரர்கணிலமகள்குறைவறவளர்நாள். 126

சவுளமொடுபநயம்விதிமுறைதருகுற்
றிவளவதெனவொருகரைபிறிதிலவா
உவள்தருமறையினொடொழிவறுகலையுந்
தவள்மதிபுனையாணிகர்முனிதரவே. 127

யானையுமிரதமுமிவுளியுமுதலா
ஏனையபிறவுமவ்வியல்பினினடையுற்
றானுறுபடைபலசிலையொடுபயிலா
வானவர்தனிமுதல்கிளையொடுவளர. 128

அருமறைமுனிவருமமரருமவனித்
திருவுமநகருறைசெனமுநமிடரோ

125. கரியகோலத் திருமேனியனாகிய ஸ்ரீராமனை, 'ஓவியவெழிலுடை யொருவன்' என்றார்.

126. தமரமதுடன் என்றார் - ஏழிசையோடுகூடிய மறை யொலியை.

127. உபநயனம் என்றதும், தவளம் என்றதும், குறைந்து நின்றனன்.

128. அயர்வரும் அமரர்களதிபதி என்பதுதோன்ற, 'வானவர் தனி முதல்' என்றார்.

டிருவினை துணிதருமிவரினிவணின்
றொருபொழுதகல்கிலமுறைறயெனவுறுவார். 129

ஐயனுமிளவலுமணிநிலமகடன்
செய்தவமுடைமைகடெரிதாநதியு
மைதவழ்பொழில்களும்வாவியுமருவி
ரிவார். 130

பரதனுமிளவலுமொருகொடிபகிரா
திரதமுமிவுளியுமிவரினுமறைநூல்
உரைதருபொழுதினுமொழிகிலரெனையாள்
வரதனுமிளவலுமெனமருவினரே. 131

வீரருமிளைஞருமெறிபொழில்களின்வா
ஈரமொடுரைதருமுனிவரரிடைபோய்ச்
சோர்பொழுதணிநகர்துறுகுவரெதிர்வார்
கார்வரவலர்பயிர்பொருவுவர்களியால். 132

ஏழையரனைவருமிவர்தடமுலைதோய்
கேழ்கிளர்மதுகையர்கிளைகளுமினையார்
வாழியவெனவவர்மனனுறுகடவுட்
டாழ்குவர்கவுசலைதயரதனெனவே. 133

கடல்கருமுகிலொளிர்கமலமதலரா
வடவரையுடன்வருசெயலெனமறையுந்
தடவுதலறிவருதனிமுதலவனும்
புடைவருமிளவலுமெனநிகர்புகல்வார். 134

எதிர்வருமவர்களையெமையுடையிறைவன்
முதிர்தருகருணையின்முகமலரொளிரா
எதுவினையிடரிலையினிதினுமனைபு
மதிதருகுமரரும்வலியர்கொலெனவே. 135

அஃதையநினையெமதாசெனவுடையேம்
இஃதொருபொருளலவெமதுயிருடனேழ்
மகிதலமுழுதையுமுறுகவிமலரோன்
உகுபகலளவெனவுரைநனிபுரிவார். 136

132. சோர்பொழுது — மாலைக்காலம்.

136. அகதியைய என்றது, அஃதைய என நின்றது, இதனை ‘அஃதை நத’ எனப் பிறருங்கூறுதல் காண்க.

வேறு

இப்பரிசணிநகருறையும்யாவரு

தப்பறவடிநிழறழுவியேத்துற
முப்பரம்பொருளுக்குமுதல்வன்வைகுறும். 137

அரசர்தம்பெருமகனகிலம்யாவையும்

முரசொலிகறங்கிடமுனிவரேத்துறக்
கரைசெயலரியதோர்களிப்பின்வைகுநாள். 138

ம் 317.

## 6 - வது கையடைப்படலம்

நனைவருகற்பகநாட்டுநன்னகர்
அனைவருமணைதரவயிர்க்குஞ்சிந்தையான்
நினையவுமரியதுவிசும்பினீண்டதோர்
புனைமணிமண்டபம்பொலியவெய்தினான். 1

தூயமெல்லரியணைபொலிந்துதோன்றினான்
சேயிருவிசும்பிடைத்திரியுஞ்சாரணர்
நாயகனிவன்கொலென்றயிர்த்துநாட்டமோர்
ஆயிரமில்லையென்றையநீங்கினார். 2

மடங்கல்போன்மொய்ம்பினான்முன்னர்மன்னுயிர்
அடங்கலுமுலகும்வேறமைத்துத்தேவரோ
டிடங்கொளான்முகனையும்படைப்பெனீண்டெனாத்
தொடங்கியதுனியுறுமுனிவன்றோன்றினான். 3

வேறு

வந்துமுனியெய்துதலுமார்பினணியாரம்
அந்தரதலத்திரவியஞ்சவொளிவிஞ்சக்

137. முப்பரம்பொருளுக்கு முதல்வன்—சங்கருடணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்னும் வயூகர்மூவருக்கு முதற்பொருளை, இதனை 'முப்பரம் பொருளிற்குண்முதலை' என்று இவ்வாசிரியர் பிற்கூறுதலும் இப்பெற்றி நோக்கி. 2. சாரணர்—தேவ ஒற்றர். 3. துனியுறுமுனிவன்—கோசிகன்.

கந்தமலரிற்கடவுடன்வரவுகாணும்
இந்திரனெனக்கடிதெழுந்தடிபணிந்தான். 4

பணிந்துமணிசெற்றுபுகுயிற்றியவிர்பைம்பொன்
அணிந்ததவிசிட்டதினருத்தியொடிருத்தி
இணைந்தகமலச்சரணருச்சனைசெய்தின்றே
துணிந்ததென்வினைத்தொடரெனத்தொழுதுசொன்னான். 5

நிலஞ்செய்தவமென்றுணரினன்றுநெடியோயென்
னலஞ்செய்வினையுண்டெனினுமன்றுநகர்நீயான்
வலஞ்செய்துவணங்கவெளிவந்தவிதுமுந்தென்
குலஞ்செய்தவமென்றினிதுகூறமுனிகூறும். 6

வேறு

என்னையமுனிவருமிமையவருமிடையூறொன்றுடையாரானாற்
பன்னகமுநகுவெள்ளிப்பனிவரையும்பாற்கடலும்பதுமபீடந்
தன்னகருங்கற்பகநாட்டணிநகருமணிமாடவயோத்தியென்னும்
பொன்னகருமல்லாதுபுகலுண்டோவிகல்கடந்தபுலவுவேலோய். 7

இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கை யிழந்து போந்து, நின்றளிக்குந் தனிக்குடையி னிழலொதுங்கிக் குறையிரந்து நிற்பநோக்கிக், குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக் குலந்தோடுந் தொலைத்துநீகொண், டன்றளித்தவரசன்றோ புரந்தரனின் றாள்கின்றதரசவென்றான். 8

உரைசெய்யுமளவிலவன் முகநோக்கி யுள்ளத்தினொருவராலும், கரைசெய்யவரியதொரு பேருவகைக் கடல்பெருகக் கரங்கள்கூப்பி, அரசெய்தியிருந்தபய னெய்தினன்மற் றினிச்செய்வ தருளுகென்று, முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப் பின்மொழியு முனிவனாங்கே. 9

தருவனத்துள் யாணியற்றுந் தவவேள்விக் கிடையூறுந் தவஞ் செய்வோர்கள், வெருவரச்சென் றடைகாமவெகுளியென விருதரிடை விலக்காவண்ணம், செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினுங் கரியசெம்மல், ஒருவனைத்தந் திடுதியென வுயிரிரக்குங் கொடுங்கூற்றி னுளையச்சொன்னான். 10

3. இற்றைப்போ தவனரசாள்வது நின்னாற்கொடுக்கப்பட்ட தென்பார்

10. காமவெகுளியெனக் கூறினமையான் மயக்கமென்பதூஉ முபலக்கணத்தாற் கூறிக்கொள்க.

எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன் மருமத்தி னெறிவேல்பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற் கனலுழைந்தா லெனச்செவியிற் புகுதலோடும், உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த வாருயிர் நின்றூசலாடக், கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான் கடுந்துயரங் காலவேலான். 11

தொடையூற்றிற் றேன்றுளிக்கு நறுந்தாரா னொருவண்ணந்துயரீங்கிப், படையூற்றமிலன்சிறிய னிவன்பெரியோய் பணியிதுவேற் பணிநீர்க்கங்கை, புடையூற்றுஞ்சடையானு நான்முகனும் புரந்தரனும் புகுந்துசெய்யும், இடையூற்றுக்கிடையூறு யான்காப்பென் பெருவேள்விக் கெழுகவென்றான். 12

என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண் படைத்த
ெக்காலம், அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல் வெயில்கரந்த தங்குமிங்கும், நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தகொழுங் கடைப்புருவ நெற்றிமுற்றச், சென்றனவுந் தனநகையுஞ் சிவந்தன கண்ணிருண்டனபோய்த் திசைகளெல்லாம். 13

வேறு

கறுத்தமாமுனிகருத்தையுன்னிநீ

குறுத்தலாகலாவுறுதியெய்துநாள்
மறுத்தியோவெனுவசிட்டன்கூறினன். 14

பெய்யுமாரியாற்பெருகுவெள்ளம்போய்
மொய்கொள்வேலைவாய்முடுகுமாறுபோல்
ல்விஞ்சைவந்

. 15

குருவின்வாசகங்கொண்டுகொற்றவன்
றிருவின்கேள்வனைக்கொணர்மின்சென்றென
வருகவென்றனனென்றலோடும்வந்
தருகுசார்ந்தனனறிவினும்பரான். 16

---

12. ஒருவனை - ஒப்பற்றவனை. படையூற்றமிலனென் றிவ்வாசிரியர் கூறியதை முதனூலாசிரியரும் இன்னும் பதினாறாண்டு நிரம்பிற்றில்லையென்றும், நிசாசரர் பூசலுக்கிவனுதவானென்றும், தாமரைக்கண்ணனையழைத்தல் பொருந்தாதுகாணென்றும் கூறுவர். இதனை வடநூலார்வாய்க்கேட்டுணர்க.

14. அணியுறுமுனிவன் என்றதும் பின் கறுத்தமாமுனி என்றதும் கோசிகனைய 5 முனிவர்யாவரு மிறைவன்பால் விஞ்சையாவுமடைந்து மீட்டுபவனிடந் தருவதியாதலாற் பெய்யுமாரியாற் பெருகுவெள்ளம்போய் - மொய்கொள் வேலைவாய் முடுகுமாறுபோ லென்றுவமையாற் கூறினர்.

வந்தநம்பியைத்தம்பிதன்னொடு
முந்தைநான்மறைமுனிக்குக்காட்டிநல
தந்தைநீதனித்தாயுநீயிவர்க்
கெந்தைதந்தனனியைந்தசெய்கென்றான். 17

கொடுத்தமைந்தரைக்கொண்டுசிந்தைமுந்
தெடுத்தசீற்றம்விட்டினிதுவாழ்த்திமேல்
அடுத்தவேள்விபோய்முடித்துநாமென
நடத்தன்மேயினனவைக்கணீங்கினான். 18

வென்றிவாள்புடைவிசித்துமெய்ம்மைபோல்
என்றுந்தேய்வுறுத்தூணியார்த்திரு
குன்றம்போன்றுயர்தோளிற்கொற்றவில்
நாங்கினானுலகந்தாங்கினான். 19

அன்னதம்பியுந்தானுமையனு
மன்னனின்னுயிர்வழிக்கொண்டாமெனச்
சொன்னமாதவற்றொடர்ந்துசாயைபோற்
பொன்னின்மாநகர்ப்புரிசைநீங்கினான். 20

வரங்கண்மாசறத்தவஞ்செய்தோர்கள்வாழ்
புரங்கணேரிலாநகரநீங்கிப்போய்
அரங்கினாடுவார்சிலம்பினன்னநின்
றிரங்குவார்புனற்சரயுவெய்தினார். 21

கரும்புகால்பொரக்கமுகின்வார்ந்ததேன்
வரம்புமீதிடுமருதவேலிவாய்
அரும்புகொங்கையாரம்மெலோதிபோற்
சுரும்புவாழ்வதோர்சோலைநண்ணினார். 22

தாழுமாமழைதழுவுநெற்றியாற்
சூழியானைபோற்றோன்றுமால்வரைப்
பாழிமாமுகட்டுச்சிபச்சைமா
ஏழுமேறப்போயாறுமேறினார். 23

நாவுளாவுதிரயக்கும்வேள்விவாய்த்

19. உலகமெலாந் தன்னகட்டில்தாங்கிக் கிதுவொரு பொருளன்றென்றார். கொற்றவில் ஒன்றுதாங்கினா னுலகந்தாங்கினானென்றார்.

காவுமாபுகைதழுவுசோலைகண்
டியாவதீதென்றானெவர்க்குமேனின்றான். 24

த்தம்–341.

---

## 7 - வது தாடகைவதைப்படலம்

திங்கண்மேவுஞ்சடைத்தேவன்மேன்மாரவேள்
இங்குநின்றெய்யவும்மெரிதரும்நுதல்விழி
பொங்குகோபஞ்சுடபூளைவீயன்னதன்
அங்கவெந்தன்றுதொட்டனங்கனேயாயினான். 1

வாரணத்துரிவையான்மதனனைச்சினவுநாள
ஈரமற்றங்கமிங்குகுதலாலிவணெலாம்
ஆரணத்துறையுளாயங்கநாடதுவுமக்
காரணக்குறியுடைக்காமனாச்சிரமமே.

பற்றவாவேரொடும்பசையறப்பிறவிபோய்
முற்றவாலுணர்வுமேன்முடுகினாரறிவுசென்
றுற்றவானவனிருந்தியோகுசெய்தனனெனிற்
சொற்றவாமளவதோமற்றிதன்றூய்மையே.

என்றவந்தணனியம்பலும்வியந்தவ்வயிற்
சென்றுவந்தெதிர்தொழுஞ்செந்நெறிச்செல்வரோ
டன்றுறைந்தலர்கதிர்ப்பரிதிமண்டிலமகன்
குன்றினின்றிவரவோர்சுடுசுரங்குறுகினார்.

பருதிவானவனிலம்பசையறப்பருகுவான்
விருதுமேற்கொண்டுலாம்வேனிலேயல்லதோர்
இருதுவேறின்மையாலெரிசுடர்க்கடவுளுங்
கருதின்வேமுள்ளமுங்காணில்வேநயனமும்.

படியின்மேல்வெம்மையைப்பகரினும்பகருநா
முடியவேமுடியமூடிருளும்வான்முகடும்வேம்
விடியுமேல்வெயிலும்வேமழையும்வேமின்னினோ
டிடியும்வேமென்னில்வேறியாவைவேவாதவே.

---

1. திங்கண்மேவுஞ்சடைத்தேவன் – சிவபெருமான்.
2. தேவர்தம்நா – கனற்கடவுள்.

விஞ்சுவான்மழையின்மேலம்பும்வேலும்படச்
செஞ்செவேசெருமுகத்தமர்செயுந்திறனிலா
வஞ்சர்தீவினையினான்மானமாமணியிழந்
தஞ்சினார்நெஞ்சுபோலென்றுமாறாதரோ. 7

பேய்பிளந்தொக்கநின்றலர்பெருங்கள்ளியின்
றாய்பிளந்துக்ககாரகில்களுந்தழையிலா
வேய்பிளந்துக்கவெண்டரளமும்விடவரா
வாய்பிளந்துக்கசெம்மணியுமேவனமெலாம் 8

பாருமோடாதுநீடாதெனும்பாலதே
சூருமோடாதுகூடாதரோசூரியன்
றேருமோடாதுமாமாகமீதேகரிநேர்
காருமோடாதுநீள்காலுமோடாதரோ. 9

கண்கிழித்துமிழ்விடக்கனலராவரசுகார்
விண்கிழித்தொளிருமின்னனையபன்மணிவெயின்
மண்கிழித்திடவெழுஞ்சுடர்கண்மண்மகளுடற்
புண்கிழித்திடவெழுங்குருதியேபோலுமே. 10

வேறு

புழுங்குவெப்பசியொடுபுரளும்பேரரா
விழுங்கவந்தெழுந்தெதிர்விரித்தவாயின்வாய்
முழங்குதிண்கரிபுகுமுடுகிமீமிசை
வழங்குவெங்கதிர்சுடமறைவுதேடியே. 11

ஏகவெங்கனலராசிருந்தகாட்டினிற்
காகமுங்கரிகளுங்கரிந்துசாம்பின்
மாகவெங்கனலெனும்வடவைத்தீச்சுட
மேகமுங்கரிந்திடைவீழ்ந்தபோலுமே. 12

கானகத்தியங்கியகழுதின்றேர்க்குலம்
தானகத்தெழுதலாற்றலைக்கொண்டோடிப்போய்
மேனிமிர்ந்தெழுந்திடில்விசும்பும்வேமெனா
வானவர்க்கிரங்கிநீர்வளைந்ததொத்ததே. 13

ஏய்ந்தவக்கனலிடையெழுந்தகானற்றேர்
காய்ந்தவக்கடுவனங்காக்கும்வேனிலின்

---

8. கள்ளிவயிற்றினகில்பிறக்குமென்றதனாற் பெருங்கள்ளியின்றாய் பிளந்துக்காரகில்களுமென்றார்.

வேந்தனுக்கரசுவீற்றிருக்கச்செய்ததோர்
பாய்ந்தபொற்காலுடைப்பளிக்குப்பீடமே. 14

தாவருமிருவினைசெற்றுத்தள்ளரு
மூவகைப்பகையரண்கடந்துமுத்தியிற்
போவதுபுரிபவர்மனமும்பொன்விலைப்
பாவையர்மனமும்போற்பசையுமற்றதே. 15

பொரிபரற்படர்நிலம்பொடிந்துகீழுற
விரிதலிற்பெருவழிவிளக்கித்தோன்றலால்
அரிமணிப்பணத்தராவரசர்நாட்டினும்
எரிகதிர்க்கினிதுபுக்கியங்கலாயதே. 16

எரிந்தெழுகொடுஞ்சுரமினையதெய்தலும்
அருந்தவனிவர்பெரிதளவிலாற்றலைப்
பொருந்தினராயினும்பூவின்மெல்லியர்
வருந்துவர்சிறிதெனமனத்திருக்கினன். 17

நோக்கினனவர்முகநோக்கநோக்குடைக்
கோக்குமரருமடிகுறுகநான்முகன்
ஆக்கியவிஞ்சைகளிரண்டுமவ்வழி
ஊக்கினனவையவருள்ளத்துள்ளினர். 18

உள்ளியகாலையினூழித்தீயையும்
எள்ளுறுகொழுங்கனலெரியும்வெஞ்சுரந்
தெள்ளுதண்புனலிடைச்சேறலொத்தது
வள்ளலுமுனிவனைவணங்கிக்கூறுவான். 19

சுழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான்
விழிபடவெந்ததோவேறுதானுண்டோ
பழிபடர்மன்னவன்படைத்தநாட்டினாங்
கழிவதென்காரணமறிஞகூறென்றான். 20

என்றலுமிராமனைநோக்கியின்னுயிர்
கொன்றுழல்வாழ்க்கையள்கூற்றின்றோற்றத்தள்
அன்றியுமையிருநூறுமையன்மா
ஒன்றியவலியினளுறுதிகேளென. 21

---

15. இருவினை - புண்ணியபாவங்கள். மூவகைப்பகை — காமவெகுளி மயக்கங்களை.

18. விஞ்சைகளிரண்டு - பலம், அதிபலம் என்பன,

20. சுழிபடுகங்கையந்தொங்கன் மௌலியான் - சிவன்.

கன்னவிறோளினாய்கமலத்தோனருள்
மன்னுயிரனைத்தையும்வாரிவாய்மடுத்
தின்னுயிர்வளர்க்குமோரெரிகொள்கூற்றனோர்
அன்னவள்யாவளென்றறையக்கேட்டியால். 22

இயக்கர்தங்குலத்துளானுலகமெங்கணும்
வியக்குறுமொய்ம்பினானெறியின்வெம்மையான்

துயக்கிலன்சுகேதுவென்றுளனொர்தூய்மையான். 23

அன்னவன்மகவிலாதயருஞ்சிந்தையான்
மன்னெடுந்தாமரைமலரின்வைகுறு
நன்னெடும்பகவனைவழுத்திநற்றவம்
பன்னெடும்பகலெலாம்பயின்றபான்மையான். 24

முந்தினனருமறைக்கிழவன்முற்றுநின்
சிந்தனையென்னெனச்சிறுவரின்மையான்
நொந்தனனருள்கெனநுணங்குகேள்வியாய்
மைந்தர்களிலையொருமகளுண்டாமென்றான். 25

பூமடமயிலினைப்பொருவும்பொற்பொடும்
ஏழுறுமதமலையீரைஞ்ஞூறுடைத்
தாமிகுவலியொடுந்தனையைதோன்றுக
போவெனமலரயன்புகன்றுபோயினான். 26

ஆயவனருள்வழியலர்ந்ததாமரைச்
சேயவளெனவளர்செவ்விகண்டிவட்
காயவன்யார்கொலென்றாய்ந்துதன்கிளை
நாயகன்சுந்தனென்றவற்குநல்கினான். 27

காமனுமிரதியுங்கலந்தகாட்சியீ
தாமெனவியக்கனுமணங்கனாளும்வே
றியாமமும்பகலுமோரீறின்றென்னலாய்த்
தாமுறுபெருங்களிச்சலதிமூழ்கினார். 28

23. வரையிரண்டு - தனங்கள், பிறந்தநஞ்சு சேல்கெண், வழித்தீ என்றது கூந்தலை, இருபிறை என்றது வளைந்தவெயிற்றை, கடலென்றது உருவத்தை, இருபிறைசெறிந்தெழுகடலென்றது இல் பொருளுவமை.

24. ஆடவர்பெண்மையை யவாவுந்தோளினாயென்றார். முற்றத்துறந்த முனிவரும் இவள் அழகிற்சாலவசைந்து துயருண்டமையை.

பற்பலநாட்செலீஇப்பதுமைபோன்றொளிர்
பொற்பினாள்வயிற்றிடைப்புவனமேங்கிட
வெற்பணிபுயத்துமாரீசனும்விறன்
மற்பொருசுவாகுவும்வந்துதோன்றினார். 29

மாயமும்வஞ்சமும்வரம்பிலாற்றலும்
தாயினும்பழகினார்தமக்குநேர்வொணா
தாயவர்வளர்வுழியவரையீன்றவக்
காய்சினத்தியக்கனுங்களிப்பின்மேன்மையான். 30

புணாகடமை;
மோதுறுகடலெலாமொருகைமொண்டிடு
மாதவனுறைவிடமதனின்வந்துநீள்
பாதவமனைத்தையும்பறித்துவீசினான். 31

விழைவுறுமாதவம்வெஃகினோர்விரும்
புழைகலையிரலையையுயிருண்டோங்கிய
வழைமுதன்மரனெலாமடிப்பமாதவன்
தழலெழவிழித்தனன்சாம்பராயினான். 32

மற்றவன்விளிந்தமைமைந்தர்தம்மொடும்
பொற்றொடிகேட்டுவெங்கனலிற்பொங்குரு
முற்றுறமுடிக்குவென்முனியையென்றெழா
நற்றவனுறைவிடமதனைநண்ணினான். 33

இடியொடுமடங்கலும்வளியுமேங்கிடக்
கடிகெடவமரர்கள்கதிருமுட்குறத்
தடியுடைமுகிற்குலஞ்சலிப்பவண்டமும்
வெடிபடவதிர்த்தெதிர்விளித்துமண்டவே. 34

தமிழெனுமளப்பருஞ்சலதிதந்தவன்
உமிழ்கனல்விழிவழியொழுகவுங்கரித்
தழிவனசெய்தலாலரக்கராகியே
இழிகெனவுரைத்தனனசனியெஞ்சவே. 35

வெருக்கொளவுலகையும்விண்ணுளோரையும்
முருக்கியெவ்வுயிருமுண்டுழலுமூர்க்கராம்

32. பதுமா என்றது பதுமை என நின்றது, ஈண்டு திருமகள்.

34. மாதவனென்றதும் தமிழெனுமளப்பருஞ்சலதிதந்தவன் என்றதும் அகத்தியனாரை.

அரக்கர்களாயினரக்கணத்தினில்
உருக்கியசெம்பெனவுமிழ்கண்ணினர். 36

ஆங்கவன்வெருளியுற்றறைந்தசாபமுந்
தாங்கினரெதிர்செயுந்தருக்கிலாமையி
னீங்கினர்சுமாலியைநேர்ந்துநிற்கியாம்
ஓங்கியபுதல்வரென்றுறவுகூர்ந்தனர். 37

அவனொடும்பாதலத்தனைநாட்செலீஇத்
தவனுறுதசமுகன்றனக்குமாதுலர்
இவரெனப்புடைத்தழித்துலகமெங்கணும்
பவனனிற்றிரிகுநர்பதகிமைந்தர்கள். 38

மிகுந்திறன்மைந்தரேவேறுநீங்குறுந்
தகுந்தொழின்முனிவரன்சலந்தையுன்னியே
வருந்துவின்வசுவைரிவதிந்ததிவ்வனம்
புகுந்தனளழலெனப்புழுங்குநெஞ்சினாள். 39
மண்ணுருத்தெடுப்பினுங்கடலைவாரினும்
விண்ணுருத்திடிப்பினும்வேண்டிற்செய்கிற்பாள்
எண்ணுருத்தெரிவரும்பாவமீண்டியோர்
பெண்ணுருக்கொண்டெனத்திரியும்பெற்றியாள். 40

பெருவரையிரண்டொடும்பிறங்குகுஞ்சொடும்
உருமுறழ்முழக்கொடுமுழக்கியாடும்
இருபிறைசெறிந்ததுமுகட்டுண்டாமெனின்
வெருவருதோற்றத்தண்மேனிமாறுமே. 41

சூடகவரவுறழ்சூலக்கையினள்
காடுறைவாழ்க்கையாள்கண்ணிற்காண்பரேல்
ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாய்
தாடகையென்பதச்சழக்கிநாமமே. 42

உளப்பரும்பிணிப்புறுவுலோபமொன்றுமே
அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோல்
கிளப்பருங்கொடுமையரக்கிகேடிலா
வளப்பருமருதத்தைப்பாழித்தாற்றினாள். 43

---

41. தசமுகன் - இராவணன். 42. வருந்து - வழி.

43. உள்ளத்திற் பருமையாகிய பிணிப்படையாத பற்றுள்ள லோபமொன்றே அளவில்லாத நற்குணங்களை யழிக்கும் வண்ணம் போல எனக்கொள்க.

வேறு

இலங்கையரசன்பணியமைந்தொரிடையூறா
விலங்கல்வலிகொண்டெனதுவேள்விநலிகின்றாள்
அலங்கன்முகிலேயவளிவ்வங்கநிலமெங்கும்
குலங்களொடடங்கநனிகொன்றுதிரிகின்றாள்.

முன்னுலகளித்துமுறைநின்றவுயிரெல்லாம்
தன்னுயிரெனக்கருதுதன்மையவன்மைந்த
என்னினியுணர்த்துவதினிச்சிறிதுநாளின்
மன்னுயிரனைத்தையும்வயிற்றினிடுமென்றான்.

அங்கிறைவனப்பரிசுரைப்பவதுகேளா
கொங்குறைநறைக்குலமலர்ச்செனிகுலுக்கா
எங்குறைவதித்தொழிலியற்றுபவளென்றான்
சங்குறைகரத்தொருதனிச்சிலைதரித்தான்.

்களா

டையடைதகமுனியைய
இவ்வரையிருப்பதவளென்பதனின்முன்போர்
மைவரைநெருப்பெரியவந்ததெனவந்தாள். 47

சிலம்புகள்சிலம்பிடைசெறித்தகழலோடு
நிலம்புகமிதித்தனளெளித்தகுழிவேலைச்
சலம்புகவனற்றறுகணந்தகனுமஞ்சிப்
பிலம்புகநிலக்கிரிகள்பின்றொடரவந்தாள். 48

இறைக்கடைதுடித்தபுருவத்தளெயிறென்னும்
பிறைக்கடைபிறங்கிடமடிந்தபிலவாயள்
மறைக்கடையரக்கிவடவைக்கனலிரண்டாய்

49

45. மகனறிவுதந்தையறிவாகலின் நீயுமவ்வாறு செவ்வையென்பர் தன் மையவன்மைந்த எனவுங்கூறினார்.

46. சங்கேந்தியகை வறிதேகிடப்ப அறத்தை நிறுத்தற்பொருட் டசுரரைக்கொல்ல வில்லேந்தி நிற்றலின், சங்குறைகரத்தொரு தனிச்சிலைதரித்தானென்றார்.

49. கரியகடல்போல் மேனியும், அக்கடலில் வடவைத் தீயிரண்டாய் முளைத்தாற்போல் வளைந்த வெயிறுந்தோன்றலின் வடவைக்கனலிரண்டாய் நிறைக்கடன் முளைத்தன என்றார்.

கடங்கலுழ்தடங்களிறுகையொடுகைதெற்றா
வடங்கொளநுடங்குமிடையாண்மறுகிவானோர்
இடங்களுநெடுந்திசையுமேழுலகுமெங்கும்
அடங்கலுநடுங்கவுருமஞ்சவணியார்த்தாள். 50

ஆர்த்தவரைநோக்கிநகைசெய்தவருமஞ்சக்
கூர்த்தநுதிமுத்தலையிற்கொடியகூற்றைப்
பார்த்தெயிறுதின்றுபகுவாய்முழைதிறந்தோர்
வார்த்தையுரைசெய்தனளிடிக்குமழையன்னாள். 51

கடக்கரும்வலத்தெனதுகாவலிதில்யாவும்
கெடக்கருவறுத்தனனினிச்சுவைவிடக்கும்
விடக்கரிதெனக்கருதியோவிதிகொடுந்தப்
படக்கருதியோபகர்மின்வந்தபரிசென்றே. 52

மேகமழையிற்றுகவிழித்தனள்புழுங்கா
மாகவரையற்றுகவுதைத்தனண்மதித்திண்
பாகமெனுமுற்றெயிறதுக்கியயில்பற்றா
ஆகமுறவைத்தெறிவெனென்றெதிரழன்றாள். 53

அண்ணன்முனிவற்கதுகருத்தெனினுமாவி
உண்ணெனவடிக்கணைதொடுக்கிலனுயிர்க்கே
துண்ணெனும்வினைத்தொழிறொடங்கியுளளேனும்
பெண்ணெனமனத்திடைபெருந்தகைநினைந்தான். 54

வேறு

வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றாளை
எறிந்துகொல்வனென்றேற்கவும்பார்க்கிலாச்
செறிந்ததாரவன்சிந்தைக்கருத்தெலாம்
அறிந்துநான்மறையந்தணன்கூறுவான். 55

தீதென்றுள்ளவையாவையுஞ்செய்தமைக்
கோதென்றுண்டிலளித்தனையேகுறை
யாதென்றெண்ணுவதிக்கொடியாளையும்
மாதென்றெண்ணுவதோமனுப்புண்ணியாய். 56

52. விடக்கு - ஊன்.

53. மதித்திண்பாகம் - பிறைக்கோடு.

54. வினைத்தொழில் என்றது ஒருபொருட்பன்மொழி துண்ணெனு மென்ற அடையான் தீத்தொழில் என்பது படுகின்றது. பெருந்தகை - பெருந் தன்மையுடைய இராமனை அன்மொழித்தொகை.

நாண்மையேயுடையார்பிழைத்தார்கரு
வாண்மையேபெற்றவன்றிறலாடவர்
தோண்மையேயிவள்பேர்சொலத்தோற்குமால்

இந்திரன்னிடைந்தானுடைந்தோடினார்
தந்திரம்படத்தானவர்வானவர்
மந்தரம்மிவடோளெனின்மைந்தரோ
டந்தரம்மினியாதுகொலாண்மையே. 58

மன்னர்மன்னவன்காதலமற்றுமொன்
றின்னம்யானுரைக்கின்றதியாதெனின்
முன்னோர்க்காலநிகழ்ந்தமுறைமையீ
தென்னவோதவிற்றான்றவத்தீறிலான். 59

பிருகுவென்னும்பெருந்தவன்றன்மனை
வருகயற்கட்கியாதிவல்லாசுரர்க்
குருகுகாதலுறவுறவாதலே
கருதியாவிகவர்ந்தனனேமியான். 60

வானகந்தனின்மண்ணினின்மன்னுயிர்
போனகந்தனக்கென்றெனும்புந்திய
தானவள்குமதிப்பெயராடனை
யூனொழித்தனன்வச்சிரத்தும்பர்கோன். 61

ஆதலாலரிக்காகண்டலன்றனக்
கோதுகீர்த்தியுடையவல்லாதிடை
எதமென்பனவெய்தியவோசொலாய்
தாதடர்ந்துதயங்கியதாரினாய். 62

கறங்கிடத்திகிரிப்படிகாத்தவர்
பிறங்கடைப்பெரியோய்பெரியோரொடு
மறங்கொடித்தரைமன்னுயிர்மாய்த்துநின்
றறங்கெடுத்தவட்காண்மையும்வேண்டுமோ. 63

---

57. தோண்மை - தோளாற்றலை. வாண்மை - வாட்டொழிற்சிறப்பை.

59. சக்கரவர்த்தித் திருமகனென்றழைப்பது நோக்கி 'மன்னர்மன்னவன்காதல்' என்றார். 60 பிருகுமனைவி கியாதியென்பாள் அசுரர்க்குப் புகலிடந்தந்து மாயோன் சக்கரத்தான் மாண்டாளென்பது. ஆசுரரென்றது நீட்டும் வழி நீட்டல்பெற்றது.

61. போனகம் - உண்டி. குமதி - விரோசனனென்னுமசுரன் மகள்.

அல்லின்மாரியனையநிறத்தவன்
சொல்லுமாத்திரையிற்கடறார்ப்பதோர்
கல்லின்மாரியைக்கைவகுத்தாளது
வில்லின்மாரியின்வீரன்விலக்கினான். 71

ஏக்கமோடவிமயவரெங்கணும்
வாக்கின்முந்துறமாயைவளர்ப்பவள்
மூக்குவார்செவியும்முறைபோயிடத்
தாக்கும்வள்ளலிளவலுந்தாக்கினான். 72

வேறு

சொல்லொக்குங்கடியவேகச்சுடுசரங்கரியசெம்ம
லல்லொக்குநிறத்தினாள்மேல்விடுதலும்வயிரக்குன்ற
கல்லொக்குநெஞ்சிற்றங்காதப்புறங்கழன்றுகல்லாப்
புல்லர்க்குநல்லோர்சொன்னபொருளெனப்போயிற்றன்றே. 73

பொன்னெடுங்குன்றமன்னான்புகர்முகப்பகழியென்னு
மன்னெடுங்காலவன்காற்றடித்தலுமிடித்துவானிற்
கன்னெடுமாரிபெய்யக்கடையுகத்தெழுந்தமேக
மின்னொடுமசனியோடும்வீழ்வதேபோலவீழ்ந்தாள். 74

பொடியுடைக்கானமெங்குங்குருதிநீர்பொங்கவீழ்ந்த
தடியுடையெயிற்றுப்பேழ்வாய்த்தாடகைதலைகடோறு
முடியுடையரக்கற்கண்முந்தியுற்பாதமாகப்
படியிடையற்றுவீழ்ந்தவெற்றியம்பதாகையொத்தாள். 75

கான்றிரிந்தாழியாகத்தாடகைக்கடினமார்பத்
தூன்றியபகழிவாயூடொழுகியகுருதிவெள்ள
மான்றவக்கானமெல்லாமாயினதந்திமாலைத்
தோன்றியசெக்கர்வானந்தொடக்கற்றுவீழ்வதொத்தே. 76

வாசநாண்மலரோனன்னமாமுனிபணிமறுத
காசுலாங்கனகப்பைம்பூட்காகுத்தன்கன்னிப்போரிற்
கூசிவாளரக்கர்தங்கள்குலத்துயிர்குடிக்கவஞ்சி
யாசையாலுழலுங்கூற்றுஞ்சுவைசிறிதறிந்ததன்றே. 77

73. நிறைமொழி என்பதுபற்றிச் சொல்லொக்குமெனச் சுடுசரத்துக்கு உவமைகூறினார். கல்வியறிவில்லாத புல்லறிவுடையார்க்கு நல்லோர் கூறிய உறுதிமொழி சிறிதும் பயன்படாமையின் 'நெஞ்சிற்றங்காதப் புறங்கழன்று புல்லர்க்கு நல்லோர் சொன்னபொரு' ளென்றுவமை முகத்தாற் கூறினார்.

யாமுமெம்மிருக்கைகபெற்றேமுனக்கிடையூறுமில்லை
கோமகற்கினியதெய்வப்படைக்கலங்கொடுத்தியென்று
மாமுனிக்குரைத்துப்பின்னர்விற்கொண்டமழையனான்மேற்
பூமழைபொழிந்துவாழ்த்திவிண்ணவர்போயினாரே. 78

ஆ. திருவிருத்தம் - 419.

## 8-வது வேள்விப்படலம்

விண்ணவர்போயபின்றைவிரிந்தபூமழையாயினாமேல
தண்ணெனுங்கானநீங்கித்தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தனசடையன்வெண்ணெய்
யண்ணறன்சொல்லேபன்னபடைக்கலமருளினானே.

ஆறியவறிஞன்கூறியளித்தலுமண்ணறன்பா
லூறியவுவகையோடுமும்பர்தம்படைகளெல்லாந்
தேறியமனத்தான்செய்தகல்வியைப்பயன்களெல்லா
மாறியபிறப்பிற்றோடிவருவபோல்வந்தவன்றே.

மேவினம்பிரிதலாற்றாதவீரமீதிழியினம்மா
ஏவினசெய்துநிற்றுமிளையவன்போலவென்று
தேவர்தம்படைகள்செப்பச்செவ்விதன்றவத்தோர்ப்
பூவைபோனிறத்தினற்குப்புறத்தொழில்புரிந்தவன்றே.

இனையனநிகழ்ந்தபின்னர்க்காவதமிரண்டுசென்றா
ரனையவர்கேட்கவாண்டோரரவம்வந்துறுதலுந்தான்ற
முனைவவீதியாவதென்றுமுன்னவன்வினவப்பின்னர்
வினையறநோற்றுநின்றமேலவன்விளம்பலுற்றான்.

மானசமடுவிற்றோன்றிவருதலாற்சரயுவென்றே
மேன்முறையமரர்போற்றும்விழுமியநதியேறு
மானகோமதிவந்தெய்துமாவமதென்னவப்பாற்
போனபின்பவங்கடீர்க்கும்புனிதமாநதியையுற்றார். 5

---

78. இந்திரவில்லொடுதோன்று மேகம்போலெய்தியமை நோக்கி 'விற்கொண்ட மழையனா' னென்றார்.

3. காயாம்பூவையொத்த நிறத்தனாதலின் 'பூவைபோனிறத்தினா' னென்றார்.

சுரர்தொழுதிறைஞ்சற்கொத்ததூநதியாவதென்று
வரமுனிதன்னையண்ணல்வினவுறமலருள்வைகும்
பிரமனன்றளித்தவென்றிப்பெருந்தகைக்குசனென்றோது
மரசர்கோன்மனைவிதன்பாலளித்தவர்நால்வராகும்.

குசன்குசநாபன்கோதில்குணத்தினதூர்த்தன்கொற்றத்
திசைகெழுவசுவென்றோதுமிவர்பெயரிவர்கட்டமிற்
குசன்கவுசாம்பிநாபன்குளிர்மகோதயமாதூர்த்தன்
வசையிறன்மவனமற்றைவசுகிரிவிரசம்வாழ்ந்தார்.

அவர்களிற்குசநாபற்கேயையிருபதின்மரஞ்சொற்

லிவர்பொழிற்றலைக்கணாயத்தெய்துழிவாயுவெய்திக்
கலர்மனத்தனாயங்கக்கன்னியர்தம்மைநோக்கி. 8

கொடித்தனிமகரங்கொண்டோன்குனிசிலைச்சரத்தானொந்தேன்
வடித்தடங்கண்ணீரென்னைமனத்திரென்றுரைப்பவெந்தை
யடித்தலத்துரைத்துநீரோடளித்திடினணைதுமென்ன
ஒடித்தனன்வெரிநைவீழ்ந்தாரொளிவளைமகளிரெல்லாம். 9

சமிரணனகன்றபின்னர்தையலார்தவழ்ந்துசென்றே
யமிர்துகுகுதலைமாழ்கியரசன்மாட்டுரைப்பவன்னா
னிமிர்குழன்மடவார்த்தேற்றிநிறைதவன்ருளிநல்குந்
திமிரறுபிரமதத்தற்களித்தனன்றிருவனாரை. 10

அவன்மலர்க்கைகடீண்டக்கூனிமிர்ந்தழகுவாய்ந்தார்
புவனமுற்றுடையகோவும்புதல்வரில்லாமைவேள்வி
தவர்களிற்புரிதலோடுந்தகையுறத்தழலினாப்பட்
கவனமேவகத்துரங்கக்காதிவந்துதயஞ்செய்தான். 11

அன்னவன்றனக்குவேந்தனரசொடுமுடியுமீந்து
பொன்னகரடைந்தபின்னர்ப்புகழ்மகோதயத்தில்வாழு
மன்னவன்காதிக்கியானுங்கவுசிகியென்னுமாது
முன்னர்வந்துதிப்பவந்தமுடியுடைவேந்தர்வேந்தன். 12

பிருகுவின்மதலையாயபெருந்தகைப்பிதாவுமொவ்வா
விரிசிகனென்பவற்குமெல்லியலாளையீந்தா
னருமறையவனுஞ்சின்னாளறம்பொருளின்பமுற்றி
விரிமலர்த்தவிசோன்றன்பால்விழுத்தவம்புரிந்துமீண்டான். 13

6. வரமுனி - கோசிகன். 9 கொடித்தனிமகரங்கொண்டோன் - மன்மதன்.

காதலன்சேணினீங்கக்கவுசிகனிக்கலாற்றான்
மீதுறப்படரலுற்றாள்விழுந்திவடிவமாகி
மாதவர்க்கரசுநோக்கிமாநிலத்தாறுகணீக்கப்
போதுகநதியாயென்னாப்பூமகனுலகுபுக்கான். 14

எமமுணை [illegible] யாயிறும்மேளன
றம்முனிபுகலக்கேளாவதிசயமிகவுந்தோன்றச்
செம்மனுமிளையகோவுஞ்சிறிதிடந்தீர்ந்தபின்னர்
மைம்மலிபொழில்யாதென்னமாதவன்கூறலுற்றான். 15

தங்கணாயகனிற்றெய்வந்தான்பிறிதில்லென்றுன்னு
மங்கைமார்சிந்தைபோலத்தூயதுமற்றுங்கேளா
யெங்கணான்மறைக்குந்தேவரறிவிற்கும்பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்துமேனாட்செய்தவஞ்செய்ததன்றே. 16

பாரின்பால்விசும்பின்பாலும்பற்றறப்படிப்பதன்னான்
பேரென்பானவன்செய்மாயப்பெரும்பிணக்கொருங்குதீர்வா
ராரென்பானமலமூர்த்திகருதியதறிந்தேற்றா
மீரைம்பானூழிக்காலமிருந்தவமியற்றியிட்டான். 17

வேறு

ஆனவனிங்குறைகின்றவந்நாள்வா
யூனமின்ஞாலமொடுங்குடிபாலிற்றா
னேனமெனுந்திறன்மாவலியென்பான்
வானமும்வையமுமாட்செலுத்தல்செய்தான். 18

செய்தவம்வானவருஞ்செயலாற்றா
றெய்தவழ்வேள்வியைமுற்றிடுகின்றா
னையமில்சிந்தையனந்தணர்தம்பால்
வையமும்யாவும்வழங்கவலித்தான். 19

ஆயதறிந்தனர்வானவரந்நாண்
மாயனைவந்துவணங்கியிரந்தார்
தீயவன்வெந்தொழிற்கெனநின்றார்
நாயகனும்மதுசெய்யநயந்தான். 20

காலநுனித்துணர்காசிபனென்னும்
வாலறிவற்கதிதிக்கொருமகவாய்
நீலநிறத்துநெடுந்தகைவந்தோ
ராலமர்வித்தினொருங்குறளானான். 21

21. ஆலமர்வித்தினொருங்குறளானான் - ஆலின் சிறுவித்துப்போலச் சிறு குறள்வடிவமானான் என்றதென்க. அதன் வித்து மிகச்சிறியதேனும் யானை,

முப்புரிநூலினன்முஞ்சியன்விஞ்சை
கற்பதோர்நாவனனற்படுகையா
னற்புதனற்புதரேயறியுந்தன்
சிற்பதமொப்பதோர்மெய்க்கொடுசென்றான்.

அன்றவன்வந்ததறிந்துலகெல்லாம்
வென்றவன்முந்தியெதிர்கொண்டா

யென்றனினுய்ந்தவர்யாருளரென்றான்.

ஆண்டகையவ்வகைகூறவறிந்தோன்
வேண்டினர்வேட்கையின்மேற்படவீசி
நீண்டகையாயினிநின்னுழைவந்தோர்
மாண்டவரல்லவர்மாண்பிலரென்றான்.

சிந்தையுவந்தெதிரென்செயவென்றா
னந்தணன்மூவடிமண்ணருளுண்டேல்
வெந்திறலாயிதுவேண்டுமெனாமுன்
றந்தனனென்றனன்வெள்ளிதடுத்தான்.

கண்டதிறந்துதுணைதவமைய
கொண்டனிறக்குறளென்பதுகொள்ளே
லண்டமுமுற்றுமகண்டமுமேனா
ளுண்டவனாமிதுணர்ந்துகொளென்றான்.

நினைக்கிலையென்கைநிமிர்ந்திடவந்து

ரில்

தேர், குதிரை, காலாள் என்னு நால்வகைப் படைக்குந் தங்கநிழல் பயப்பது போல முன்னர்ச் சிறுகுறளாகச்சென்று பின் நீண்டமையினவ்வா றுவமை கூறினார். அமர் - சிறுமை, இதனை 'அமர்மெய்யுடையவன்றான்' என்றிவ் வாசிரியர் கூறுதலுங்காண்க.

22. மெய்யுணர்ச்சியுடையாராற் காணப்படுபவனாகலின் 'அற்புதரேயறியு' மென்றும், அவர்க்குத்தான் இறப்ப நுண்ணிய ஞானத்திருமேனி காட்டலின் 'சிற்பதமொப்பதோர் மெய்க்கொடுசென்றான்' என்றுங்கூறினார்.

24. ஈகைக்குணமுடைமையிற் சிறந்தோனாகலின் நீண்டகையாவென்றும், நின்னுழையிரந்தார் மாட்சிமையுடையாராகலின் 'மாண்டவ' ரென்றும், அல்லாதாரன்னரல்லராகலின், 'அல்லவர்மாண்பில' ரென்றுங்கூறினார்.

26. உலகமுண்ட பெருவாயனாகலின் 'அண்டமுமுற்று மகண்டமு மேனாளுண்டவ' னென்றதென்க.

கனக்கரியானதுகைந்தலமென்னி
னெனக்கிதன்மேனலம்யாதுகொலென்றான். 27

துன்னினர்துன்னலரென்பதுசொல்லார்
முன்னியநன்னெறி நூலவர்முன்வந்
துன்னியதானமுயர்ந்தவர்கொள்க
வென்னினிவன்றணையாவருயர்ந்தார். 28

வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்
வள்ளியராகவழங்குவதல்லா
லெள்ளுவவென்சிலவின்னுயிரேனும்
கொள்ளுதறீதுகொடுப்பதுநன்றால். 29

மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா
தேந்தியகைகொடிரந்தவரெந்தாய்
வீந்தவரென்பவர்வீந்தவரேனு
மீந்தவரல்லதிருந்தவர்யாரே. 30

அடுப்பவரும்பழிசெய்ஞ்ஞருமல்லர்
கொடுப்பவர்முன்புகொடேலெனநின்று
தடுப்பவரேபகைதம்மையுமன்னார்
கெடுப்பவரன்னதொர்கேடிலையென்றான். 31

கட்டுரையிற்றமைந்துளபோழ்தே
இட்டிசைகொண்டறனொப்புறவென்றோ
ருட்கெடுவெம்பகையாவதுலோபம்
விட்டிடலென்றுவிலக்கினர்தாமே. 32

வேறு

எடுத்தொருவருக்கொருவரீவதனின்முன்னந்
தடுப்பதுநினக்கழகிதோதகவில்வெள்ளி

27. கனக்கரியான் - மேகம்போலுங் கரியமேனியன்.

28. தக்குழியீதலே நன்றென்பதுபற்றி 'உன்னியதான முயர்ந்தவர் கொள்க' என்றார்.

29. வெள்ளியை வெள்ளியென்னும் பெயரையுடைய எனவும், வெள்ளறிவையுடைய எனவு மிருபொருள்படநின்றது நேரே ஆசிரியனாகலின் சிலேடையாகக் கூறினான். கொள்ளுதல்தீது கொடுப்பது நன்று என்பதனை 'நல்லாறெனினுங் கொளறீது மேலுலகமில்லெனினு மீதலே நன்று' என்ற குறட்பொருளை யுட்கொண்டது.

30. செத்தாரின் வேறல்லாராதலின் 'ஏந்தியகைகொ டிரந்தவர் வீந்தவ'ரென்றும் புகழுடம்போ டழியாதிருப்பது கருதி 'வீய்ந்தவரேனும் ஈந்தவரல்ல திருந்தவர்யாரே' யென்றுங் கூறினார்.

32. உலோபம் - ஒருவர்க்கிருக்கினிருமையும் கெடுக்குமாயுதமென்க.

கொடுப்பதுவிலக்குகொடியோயுனதுசுற்ற
முடுப்பதுவுமுண்பதுவுமின்றிவிடுகின்றாய்.

வேறு

முடியவிம்மொழியெலாமொழிந்துமந்திரி
கொடியனென்றுரைத்தசொலொன்றுங்கொண்டில
னடியொருமூன்றுநீயளந்துகொள்கென
நெடியவன்குறியகைநீரினீட்டினான்.

மறிபடவாமனன்மலர்க்கைத்தர்ப்பையாற்
செறிவதுநீக்கிடச்சிதைந்துகண்ணுடைந்
தறுதுயர்க்கடலிடையொதுங்கிப்போயினான். 35

கயந்தருநறும்புனல்கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ்குறளன்பார்த்தெதிர்
வியர்ந்தவர்வெருக்கொளவிசும்பினோங்கினா
னுயர்ந்தவர்க்குதவியவுதவியொப்பவே. 36

நின்றதாண்மண்ணெலாநிரப்பியப்புறஞ்
சென்றுபாவிற்றிலைசிறிதுபாரெனா
ஒன்றவானகமெலாமொடுக்கியும்பரை
வென்றதாண்மீண்டதுவெளிபெறாமையே. 37

உலகெலாமுள்ளடியடக்கியோரடிக்
கலகிலாதவ்வடிக்கன்பன்மெய்யதா
மிலைகுலாந்துழாய்முடியேகநாயகன்
சிலைகுலாந்தோளினாய்சிறியன்சாலவே. 38

ஊரியதிந்திரற்கிதென்றுலகமீந்துபோய்
விரிதிரைப்பாற்கடற்பள்ளிமேவினான்
கரியவனுலகெலாங்கடந்ததாளிணை
திருமகள்கரந்தொடச்சிவந்துகாட்டவே. 39

ஆதலாலருவினையறுக்குமாரிய
காதலாற்கண்டவர்பிறவிகாண்குறார்
வேதநான்முறைமையால்வேள்விமுற்றுவேற்
கீதலாதில்லைவேறிருக்கற்பாலதே. 40

ஈண்டிருந்தியற்றுவென்யாகம்யானெனா
நீண்டபூம்பழுவத்துநெறியினெய்திப்பின்

---

33. கொடுப்பதுவிலக்கு கொடியோயென்பதனை ‘கெடுப்ப தழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ முண்பதூஉ மின்றிக்கெடும்’ என்பதனானறிக.

35. புதுப்புனலென்றது கருதி ‘கயந்தருநறும்புன’ லென்றார்.

கண்டவக்குமரனுங்கடைக்கண்டீயூக
விண்டனைநோக்கித்தன்வில்லீ
அண்டர்நாயகவினிகாண்டியீண்டவர்
ரன.

தூமவேலரக்கர்தந்நிணமுஞ்சோரியும்
ஓமவெங்கனலிடையுகுமென்றன்னியத்
தாமரைக்கண்ணனுஞ்சரங்களேகொடு
கோமுனியிருக்கையேோர்கூடமாக்கினன்.

நஞ்சடவெழுதலுநடுங்கினாண்மதிச்
செஞ்சடைக்கடவுளையடையுந்தேவர்போல்
வஞ்சனையரக்கரைவெருவிமாதவர்
அஞ்சனவண்ணநின்னபயம்யாமென்றார்.

கவித்தனன்கரதலங்கலங்கனீரெனச்
செவித்தலநிறுத்தினன்சிலையின்றெய்வநாண்
புவித்தலங்குருதியின்புணரியாக்கினன்
ரத்தின்குன்றமே. 51

வெருவருதாடகைபயந்தவீரர்கள்
இருவரினொருவனைக்கடலினிட்டதங்
கொருவனையந்தகன்புரத்தினுய்த்ததே. 52

துணர்த்தபூந்தொடையலான்பகழிதூவினன்
கணத்திடைவிசும்பினைக்கவித்துத்தூர்த்தலாற்
பிணத்திடைநடந்திவர்பிடிப்பரீண்டென
வுணர்த்தினரொருவர்முன்னொருவரோடினார். 53

ஓடினவரக்கரையுருமின்வெங்கணை
கூடினகுறைத்தலைமிறைத்துக்கூத்துநின்
றாடினவலகையுமையன்கீர்த்தியைப்
பாடினபறந்தனபறவைப்பந்தரே. 54

52. காந்தருவக்கணை - அக்கினிக்கணை, வாயுக்கணை, இவற்றை முறையே சுபாகு, மாரீசன், இவரையொழித்தற்கு அரக்கர்மேல் விடுத்தலைக்காண்க.

54. குறைத்தலை - கவந்தம்.

ஙகா

கொதிக்கும்வெம்மையையாற்றுவான்போற்கடற்குளித்தான்.
கறங்குதண்புனற்கடிநெடுந்தாளுடைக்கமலத்
தறங்கொளுண்மலர்க்கோயில்களிதழ்க்கதவடைப்பப்
பிறங்குதாமரைவனம்விட்டுப்பெடையொடுகளிவண்
டுறங்குகின்றதோர்நறுமலர்ச்சோலைபுக்குறைந்தார்.
இனையசோலைமற்றியாதெனவிராகவன்வினவ
வினையெலாமறநோற்றவன்விளம்புவான்மேனாள்

மனையுளாடவம்புரிந்தனளிவணெனவலித்தான்.
அண்டகோளகைக்கப்புறத்தென்னையாளுடைய
கொண்டனீள்பதத்தெய்தியோர்விஞ்சையர்கோதை
புண்டரீகமென்பதத்தினைப்புகழ்ந்தனள்புகழ
வண்டறுமதுமாலைகைக்கொடுத்தனண்மகிழ்ந்து.
அன்னமாலையையாழிடைப்பிணித்தயனுலகங்
கன்னிமீடலுங்கசட்டுறுமுனியெதிர்காணு
என்னையாளுடைநாயகிக்கிசையெடுப்பவளென்
றன்னடாளிணைவணங்கிநின்றேத்தலுமனையாள்.
உலகம்யாவையும்படைத்தளித்துண்டுமிழொருவன்
இலகுமார்பகத்திருந்துயிர்யாவையுமீன்ற
திலகவாணுதல்சென்னியிற்சூடியதெரியல்
அலகின்மாமுனிபெறுகெனவளித்தனளளியால்.
தெய்வநாயகிசென்னியிற்சூடியதெரியல்
ஐயயான்பெறப்புரிந்ததெத்தவமெனவாடி
வெய்யமாமுனிசென்னியிற்சூடியேவினைபோய்
உய்யுமாறிதென்றுவந்துவந்தும்பர்நாடடைந்தான்.
பெய்யுமாமுகில்வெள்ளியம்பிறங்கன்மீப்பிறழுஞ்
செய்யதாமரையாயிரமலர்ந்துசெங்கதிரின்
மொய்யசோதியைமிலைச்சியமுறைநமைபோன்றொளிரு
மெய்யினேடையிராவதக்களிற்றின்மேல்விளங்க.

3. அவ்வப்பருவங்களின்மலரு மியல்புநோக்கி 'அறங்கொளுண்மல' ரென்றார்.

5. நீள்பதம் - அந்தமிலின்பவீடு. 6. கசட்டுறுமுனி, வெய்யமாமுனி, வெஞ்சொன்மாமுனி, மறநிலாமுனி, தனையொவாதவன, கொடியோன் எனக் கூறின - துருவாசனை என்க.

அரமடந்தையர்கற்பகநவநிதியமிர்தச்
சுரபிவாம்பரிமதமலைமுதலியதொடக்கற்
றொருபெரும்பொருளின்றியேயுள்ளனவெல்லாம்
வெருவியோடிப்புக்கொளித்தனவிரிதிரைக்கடலின். 18

வெய்யமாமுனிவெகுளியால்விண்ணகமுதலாம்
வையமியாவையும்வறுமைநோய்நலிதரவானோர்
தையல்பாகனுஞ்சதுமுகக்கடவுளுங்கூடிச்
செய்யதாமரைத்திருமறுபார்பனைச்சேர்ந்தார். 19

வெஞ்சொன்மாமுனிவெகுளியால்விளைந்தமைவிளம்பிக்
கஞ்சநாண்மலர்க்கிழவனுங்கடவுளர்பிறரும்
தஞ்சமில்லைநின்சரணமேசரணெனச்சலியா
தஞ்சலஞ்சலென்றுரைத்தனனுலகெலாமளந்தோன். 20

மத்துமந்தரம்வாசுகிகடைகயிறடைதூண்
மெத்துச்சந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ள
கொத்திரண்டுபால்வலிப்பவரோடதிகொடுத்துக்
கத்துவாரிதிமறுகுறவமிழ்தெழக்கடைமின். 21

யாமுமவ்வயின்வருதுநீர்கதுமெனவெழுந்து
போமினென்றருள்புரிதலுமிறைஞ்சினர்புகழ்ந்தார்
நாமமின்றெனக்குனித்தனர்நல்குரவொழிந்த
தாமெனும்பெருங்களிதுளக்குறுதலாலமரர். 22

மலைபிடுங்கினர்வாசுகிபிணித்தனர்மதியை
நிலைபெறும்படிநட்டனரோதிடநிறைத்தார்
அலைபெறும்படிபயோததிகடைந்தனரவனி
நிலைதளர்ந்திடவனந்தனுங்கீழறநெளித்தான். 23

திறல்கொளாமையாய்முதுகினில்மந்தரந்திரிய
விறல்கொளாயிரந்தடக்கைகள்பரப்பிமீவலிப்ப
மறனிலாமுனிவெகுளியின்மடிந்தனவரவே
அறனிலாமனத்தடையலாகெடுந்தகையமைத்தான். 24

18. சுரபி - காமதேனு. வாம்பரி என்றது - உச்சைச் சிரவத்தை, மத மலை ஐராவதம்.

22. நாம் — அச்சம் அது அம்மு முச்சாரியை பெற்றது.

24. அறன் இலாமனத்து அடையலா நெடுந்தகை என்றது திருமாலை அறன் நில்லாமனத்தெனக் கோடலுமமையும்.

இறந்துநீங்கினயானைவயுமெம்பிரானருளாற்
பிறந்தவவ்வயிற்சுராசுரர்தங்களிற்பிணங்கச்
சிறந்தமோகினிமடந்தையாலவுணர்தஞ்செய்கை
துறந்துமாண்டனராரமிர்தமரர்கள்துய்த்தார். 25

வெருவுமாலமும்பிறையும்வெள்விடையமர்ந்தோற்கு
தருவும்வேறுளதகைமையுஞ்சுரபதிக்கருளி
மருவுதொல்பெருவளங்களும்பெறவையுங்கீழ்த்
திருவுமாரமுமணிந்தனன்றிருமார்பத்தில். 26

அந்தவேலையிற்றிதிபெருந்துயருழந்தழிவாள்
வந்துகாசிபனமலரடிவணங்கியென்மைந்தர்
யிந்திராதியர்புணர்ப்பினலிறந்தனரெனக்கோர்
மைந்தனீயருளவர்தமைமடிக்கத்தகுங்கென்றாள். 27

என்றுகூறலுமகவுனக்களித்தனமினிநீ
சென்றுபாரிடைப்பருவமோராயிரந்திர
நின்றுமாதவம்புரிதியேலினையுறுந்திறலோன்
றிடப்புரிந்தனனருந்தவமுனியாளன். 28

கேட்டவாசவனன்னவட்கழுமையிற்கிடந்து
வாட்டமாதவத்துணர்ந்தவள்வயிற்றுறுமகவை
வீட்டியேயெழுகூறுசெய்திடத்துயர்விம்மி
நாட்டநீர்தரமருத்தெனநாமமுநவின்றான். 29

ஆயதிவ்விடமவ்விடமவிர்மதியணிந்த
தூயவன்றனக்குமைவயிற்றோன்றியதொல்லை
வாயுவும்புனற்கங்கையும்பொறுக்கலாவலத்த
சேய்வளர்ந்தருள்சரவணமென்பதுந்தெரித்தான். 30

காலன்மேனியிற்கருகிருள்கடிந்துலகளிப்பா
னீலவார்கலித்தேரொடுநிறைகதிர்க்கடவுள்
மாலின்மாமணியுந்தியினயனொடுவந்த
மூலதாமரைமுழுமலர்முளைத்தெனமுளைத்தான். 31

26. வேறுளதகைமையுமென்றது சிந்தாமணி காமதேனு அமுதம் ஐராவத முதலியனவெனக.

28. பருவம் - ஆண்டு. 30. அரிவை ஈன்ற மலையரையன்மகள். சேய் - முருகன்.

அங்குநின்றெழுந்தயன்முதன்மூவருமனையார்
செங்கணேற்றவன்செறிசடைப்பழுவத்தினிறைதேன்
பொங்குகொன்றையீர்த்தொழுகலாற்பொன்னியைப்பொருவுங்
கங்கையென்னுமக்கரைபொருதிருநதிகண்டார். 32

இந்தமாநதிக்குற்றுள தகைமையயாவும்
எந்தைகூறுகென்றிராகவன்வினவுறவெனையாண்
மைந்தநின்றிருமரபுளானயோத்திமாநகர்வாழ்
விந்தைசேர்புயன்சகரனிம்மேதினிபுரந்தோன். 33

விறல்கொள்வேந்தனுக்குரியவரிருவரில்விதர்ப்பை
பொறையினல்கியவசமஞ்சற்கஞ்சுமான்புதல்வன்
பறவைவேந்தனுக்கிளையமென்சுமதிமுற்பயந்த
அறனின்மைந்தர்களறுபதினாயிரர்வலத்தார். 34

திண்டிறற்புனைசகரனுந்தனையர்சேவகந்நான்
கண்டுமுற்றியவயமகம்புரிதலுங்கனன்று

ஒண்டிறற்பரிகபிலனதிடையினிலொளித்தான். 35

வாவுவாசிபின்சென்றனனஞ்சுமான்மறுகிப்
பூவினோரிடமின்றியேநாடினன்புகுந்து
தேவர்கோமகன்கரந்தமையறிந்திலன்றிகைத்து
மேவுதாதைதன்றாதைபாலுரைத்தனன்மீண்டு. 36

கேட்டவேந்தனுமதலையர்க்கம்மொழிகிளத்தி
வாட்டமீக்கொளச்சகரர்கள்வடவையின்மறுகி
நாட்டம்வெங்கனல்பொழிதரநானிலந்தடவித்
தோட்டுநுங்கினர்புவியினைப்பாதலந்தோன்ற. 37

நூறியோசனையகலமுமாழமுநுடங்கக்
கூறுசெய்தனரென்பரால்வடகுணதிசையின்
ஏறுமாதவக்கபிலன்பினிவுளிகண்டெரியிற்
னர்நெருக்கி

32. பழுவம் - காடு. பொன்னியைப்பொருவுங் கங்கை என்றார். கங்கையிற் புனிதமாய காவிரி எனப் பெரியாரும் பணித்தலினென்க.

35. அயமகம்-பரிமேதகம், கபிலனதிடையினில் எனவருபின் மேனுருபு வந்தமையை 'நிலவார் நிலமிசைமேல்' எனவருதலானுமமைத்துக்கொள்க. அயம் - குதிரை,மேதம் - கொலை.

36. தாதைதன்றாதையென்றது சகரனை. 37. நுங்குதல் - விழுங்குதல்.

மூளும்வெஞ்சினத்தருந்தவன்முனிந்தெரிவிழிப்பப்
பூளைசூடிதன்கையினிலெயில்பொடித்தனபோல்
ஆளுமைந்தராறுபதருஞ்சாம்பராயவிந்தார்
வேள்விகொண்டநல்வேந்தனுக்குரைத்தனர்வேய்கள். 39

உழைத்துவெந்துயர்க்கீறுகாண்கிலனுணர்வொழியா
தழைத்துமைந்தன்றன்மைந்தனையவர்கழிந்தனரேல்
இழைத்தவேள்வியின்றிறப்பரிதாவெனவவனெழுந்து
தழைத்தமாதவக்கபிலன்வாழ்பாதலஞ்சார்ந்தான். 40

விண்டுநீங்கினருடனுகுபிறங்கல்வெண்ணீறு
கண்டுதுண்ணெனுமனத்தினன்கபிலமுனிதன்
புண்டரீகமென்றாடொழுதெழுந்தனன்புகழக்
கொண்டுபோகுநின்னியமரியென்றுற்றதுங்குறித்தான். 41

பழுதிலாதவனுரைத்தசொற்கேட்டனும்பரிவாற்
தொழுதுவாம்பரிகொணர்ந்தவிசரர்களுநக்கியா
முழுதும்வேள்வியைமுற்றுவித்தரசனுமுடித்தான்
எழுதுகீர்த்தியாய்மைந்தனுக்கரசியமீந்து. 42

சகரர்தொட்டலாற்சாகரமெனப்பெயர்தழைப்ப
மகரவாரிதிசிறந்ததாமகிதலமுழுது
நிகரின்மைந்தனேபுரந்தனனிவனெடுமரபிற்
பகிரதனெனும்பார்த்திபன்வந்தனன்பரிவால். 43

உலகம்யாவையும்பொதுவறத்திகிரியையுருட்டி
இலகுமன்னவனிருந்துழியிறந்தனவினவை
அலகிறென்முனியிறந்தனவுரைத்திடவரசன்
திலகமண்ணுறவணங்கிநின்றொருமொழிசெப்பும். 44

கொடியமாமுனிவெகுளியின்மடிந்தவெங்குரவர்
முடியநீணிரயத்தினிலழுந்திடுமுறைமை
கடியுமாறெனக்கருந்தவமதற்குறுகருமம்
அடிகள்சொற்றுகவென்றனுமந்தணனறைவான். 45

---

39. பூளைசூடி தன்கையினி லெயில்பொடித்தனபோல் - சிவபிரானது நகையாற் புரம்பொடிபடுத்தமைபோல்.

42. முற்றத்துறந்தமுனிவரும் விரும்புபுகழினையுடையனாகலின், இராமனை எழுதுகீர்த்தியாயென்றார்.

45. கொடியமாமுனி ஈண்டு கபிலர்.

வையமாளுடைமன்னவர்மன்னவமடிந்தோர்
உய்யநீடவமொழிவறுபகலெலாமொருங்கே
செய்யநாண்மலர்க்கிழவனைநோக்கிநீசெய்தி
நையலென்றினிதுரைத்தனனவையறுமுனிவன். 46

ஞாலம்யாவையுஞ்சுமந்திரன்றன்வயினல்கிக்
கோலுமாதவத்திமகிரிமருங்கினிற்குறுகிக்
காலமோர்பதினாயிரமருந்தவங்கழிப்ப
மூலதாமரைமுழுமுதற்கிழவன்முந்தினனே. 47

நின்பெருந்தவம்வியந்தனனினைதுநீள்குரவர்
முன்பிறந்தனரருந்தவன்முனிவினாதலினான்
மன்பெரும்புவியதனில்வானதிகடிதணுகி
என்புதோயுமேலிருங்கதிபெறுவரென்றிசைத்தான். 48

மாகநன்னதிபுவியிடைவருகின்மற்றவடன்
வேகமாற்றுதல்கண்ணுதற்கன்றிவேறரிதால்
தோகைபாகனைநோக்கிநீயருந்தவத்தொடங்கென்
றேகினானுலகனைத்துமெவ்வுயிர்களுமீந்தான். 49

மங்கைபாகனைநோக்கிமுன்மொழிந்தனவருடந்
தங்குமாதவம்புரிதலுந்தழனிறக்கடவுள்
அங்குவந்துநின்கருத்தினைமுடித்துமென்றகன்றான்
கங்கையைத்தொழக்காலமையாயிரங்கழித்தான். 50

ஒருமடக்கொடியாகிவந்துனதுமாதவமென்
பொருபுனற்கொடிவரினவள்வேகமார்பொறுப்பார்
அரனுரைத்தசொல்வினோதமற்றின்னுநீயறிந்து
பெருகுநற்றவம்புரியெனவரநதிபெயர்ந்தாள். 51

கரந்தைமத்தமோடெருக்கலர்கூவிளைகடுக்கை
நிரந்தபொற்சடைநின்மலக்கொழுந்தினைநினையா
வரந்தையுற்றவனிரண்டரையாயிரமாண்டு
புரிந்துநற்றவம்பொலிதரவரைமகள்புனிதன். 52

எதிர்ந்துநின்னினைவென்னெனவிறைஞ்சியெம்பெரும
வதிர்ந்துகங்கையீதறைந்தனனென்றலுமஞ்சல்
பிதிர்ந்திடாவகைகாத்துமென்றேகியபின்னை
முதிர்ந்தமாதவமிரண்டரையாயிரமுடித்தான். 53

---

50. காலம் — ஈண்டு வருடத்தை.
52. அநாதிமலமுத்தனென்பதுபற்றி நின்மலக்கொழுந்தென்றார்.

பெருகுநீரொடுபூதியும்வாயுவும்பிறங்கு
சருகும்வெங்கதிரொளியையுந்துய்த்துமற்றதையும்
பருகலின்றியுமுப்பதினுயிரம்பருவ
முருகுகாதலின்மன்னவனருந்தவமுயன்றான். 54

உந்தியம்புயத்துதித்தவனுறைதருமுலகும
இந்திராதியருலகமுநடுக்குறவிரைந்து
வந்துதோன்றினள்வரநதிமலைமகள்கொழுநன்
சிந்திடாதொருசடையினிற்கரந்தனன்சேர.

புனனுணர்ந்தருபண்டையனவரந்துபுணர்ந்தன
சென்னியிற்கரந்தொளித்தரவணங்கினன்றிமைந்து
மன்னனிற்றலும்வருந்தனன்சடையன்வானதியின்
றென்னவிட்டனனொருசிறிதவணிபோந்திழிந்தாள். 56

ஏந்தகங்கைமுனமன்னவன்விரைவொடும்மேகக
கழிந்தமன்னவர்கதிபெறமுடுகியகதியால்
அழுந்துமாதவச்சன்னுவின்வேள்வியையழிப்பக்
கொழுந்துவிட்டெரிவெகுளியன்குடங்கையிற்கொள்ளா. 57

உண்டுவந்தனன்மறைமுனிக்கணங்கள்கண்டுவப்ப
கண்டுவேந்தனும்வணங்கிமுன்னிகழ்ந்தனகழறக்
கொண்டுபோகெனச்செவிவழிகொடுத்தனன்குதித்து
விண்டுநீங்கினருடலுகுபொடிபின்மேயினவே. 58

நிரயமுற்றியசகரர்கணெடுங்கதிசெல்ல
விரைமலர்ப்பொழிந்தார்த்தனவிண்ணவர்குழாங்கள்
முரசமுற்றியபல்லியமுறைமுறைமுழங்க
அரசனப்பொழுதணிமதிலயோத்திமீண்டடைந்தான். 59

அண்டகோளகைப்புறத்ததாயகிலமன்றளந்த
புண்டரீகமென்பதத்திடைப்பிறந்துபூமகளோர்
கொண்டதீர்த்தமாயரன்கொளப்பகிரதன்கொணர
மண்டலத்துவந்தடைந்ததிம்மாநதிமைந்த. 60

சகரர்தம்பொருட்டருந்தவம்பெரும்பகறன்னிற்
பகிரதன்கொணர்ந்திடுதலாற்பகிரதியாகி

---

56. காந்தொளிதா - ஒருபொருட்பன்மொழி.
59. நெடுங்கதி - பராங்கதி.

மகிதலத்திடைச்சன்னுவின்செவிவழிவரலால்
நிகரில்சானவியெனப்பெயர்படைத்ததிந்தீர்த்தம்.
என்றுகூறலும்வியப்பினொடுவந்தனரிறைஞ்சிச்

குன்றுபோற்புயத்தரசன்வந்தடியிணைகுறுக
நின்றுநல்லுரைவிளம்பிமற்றவ்வயினீங்கா.

பள்ளிநீங்கியபங்கயப்பழனநன்னாரை
வெள்ளவான்களைகளைவுறுகடைசியர்மிளிர்ந்த
கள்ளவாணெடுங்கண்ணிழல்கயலெனக்கருதா
அள்ளிநாணுறுமகன்பணைமிதிலைநாடடைந்தார்.

வரம்பில்வான்சிறைமதகுகண்முழவொலிவழங்க
வரும்புநாண்மலரசோகங்களலர்விளக்கெடுப்ப
நரம்பினுன்றதேன்றொடைகொணறுமலர்யாழின்
சுரும்புபாண்செயத்தோகைநின்றாடுவசோலை.

பட்டவாணுதன்மடந்தையர்பார்ப்பெனுந்தூதால்
எட்டவாதரித்துழல்பவரிதயங்கள்வெறுப்ப
வட்டநாண்மரைமலரின்மேல்வயலிடைமள்ளர்
கட்டகாவியங்கட்கடைகழிப்பனகழனி.

தூவியன்னந்தனினமென்றுநடைகண்டுதொடருங்
கூவுமென்குயிற்குதலையர்குடைந்ததண்புனல்வாய்
ஓவில்குங்குமச்சுவடுறவொன்றொடொன்றாடிப்
பூவுறங்கினும்புள்ளுறங்காதனபொய்கை.

முறையினின்முதுமேதியின்முலைவழிபாலுந்
துறையினின்றுயர்மாங்கனிதூங்கியசாறும்
அறையுமென்கரும்பாடியவமுதமுமழிதே
நறையுமல்லதுநளிர்புனல்பெருகலாநதிகள்.

இழைக்குநுண்ணிடையிடைதரமுகடுயர்கொங்கை
மழைக்கண்மங்கையரரங்கினில்வயிரியர்முழவ
முழக்குமின்னிசைவெருவியமோட்டிளமேதி
யுழக்கவாளைகள்பாளையிற்குதிப்பனவோடை. 68

65. பாரப்பு - பார்வை. மரை முதற்குறைந்து நின்றது.

66. பூவுறங்கினும் - மலர் குவியினும். பூ என்றது தாமரை மலரை, அது பூவினிற் சிறந்தமைப்பற்றி என்க. பூவென்பது பொறிவாழ்பூவே.

68. மூரி - எருமை.

படைநெடுங்கண்வாளுறைபுகப்படர்புனன்மூழ்கிக்
கடையமுன்கடற்செழுந்திருவெழும்படிகாட்டி
மிடையும்வெள்வளைபுள்ளொடுமொலிப்பமெல்லியலார்
குடையவண்டினங்கடிமலர்குடைவனகுளங்கள். 69

இனையநாட்டினிலினிதுசென்றிஞ்சிசூழ்மிதிலை
புனையுநீள்கொடிப்புரிசையின்புறத்தவந்திறுத்தார்
மனையின்மாட்சியையழித்திழிமாதவப்பன்னி
கனையுமேட்டுயர்கருங்கலோர்வெள்ளிடைக்கண்டார். 70

கண்டகண்மிசைக்காகுத்தன்கழற்றுகள்கதுவ
உண்டபேதைமைமயக்கறவேறுபட்டுருவங்
கொண்டுமெய்யுணர்பவன்கழல்கூடியதொப்பப்
பண்டைவண்ணமாய்நின்றனண்மாமுனிபணிப்பான். 71

வேறு

மாயிருவிசும்பிற்கங்கைமண்மிசையிழித்தோன்மைந்தா
மேயினவுவகையோடுமின்னெனவொதுங்கிநின்றாள்
தீவினைநயந்துசெய்ததேவர்கோன்றனக்குச்செங்கண்
ஆயிரமளித்தோன்பன்னியகலிகையாகுமென்றான். 72

பொன்னையேர்சடையான்கூறக்கேட்டலும்பூமிகேள்வன்
என்னையேயென்னையேயிவ்வுலகியலிருந்தவண்ணம்
முன்னையூழ்வினையினாலோநடுவொன்றுமுடிந்ததுண்டோ
அன்னையேயனையாட்கிவ்வாறடுத்தவாறருளுகென்றான். 73

அவ்வுரையிராமன்கூறவறிஞனுமவனைநோக்கிச்
செவ்வியோய்கேட்டிமேனாள்செறிசுடர்க்குலிசத்தண்ணல்
அவ்வியமவித்தசிந்தைமுனிவனையயற்றநோக்கி
நவ்விபோல்விழியினாடன்வனமுலைநணுகலுற்றான். 74

மையலாணையனவேலுமன்மதன்சரமும்பாய
உய்யலாமுறுதிநாடியுழல்பவனொருநாளுற்ற

---

69. குளங்களின் கண் மாதர் குடையுந்தோறும் விழிப்பதின்மையான் படைநெடுங்கண் வாளுறை புகப்படர்புனன் மூழ்கியென்றும், அதன்கண் மூழ்கி யெழுதலைக்கடையமுன் கடற்செழுந்திரு வெழும்படி காட்டி என்றுங் கூறினார்.

71. பேதைமை மயக்கென்றது அறியாமையாகிய மயக்கத்தை. வேறு பட்டுருவங்கொண்டு - திவ்வியதேகிகளாகி. திவ்யதேகிகள் - நித்யசூரிகள்.

72. மண்மிசை யிழித்தோன் - பகீரதனை.

74. அவ்வியமவித்தசிந்தை முனியென்றது கோதமனை.

மையலாலறிவுநீங்கிமாமுனிக்கற்றஞ்செய்து
பொய்யிலாவுள்ளத்தான்றனுருவமேகொண்டுபுக்கான்.

புக்கவளோடுங்காமப்புதுமணமதுவின்றேறல்
ஒக்கவுண்டிருத்தலோடுமுணர்ந்தனளுணர்ந்தபின்னுந்
தக்கதன்றென்னவோராடாழ்ந்தனளிருப்பத்தாழா

சரந்தருசாபமல்லாற்றடுப்பருஞ்சாபம்வல்ல
வரந்தருமுனிவனெய்தவருதலும்வெருவிமாயா
நிரந்தரமுலகினிற்குநெடும்பழிபூண்டாணின்றாள்
புரந்தரனடுங்கியாங்கோர்பூசையாய்ப்போகலுற்றான்.

தீவிழிசிந்தநோக்கிச்செய்ததையுணர்ந்துசெய்ய
தூயவனவனைநின்கைச்சுடுசரமனையசொல்லால்
ஆயிரமாதர்க்குள்ளவறிகுறியுனக்குண்டாகென்
றேயினனவையெலாம்வந்தியைந்தனவிமைப்பின்முன்னம்.

எல்லையினாணமெய்தியாவர்க்குநகைவந்தெய்தப்
புல்லியபழியினோடும்புரந்தரன்போயபின்றை
மெல்லியலாளைநோக்கிவிலைமகளனையநீயுங்
கல்லியலாதியென்றான்கருங்கலாய்மருங்குவீழ்வாள்.

பிழைத்ததுபொறுத்தலென்றும்பெரியவர்கடனேயென்பர்
அழற்றருங்கடவுளன்னாய்முடிவிதற்கருளுகென்னக்

கழற்றுகள்கதுவவிந்தக்கல்லுருத்தவிர்தியென்றான்.

அந்தவிந்திரனைக்கண்டவமரர்கள்பிரமன்முன்னா
வந்துகோதமனைவேண்டமற்றவைதவிர்த்துமாறாச்
சிந்தையின்முனிவுதீர்ந்துசிறந்தவாயிரங்கண்ணாக்கத்
தந்தமதுலகுபுக்கார்தையலுங்கிடந்தாள்கல்லாய்.

---

76. ஒக்கவுண்டு - இருவர்மன மொன்றுபட் டிருந் தின்பந்துய்த்தல்.

76. முடுகிவருவதற்குக் காரணம் ஞானவுணர்ச்சி.

77. சாபமிரண்டின் முன்னையதுவில்;பின்னையது வெகுண்டுசொல்லல்.

78. நின்கைச்சுடுசரமனைய சொல்லால் என்றார் நின்கணையிலக்கொழியாதது போன் றம்முனிவன் மொழியுமன்னதாகலின்.

79. கல்லியலாதியெனச் சபித்தலைக் கூறுவதே முறை. இவ்வாறு கூறாது வேறுபடக் கூறுவாருமுளர்.

80. "பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும்புகழ்" என்பவாகலின் பிழைத்தது பொறுத்தலென்றும் பெரியவர் கடனே என்றதென்க.

இவ்வண்ணநிகழ்ந்தவண்ணமினியிந்தவுலகுக்கெல்லாம்
உய்வண்ணமன்றிமற்றோர்துயர்வண்ணமுறுவதுண்டோ
மைவண்ணத்தரக்கிபோரின்மழைவண்ணத்தண்ணலேயுன்
கைவண்ணமங்குக்கண்டேன்கால்வண்ணமிங்குக்கண்டேன். 82

தீதிலாவுதவிசெய்தசேவடிக்கரியசெம்மல்
கோதிலாக்குணத்தான்சொன்னபொருளெலாமனத்திற்கொண்டு
மாதவனருளுண்டாகவழிபடுமுறையினேக
போதுநீயன்னையென்றுபொன்னடிவணங்கிப்போனான். 83

அருந்தவனுறையுடன்னையனையவாறகலோடும்
விருந்தினர்தம்மைக்காணுமெய்ம்முனிவியந்தெழுந்துசென்
பரிந்தெதிர்கொண்டுபுக்குக்கடன்முறைமரபுதாமற்
புரிந்தபின்காதிசெம்மல்புனிதமாதவனைநோக்கி. 84

அஞ்சனவண்ணத்தான்றனடித்துகள்கதுவாமுன்னம்
வஞ்சிபோலிடையாண்முன்னைவண்ணத்தாகிநின்றாள்
நெஞ்சினாற்பிழைப்பிலாளைநீயழைத்திடுகவென்னக்
கஞ்சமாமுனிவனன்னமுனிவனுங்கருத்துட்கொண்டான். 85

குணங்களாலுயர்ந்தவள்ளல்கோதமன்கமலத்தாள்கள்
வணங்கினன்வலங்கொண்டேத்திமாசறுகற்பின்மிக்க
அணங்கினையவன்கையீந்தாண்டருந்தவனோடும்வாச
மணங்கிளர்சோலைநீங்கிமணிமதிற்கிடக்கைகண்டார். 86

ஆக திருவிருத்தம் — 563.

82. கைவண்ணம் தாடகைபாலுங் கால்வண்ண மகலிகைபாலுங் கண்டேனென்றமையால், வில்வண்ணமுதலிய சிலவற்றை மேலுங்காண விரும்புகிறேனெனக் குறிப்பித்தாராயிற்று.

83. தீதிலாவுதவி - முன்னும் பின்னுமாகிய வுதவியை நோக்காது செய்யுமுதவி.

84. காதியரசன் மைந்தனாகவின் கோசிகனைக் காதிசெம்மலென்றும் ராஜரிஷி யென்றுங் கூறுவர்.

# 10 - வது மிதிலைக்காட்சிப்படலம்

மையறுமலரினீங்கியான்செய்மாதவத்தின்வந்து
செய்யவளிருந்தாளென்றுசெழுமணிக்கொடிகளென்னுங்
கைகளைநீட்டியந்தக்கடிநகர்கமலச்செங்கண்
ஐயனையொல்லைவாவென்றழைப்பதுபோன்றதம்மா.

நிரம்பியமாடத்தும்பர்நிரைமணிக்கொடிகளெல்லாந்
தாம்பிறரின்மையுன்னித்தருமமேதூதுசெல்ல
வரம்பில்பேரழகினாளைமணஞ்செய்வான்வருகின்றானென்
றரம்பையர்விசும்பினாடுமாடலினாடக்கண்டார்.

தயிருறுமத்திற்காமசரம்படத்தலைப்பட்டோடும்
உயிருறுகாதலாரினொன்றறவொன்றொருவகில்லாச்
செயிருறுமனத்தவாகித்தீத்திரள்செங்கண்சிந்த
வயிரவான்மருப்பியானைமலையொடுமலையக்கண்டார்.

பகற்கதிர்மறையவானம்பாற்கடல்கடுப்பநீண்ட
துகிற்கொடிமிதிலைமாடத்தும்பரிற்றுவன்றிநின்ற
முகிற்குலந்தடவுந்தோறுநனைவனமுகிலிற்சூழ்ந்த
வகிற்புகைகதுவுந்தோறும்புலர்வனவாடக்கண்டார்.

ஆதரித்தமுதிற்கோறோய்த்தவயவமமைக்குந்தன்மை
யாதெனத்திகைக்குமல்லான்மதனற்குமெழுதவொண்ணாச்
சீதையைத்தருதலாலேதிருமகளிருந்தசெய்ய
போதெனப்பொலிந்துதோன்றும்பொன்மதின்மிதிலைபுக்கார்.

அற்கலந்திலங்குபன்மீனரும்பியவானும்போல
விற்கலைநுதலினாருமைந்தரும்வெறுத்துநீத்த
பொற்கலன்கிடந்தமாடநெடுந்தெருவதனிற்போனார்.

2. அழகினுக்கழகு செய்பவளாகலின் வரம்பில் பேரழகினாளை என்றார்.

3. தயிர்பரைமத்தியாண்டுங் கலக்குதலான் அதனையே காமசரம் பாய்ந்து வருத்தற்குவமை கூறினார்.

5. மதனற்கும் என்புழி நான்காவது மூன்றாவதன் பொருளது, உம்மை உயர்வுசிறப்பு.

6. வில்கலை எனவும், விற்கு அலை எனவும் பிரித்துப் பொருளுரைக்க.

தாறுமாய்த்தறுகட்குன்றந்தடமதவருவிதாழ்ப்ப
வாறுமாய்க்கலினமாவிலாழியாலழிந்தோராறுய்ச்
சேறுமாய்த்தேர்களோடுந்துகளுமாயொன்றோடொன்று
மாறுமாறாகிவாளாக்கிடக்கிலாமறுகிற்சென்றார். 7

தண்டுதலின்றியொன்றித்தலைத்தலைசிறந்தகாதல்
உண்டபின்கலவிப்போரினொசிந்தமென்மகளிரேபோற்
பண்டருகிளவியார்தம்புலவியிற்பரிந்தகோதை
வண்டொடுகிடந்துதேன்சோர்மணிநெடுந்தெருவிற்சென்றார். 8

நெய்திரணரம்பிற்றந்தமழலையினியன்றபாடல்
தைவருமகரவீணைதண்ணுமைதழுவித்தூங்கக்
கைவழிநயனஞ்செல்லக்கண்வழிமனமுஞ்செல்ல
நுண்ணிடையாராடுமாடகவரங்குகண்டார். 9

பூசலினெழுந்தவண்டுமருங்கினுக்கிரங்கிப்பொங்க
மாசறுபிறவிபோலவருவதுபோவதாகிக்
காசறுபவளச்செங்காய்மரகதக்கமுகுபூண்ட
ஊசலின்மகளிர்மைந்தர்சிந்தையோடுலவக்கண்டார். 10

வரப்பறுமணியும்பொன்னுமாரமுங்கவரிவாலுஞ்
சுரத்திடையகிலுமஞ்ஞைத்தோகையுந்தும்பிக்கொம்புங்
குரப்பணைநிரப்புமள்ளர்குவிப்புறக்கரைகடோறும்
பரப்பியபொன்னியன்னவாவணம்பலவுங்கண்டார். 11

வள்ளுகிர்த்தளிர்க்கைநோகமாடகப்பற்றிவார்ந்த
கள்ளெனநரம்புவீக்கிக்கண்ணொடுமனமுங்கூட்டி
வெள்ளியமுறுவறோன்றவிருந்தெனமகளிரீந்த
தெள்விளிப்பாணித்தீந்தேன்செவிமடுத்தினிதுசென்றார். 12

7. தாறமாய்ப்பது யானைகளாதலின் தாறுமாறாய் தறுகட்குன்றமென்றார். தறுகட்குன்றமென்றது யானையை, தாறு - இருப்புமுள்.

8. புலவி ஊடல். 9. கூத்தியார் தாம் கருத்திற்பயின்ற பாடலை யாங்கினிடைக்கண்ணானும். அதன்பயனைக் கையானுங் காட்டன் முறைமையான் கைவழிநயனஞ்செல்லக் கண்வழிமனமுஞ்செல்ல என்றார்.

11. மன்னர் பொன்னிரைக் கரைகடோறும் பல வேறுதானியங்களைப் பரப்பியவாறுபோல அவ்வாவணங்கிடத்தலினதனையே யுவமைகூறினார்.

12. மனஞ்சென்றவழிக்கண் செல்வதியல்பாதலின் கண்ணொடு மனமுங் கூட்டி என்றதென்க.

கொட்புறுகலினப்பாய்மாகுலான்மகன்முடுக்கிவிட்ட
மட்கலத்திகிரிபோலவாளியின்வருவமேலோர்
நட்பினினிடையறுவாய்ஞானிகளுணர்வினொன்றாய்க்
கட்புலத்தினையவென்றுதெரிவிலதெரியக்கண்டார்.

வாளரம்பொருதவேலுமன்மதன்சிலையும்வண்டின்
கேளொடுகிடந்தநீலச்சுருளுஞ்செங்கிடையுங்கொண்டு
நீளிருங்களங்கநீக்கிநிரைமணிமாடநெற்றிச்

பளிக்குவள்ளத்துவாக்கும்பசுநறுந்தேறன்மாந்தி
வெளிப்படுநகையவாகிவெறியனமிழற்றுகின்ற
ஒளிப்பினுமொளிக்கவொட்டாவூடலையுணர்த்துமாபோற்
களிப்பினையுணர்த்துஞ்செவ்விக்கமலங்கள்பலவுங்கண்டார். 15

மெய்வருபோகமொக்கவுடனுண்டுவிலையுங்கொள்ளும்
பையரவல்குலார்தமுள்ளமும்பளிங்கும்போல
மையரிநெடுங்கணோக்கம்படுதலுங்கருகிவந்து
கைபுகிற்சிவந்துகாட்டுங்கந்துகம்பலவுங்கண்டார். 16

கடகமுங்குழையும்பூணுமாரமுங்கலிங்கநுண்ணூல்
வடகமுமகரயாழும்வட்டினிகொடுத்துவாசத்
தொடையலங்கோதைசோரப்பளிக்குநாய்சிவப்பத்தொட்டுப்
படைநெடுங்கண்ணாராடும்பண்ணைகள்பலவுங்கண்டார். 17

பங்கயங்குவளையாம்பல்படர்கொடிவள்ளைநீலம்
செங்கிடைதரங்கங்கெண்டைசினைவராலினையதேம்பத்
தங்கள்வேறுவமையில்லாவவயவந்தழுவிச்சாலு
மங்கையர்விரும்பியாடும்வாவிகள்பலவுங்கண்டார். 18

---

13. குலான் இடைக்குறைந்து நின்றது. குலாலன்மகன் முடுக்கிவிட்ட மட்கலத்திகிரிபோல மேலோர் நட்பினின் இடையறுவாயும், வாளியின் வருவபோல ஞானிகளுணர்வினொன்றாயும், இன்னவெனக் காண்பதரிதாகலின் கட்புலத்தினையவென்று தெரிவில் என்றுங் கூறினார்.

14. செங்கிடை - செவந்தசடை. மாதர் இறைவனைச் சாளரந்தொறுங் காண்டலின் அவர் முகத்தை நோக்கிச் சந்திரவுதயங் கண்டாரென்றார்.

18. பங்கயம், குவளை, ஆம்பல்முதலியன முறையே, முகம், கண், வாய், இடை, காது, கண், இதழ், வயிறு, கணைக்கால் என வுருவகத்தாற் கூறினார். ய என்பதனாற் பிறவுறுப்புங்கொள்க.

இயங்குறுபுலன்களங்குமிங்குங்கொண்டோடவேகி
மயங்குபுதிரிந்துநின்றுமறுகுறுமுணர்விதென்னப்
புயங்களிற்கலவைச்சாந்தும்புணர்முலைச்சுவடுநீங்காப்
பயங்கெழுகுமரர்வட்டாட்டாடிடம்பலவுங்கண்டார். 19

மேனியர்வேண்டிற்றீயும்

செஞ்சிலைக்கரத்தர்மாதர்புலவிகள்திருந்திச்சேந்த
குஞ்சியர்சூழநின்றமைந்தர்தங்குழாங்கள்கண்டார். 20

வேறு

பாகொக்குஞ்சொற்பைங்கிளியோடும்பலபேசி
மாகத்தும்பர்மங்கையர்நாணமலர்கொய்யுந்
தோகைக்கொம்பினன்னவர்க்கன்னநடைதோற்றுப்
போகக்கண்டுவண்டினமார்க்கும்பொழில்கண்டார். 21

உம்பர்க்கேயும்மாளிகையோளிநிழல்பாய
விம்பர்த்தோன்றுந்நாகர்தநாட்டினெழில்காட்டிப்
பம்பிப்பொங்குங்கங்கையினாழ்ந்தபடைமன்னன்
அம்பொற்கோயிற்பொன்மதில்சுற்றுமகழ்கண்டார். 22

பொன்னின்சோதிபோதினினாற்றம்பொலிவேபோற்
றென்னுண்டேனிற்றீஞ்சுவைசெஞ்சொற்கவியின்பங்
கன்னிம்மாடத்தும்பரின்மாடேகழிபேடோ
டன்னம்மாடுமுன்றுறைகண்டங்கயனின்றார். 23

செப்புங்காலைச்செங்கமலத்தோன்முதல்யாரும்
மொப்பெண்பாலுட்கொண்டுவமிப்போருவமிக்கும்
அப்பெண்டானேயாயினபோதிங்கயல்வேறோர்
ஒப்பெங்கேகொண்டெவ்வகைநாடியுரைசெய்வேம். 24

உமையாளொக்கும்மங்கையருச்சிக்கரம்வைக்குங்
கமையாண்மேனிகண்டவர்காட்சிக்கரைகாண

19. புலன்வழி மனஞ்சென்று திரிதலின் நின்றுமறு குறுமுணர்வி தென்ன என்றதென்க.

20. ஈசன்கண்ணி னெருப்புறு வனங்கனென்றார் "உருவளர் காமன்" எனப் பிறருங் கூறுதல் பற்றியென்க.

23 பொன்னிற்சோதியும் போதினிறாற்றமும் தேனிற்றீஞ்சுவையும் கவியினின்பமும் போலும் விளங்குபவளாகலி னங்ஙனமுவமங் கூறினர்.

24. உவமிப்போருவமிக்கும் அப்பெண் - திருமாமகளை.

இமையாநாட்டம்பெற்றனமென்றாலிருகண்ணால்
அமையாதென்றாரந்தரவானத்தவரெல்லாம். 25

வென்றம்மானைத்தாரயில்வேலுங்கொலைவாளும்
பின்றம்மானப்பேர்கயலஞ்சப்பிறழ்கண்ணாள்
குன்றம்மாடக்கோவினளிக்குங்கடலன்றி
அன்றம்மாடத்தும்பரளிக்குமமுதன்னாள். 26

பெருந்தேனின்சொற்பெண்ணிவளொப்பாளொருபெண்ணைத்
தருந்தானென்றானான்முகனின்னுந்தரலாமே
அருந்தாவந்தத்தேவரிரந்தாலமிழ்தென்னும்
மருந்தேயல்லாதென்னினிநல்கும்மணியாழி. 27

அனையாண்மேனிகண்டபினண்டத்தரசாளும்
வினையோர்மேவும்மேனகையாதிம்மிளிர்வேற்கண்
இனையோருள்ளத்தின்னலினோர்தம்முகமென்னும்
பனிதோய்வானின்வெண்மதிக்கென்றும்பகலன்றே. 28

மமஙகையிவவையதஇடைவகப
பலகாலுந்தம்மெய்ந்நனிவாடும்படிநோற்றார்
அலகோவில்லாவந்தணரோநல்லறமேயோ
ரமால். 29

தன்னேரில்லாமங்கையர்செங்கைத்தளிர்மானே
அன்னேதேனேயாரமிர்தேயென்றடிபோற்றி
முன்னேமுன்னேமொய்ம்மலர்தூவிமுறைசாரப்
பொன்னேசூழும்பூவினொதுங்கிப்பொலிகின்றாள். 30

பொன்சேர்மென்காற்கிண்கிணியாரம்புனையாரங்
கொன்சேரல்குன்மேகலைதாங்குங்கொடியன்னார்
தன்சேர்கோலத்தின்னெழில்காணச்சதகோடி
னின்றாள். 31

வெல்லும்வெல்லும்மென்னமதர்க்கும்விழிகொண்டாள்
சொல்லுந்தன்மைத்தன்றதுகுன்றுஞ்சுவருந்திண்
கல்லும்புல்லுங்கண்டுருகப்பெண்கனிகின்றாள். 32

---

26. எதுகைநோக்கி விரிந்துநின்றது.

27. திருமகள் கற்பகமுதலியபொருளை முன்னல்கினமையின் என்னினி நல்குமணியாழி என்றார்.

வேறு

வெங்களிவிழிக்கொருவிழவுமாயவர்
கண்களிற்காணவேகளிப்புநல்கலான்
மங்கையர்க்கினியதோர்மருந்துமாயவ
ளெங்கணாயகற்கினியாவதாங்கொலோ. 33

இழைகளுங்குழைகளுமின்னமுன்னமே
மழைபொருகண்ணிணைமடந்தைமாதரோம்
பழகியவெனினுமிப்பாவைதோன்றலால்
அழகெனுமவையுமோரழகுபெற்றவே. 34

எண்ணருநலத்தினாளினையணின்றுழிக்
கண்ணொடுகண்ணிணைகவ்வியொன்றையொன்
றுண்ணவுநிலைபெறாதுணர்வுமொன்றிட
வண்ணலுநோக்கினானவளுநோக்கினாள். 35

நோக்கியநோக்கெனுநுதிகொள்வேலிணை
ஆக்கியமதுகையான்றோளினாழ்ந்தன
வீக்கியகனைகழல்வீரன்செங்கணுந்
தாக்கணங்கனையவடனத்திற்றைத்தவே. 36

பருகியநோக்கெனும்பாசத்தாற்பிணித்
தொருவரையொருவர்தம்முள்ளமீர்த்தலால்
வரிசிலையண்ணலும்வாட்கணங்கையும்
இருவருமாறிப்புக்கிதயமெய்தினார். 37

மருங்கிலாநங்கையும்வசையிலையனும்
ஒருங்கியவிரண்டுடற்குயிரொன்றாயினார்
கருங்கடற்பள்ளியிற்கலவிநீங்கிப்போய்ப்
பிரிந்தவர்கூடினாற்பேசல்வேண்டுமோ. 38

அந்தமிலழகனையணைகிலாமையாற்
பைங்கொடியோவியப்பாவைபோன்றனள்

34. இப்பெண்ணரசியழகான அனைத்துமழகெய்தலின அழகென்பது மதுவுமோரழகுபெற்றதே என்றதென்க.

35. இது 'கண்ணோடு கண்ணிணைநோக்கொக்கின் வாய்ச்சொற்களென்ன பயனுமில' என்னுந் திருக்குறட்பொருளை யுட்கொண்டதென்க.

38. சனகியை இராமனும், இராமனைச் சனகியும் [illegible] யிற் பிரிவுநீங்கிக் கூடிய கூட்டத்தை யொத்தலின் கடற்பள்ளியிற் கலவிநீங்கி இப்போய் பிரிந்தவர் கூடினாற் பேசவேண்டுமோ என்றார்.

சிந்தையுநிறையுமெய்ந்நலனும்பின்செல
மைந்தனுமுனியொடுமறையப்போயினன். 39

பிறையெனுநுதலவள்பெண்மையென்படு
நறைகமழலங்கலானயனகோசர
மறைதலுமனமெனுமத்தயானையி
னிறையெனுமங்குசநிமிர்ந்துபோயதே. 40

மாலுறவருதலுமனமுமெய்யுந்தன்
நூலுறுமருங்குல்போனுடங்குவாணெடுங்
காலுறுகண்வழிபுகுந்தகாதனேப்
பாலுறுபிரையெனப்பரந்ததெங்குமே. 41

நோமுறுநோய்நிலைநுவலகிற்றிலள்
ஊமரின்மனத்திடையுன்னிவிம்முவாள்
காமனுமொருசரங்கருத்திலெய்தனன்
வேமெரியதனிடைவிறகிட்டென்னவே. 42

நிழலிடுகுண்டலமதனினெய்யிடா
அழலிடாமிளிர்ந்திடுமயில்கொள்கண்ணினுள்
சுழலிடுகூந்தலுந்துகிலுஞ்சோர்தரத்
தழலிடுவல்லியேபோலச்சாம்பினள். 43

தழங்கியகலைகளுநிறையுஞ்சங்கமும்
மழுங்கியவுள்ளமுமறிவுமாமையும்
இழந்தவளிமையவர்கடையயாவையும்
வழங்கியகடலெனவறியளாயினள். 44

---

39. நிறையாவது தனக்குள்ளே அடக்கத்தக்கவைகளை யடக்கியிருத்தல். ஆடூக்குணநான்கிலொன்று. நான்காவது—அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

40. நிறை என்றது கற்பை, 'கற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறின்' எனப் பிறருங் கூறுதலிற்பெற்றி நோக்கியென்க. பெண்மைக்குணங்கள் நான்காவன—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன.

41. காதனேய் கண்வழிச்சேறல் மயிர்க்கால் வழியாதலின் காலுறு கண்வழி என்றும், பால்பிரையுற்றவழி முழுதும் வியாபித்துத் தயிராகவேறுபடல்போற் காதலுற்றுத்தான் வேறுபடலின் பாலுறுபிரையெனப்பரந்தெங்குமே யென்றுங் கூறினர். பிரை குடத்திலுள்ள பாலையுறைவிக்கும் சிறு மோர்த்துளி.

44. கற்பகமுதலிய எல்லாப்பொருள்களும் பாற்கடல் வழங்கிய பிற்றை ஞான்றுவறிய தாயதைக்' கலையுநிறையுஞ் சங்கமுமுதலிய விழந்தமைக்குவமங் கூறினர்.

கலங்குழைந்துகநெடுநாறுங்கண்ணற
நலங்குழைதரநகின்முகத்தினேவுண்டு
மலங்குழையெனவுயிர்வருந்திச்சோர்தரப்
பொலங்குழைமயிலைக்கொண்டகத்திற்போயினர். 45

காதொடுங்குழைபொருகயற்கணங்கைதன்
பாதமுங்கரங்களுமனையபல்லவந்
தாதொடுங்குழையொடுமடுத்ததண்பனிச்
சீதநுண்டுளிமலரமளிசேர்த்தினர். 46

நாளுறுநறுமலரமளிநண்ணினள்
பூளைவீபுரைபனிப்புயற்குத்தேம்பிய
தாளதாமரைமலர்ததைந்தபொய்கையும்
வாளராநுங்கியமதியும்போலவே. 47

மலைமிசைத்தடத்துறுமழைக்கறைவிபோல்
முலைமுகட்டுதிர்ந்தனநெடுங்கண்முத்தினம்
சிலைநுதற்கடையுறைசெறிந்தவேர்வுதன்
உலைமுகம்புகைநிமிருயிர்ப்பின்மாய்ந்ததே. 48

கம்பமில்கொடுமனக்காமவேடன்கை
அம்பொடுசோர்வதோர்மயிலுமன்னவள்
வெம்புறுமனத்தனல்வெதுப்பமென்மலர்க்
கொம்பெனவமளியிற்குழைந்துசாய்ந்தனள். 49

சொரிந்தனநறுமலர்சுறுக்கொண்டேறின
பொரிந்தனகலவைகள்பொறியிற்சிந்தின
எரிந்தவெங்கனல்சுடவிழையிற்கோத்தநூல்
பரிந்தனகரிந்தனபல்லவங்களே. 50

தாதியர்செவிலியர்தாயர்தௌவையர்
மாதுயருழந்துழந்தழுங்கிமாழ்கினர்
யாதுகொலிதுவெனவெண்ணறேற்றலர்
போதுடனயினிநீர்சுழற்றிப்போற்றினர். 51

அருகினின்றசைக்கின்றவாலவட்டக்கால்
எரியினைமிகுத்திடவிழையுமாலையும்

47. பனிப்புயற்குத்தேம்பிய தாளதாமரை மலர்ததைந்த பொய்கையும் வாளராநுங்கிய மதியும் செவ்வியும் ஒளியுமிழ்த்தல் பற்றி அவற்றையே யுவமங்கூறினர். 49. கானவேடன் எனப் பாடங்கொள்வாருமுண்டு.

கரிகுவதீகுவகனல்வகாட்டலால்
உருகுபொற்பாவையுமொக்துக்கீகான்றினள்.

அல்லிணைவருத்தகோரலங்கற்காடெனும்
வல்லெழுவல்லவேன்மரகதப்பெருங்
கல்லெனுமிருபுயங்கமலங்கண்ணெனும்
வில்லொடுமிழந்ததோர்மேகமென்னுமால்.

நெருக்கியுட்புகுந்தருநிறையும்பெண்மையும்
உருக்கியென்னுயிரொடுமுண்டுபோனவன்
பொருப்புறழ்தோள்புணர்புண்ணியத்தனு
கருப்புவில்லன்றவன்காமனல்லனே.

பெண்வழிநலனொடும்பிறந்தநாணொடும்
எண்வழியுணர்வுநானெங்குங்காண்கிலேன்
மண்வழிநடந்தடிவருந்தப்போனவன்
கண்வழிநுழையுமோர்கள்வனேகொலாம்.

இந்திரநீலமொத்திருண்டகுஞ்சியுஞ்
சந்திரவதனமுந்தாழ்ந்தகைகளுஞ்
சுந்தரமணிவரைத்தோளுமேயல
முந்தியென்னுயிரையம்முறுவலுண்டதே.

படர்ந்தொளிபரந்துயிர்பருகுமாகமுந்
தடந்தருதாமரைத்தாளுமேயல
கடந்தருமதங்கலுழ்களிநல்யானைபோ

உரைசெயிற்றேவர்தம்முலகுளானலன்
விரைசெறிதாமரையிமைக்குமெய்ம்மையால்

அரசிளங்குமரனேயாகல்வேண்டுமால்.

டநலங்றைபிணிததவந்திரங
நறங்குபுதிரியுமென்கன்னிமாமதில்

53. இரகுநாயகன் வில்லொடுஞ் சேறலின் வில்லொடு மிழந்ததோர் மேகமென்னுமென்றார்.

54. பெண்மை கட்புலனாகிய வமைதித்தன்மை என்பர் நச்சினார்க்கினியர். 55. மனத்திற் புகக்கண்வழிச் சேறலின் கண்வழி நுழையுமோர் கள்வனென்

56. தாழ்ந்த கைகளும் - முழந்தாளளவும் நீண்டு தொங்கும் கைகளும்,

எறிந்தவக்குமரனையின்றென்கண்ணிற்கண்
டறிந்துயிரிழக்கவுமாகுமேகொலாம். 59

என்றிவையினையனவிளம்புமெல்லியலி
வமண்ணனுங்கங்குறின யுக
கன்றியமனத்துறுகாமவேட்கையால்
ஒன்றலபலநினைந்துருகுங்காலையே. 60

அன்னமென்னடையவட்கமைந்தகாமத்தீத்
தன்னையுஞ்சுடுவதுதரிக்கிலானென
நன்னெடுங்கரங்களைநடுக்கியோடிப்போய்
முன்னைவெங்கதிரவன்கடலின்மூழ்கினான். 61

விரிமலர்த்தென்றலாம்வீசுபாசமும்
எரிநிறச்செக்கருமிருளுங்காட்டலால்
அரியவட்கனறருமந்திமாலையாங்
கருநிறச்செம்மயிர்க்காலன்றோன்றினான். 62

மீதறைபறைமையாம்பறையுங்கீழ்விளி
யோதமென்சிலம்பொடுதிமிரச்செக்கரும்
பாதகவிருள்செய்சுந்தசுகமும்பற்றலாற்
சாதகமென்னவுந்தழைத்தமாலையே. 63

வேறு

கயங்களென்னுங்கனல்தோய்ந்தகடிநாண்மலரின்விடம்பூசி
இயங்குதென்றன்மன்மதவேளெய்தபுண்ணினிடைநுழைய
வுயங்குமுணர்வுநன்னலமுமுருகிச்சோர்வாருயிருண்ண
வயங்குமாலைவானேக்கியதுவோகூற்றின்வடிவென்றாள். 64

கடலோமழையோமுழுநீலக்கல்லோகாயாநறும்போதோ
படர்பூங்குவளைநாண்மலரோநீலோற்பலமோபானலோ
இடர்சேர்மடவாருயிருண்பதியாதோவென்றுதளர்வாண்மு
மடல்சேரசுரர்நிறம்போலுமந்திமாலைவந்ததுவே. 65

மைவானிறத்துமீனெயிற்றுவாடையுயிர்ப்பின்வளர்செக்கர்ப்
பைவாயந்திப்படவரவேயென்னையளைத்துப்பகைத்தியால்
எய்வானொருவன்கையோயானுயிருமொன்றேயினியில்லை
யுய்வானுறவிப்பழிபூணவுன்னோடெனக்குப்பகையுண்டோ. 66

---

64. மன்மதவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

ஆலமுலகிற்பரந்ததுவோவாழிகிளர்ந்ததோவவர்தங்
நீலநிறத்தையெல்லோருநினைக்கவதுவாய்நிரம்பியதோ
காலனிறத்தையஞ்சனத்திற்கலந்துகுழைத்துக்காயத்தின்
மேலுநிலத்துமெழுகியதோவிளக்குமிருளாய்விளைந்ததுவே. 67

வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கவொருவர்தமைக்காணேன்
எளியள்பெண்ணென்றிரங்காதேயெல்லியாமத்திருளூடே
ஒளியம்பெய்யுமன்மதனாருனக்கிம்மாயமுரைத்தாரோ
களியென்செய்ததீவினையேயன்றிலாகிவந்தாயோ. 68

ஆண்டங்கனையாளினையநினைந்தழுங்கும்வேலையகல்வானந்
தீண்டநிமிர்ந்தபெருங்கோயிற்சீதமணியின்வேதிகைவாய்
நீண்டசோதிசெய்விளக்கம்வெய்யவென்றங்கவைநீக்கித்
தூண்டல்செய்யாமணிவிளக்கின்சுடராலிருளைப்பகல்செய்தார். 69

பெருந்திண்ணெடுமால்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பின்
விரிந்ததிவலையுதிர்ந்தயணிவிசும்பின்மீனின்மேல்விளங்க
அருந்தவமரர்கலக்கியநாளமுதநிறைந்தபொற்கலசம்
இருந்ததிடைவந்தெழுந்ததெனவெழுந்ததாழிவெண்டிங்கள். 70

வண்டாயயனான்மறைபாடமலர்ந்ததொருதாமரைப்போது
பண்டாலிலையின்மிசைக்கிடந்துபாரும்நீரும்பசித்தான்போல்
உண்டானுந்திக்கடல்பூத்தவோதக்கடலுந்தான்வேறோர்
வெண்டாமரையின்மலர்பூத்ததொத்ததாழிவெண்டிங்கள். 71

புள்ளிக்குறியிட்டெனவொண்மீன்பூத்தவானம்பொலிகங்குல்
நள்ளிற்சிறந்தவிருட்பிழம்பைநக்கிநிமிருநிலாக்கற்றை
கிள்ளைக்கிளவிக்கென்னாங்கொல்கீழ்பாற்றிசையின்மிசைவைத்த
வெள்ளிக்கும்பத்திளங்கமுகின்பாளைபோன்றுவிரிந்துளதால். 72

விரைசெய்கமலப்பெரும்போதுவிரும்பிப்புகுந்ததிருவினொடும்
குரைசெய்வண்டின்குழாமிரியக்கூம்பிச்சாம்பிக்குவிந்துளதால்
உரைசெய்திகிரிதனையுருட்டியொருகோலோச்சியுலகாண்ட
அரைசனொதுங்கத்தலையெடுத்தகுறும்புபோன்றதரக்காம்பல். 73

---

68. ஒளி என்றது ஒளித்து எனப் பொருள்படுதலைவரிப் புனைபந்தென் புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக.

71. பாரு நீரும் பசித்தானென்பதற்கு நிலனுங்கடலு முண்டானெனப் பொருள் படல் காண்க.

வண்ணமாலைகைபரப்பியுலகைவளைந்தவிருளெல்லாம், உண்ண
வெண்ணித்தண்மதியத்துதயத்தெழுந்தநிலாக்கற்றை, விண்ணுமண்
ணுந்திசையனைத்தும்விழுங்கிக்கொண்டவிரிநன்னீர்ப், பண்ணைவெண்
ணெய்ச்சடையன்றன்புகழ்போலெங்கும்பரந்ததால். 74

நீத்தமதனின்முளைத்தெழுந்தநெடுவெண்டிங்களெனுந்தச்சன்
மீத்தன்கரங்களவைபரப்பிமிகுவெண்ணிலவாம்வெண்சுதையாற்
காத்தகண்ணன்மணியுந்திக்கமலநாளத்திடைப்பண்டு
பூத்தவண்டம்பழையதென்றுபுதுக்குவானும்போன்றுளதால். 75

நீங்காமாயையவர்தமக்குநிறமேதோற்றப்புறமேபோய்
ஏங்காக்கிடக்குநெறிகடற்குமெனக்குங்கொடியையானாயே
ஓங்காநின்றவிருளாய்வந்துலகைவிழுங்கிமேன்மேலும்
வீங்காநின்றகருநெருப்பினிடையேயெழுந்தவெண்ணெருப்பே. 76

வேறு

கொடியையல்லையியாரையுங்கொல்கிலாய்
வடுவிலின்னமுதத்தொடும்வந்தனை
பிடியின்மென்னடைப்பெண்ணொடுடன்றுநீயெனைச்
சுடுதியோகடற்றோன்றியதிங்களே. 77

மீதுமொய்த்தெழுவெண்ணிலவின்கதிர்
மோதுமத்திகைமென்முலைமேற்பட
ஓதிமப்பெடைவெங்கனலுற்றெனப்
போதுமொய்த்தவமளிப்புரண்டாளரோ. 78

நீக்கமின்றிதிமிர்ந்தநிலாக்கதிர்
தாக்கவெந்துதளர்ந்துசாய்ந்தனள்
சேக்கையாகிமலர்ந்தசெந்தாமரைப்
பூக்கள்பட்டதுபூவையும்பட்டனள். 79

வாசமென்கலவைக்களிவாரிமேற்
பூசப்பூசப்புலர்ந்துபுழுங்கினள்
வீசவீசவெதும்பினண்மென்முலை
ஆசைநோய்க்குமருந்துமுண்டாங்கொலோ. 80

76. கருநெருப்பென்றது இருளை, வெண்ணெருப்பென்றது மதியை. கடலின்கண் அமுதத்தோடும் பெண்ணொடுந்தோன்றிய நீ என்னைச்சுடுதல் தக்கதன்றென்பார்.

77. எனைச், சுடுதியோ என்றுனெனக. 79. பூக்கள் பட்டது பால்வழுவமைதி.

80. 'தன்னோய்க்குத்தானே மருந்து' என்பவாகலின் ஆசைநோய்க்கு மருந்துமுண்டாங்கொலோ என்றார்.

தாயரிற்பரிசேடியர்தாதுகு
வீயரித்தளிர்மெல்லணைமேனியிற்
காயெரிக்கரியக்கரியக்கொணர்ந்
தாயிரத்தினிரட்டியடுக்கினர். 81

கன்னிநன்னகரிற்கமழ்சேக்கையுள்
அன்னமின்னனமாயினளாயவண்
மின்னின்மின்னியமேனிகண்டானெனச்
சொன்னவண்ணனுக்குற்றதுசொல்லுவாம். 82

ஏகிமன்னனைக்கண்டெதிர்கொண்டவன்
ஓகையோடுமினிதுகொண்டுய்த்திடப்
போகபூமியிற்பொன்னகரன்னதோர்
மாகமாடத்தனையவர்வைகினர். 83

வைகுமவ்வுழிமாதவம்யாவுமோர்
செய்கைகொண்டுநடந்தெனத்தீதறு
மொய்கொள்வீரன்முளரியந்தாளினன்
மெய்கொண்மங்கையருண்முனிமேவினன். 84

வந்தெதிர்த்தமுனிவனைவள்ளலுஞ்
சிந்தையாரவணங்கலுஞ்சென்றெதிர்

தந்துகோசிகன்றன்மருங்கெய்தலும். 85

கோதமன்றருகோமுனிகோசிக
மாதவன்றனைமாமுகநோக்கிப்
போதுநீயிவட்போதவிப்பூதலம்
ஏதுசெய்ததவமென்றியம்பினன். 86

பூந்தண்சேக்கைப்புனிதனையேபொரு
வேய்ந்தகேண்மைச்சதானந்தனென்றுரை
வாய்ந்தமாதவன்மாமுகநோக்கிநால்
தோய்ந்தசிந்தைக்கௌசிகன்சொல்லுவான். 87

வடித்தமாதவகேட்டியிவ்வள்ளறான்
இடித்தவெங்குரற்றாடகையாக்கையும்

---

82. கமழ்சேக்கை – புஷ்பசயனம்.

83. போகபூமி - ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்.

87. சதானந்தன் - அகலிகைபுத்திரன்.

அடுத்தென்வேள்வியுநின்னன்னைசாபமும்
முடித்தனென்னெஞ்சத்திடர்முடித்தாயென்றான். 88

என்றுகோசிகன்கூறிடவீறிலா
வன்றபோதனன்மாதவநின்னருள்
இன்றுதானுளதேலரிதியாதிந்த
வென்றிவீரர்க்கெனவும்விளம்பிமேல். 89

எள்ளில்பூவையுமிந்திரநீலமும்
அள்ளல்வேலையுமம்புதசாலமும்
விள்ளும்வீயுடைப்பானலுமேவுமெய்
வள்ளல்தன்னைமதிமுகநோக்கியே. 90

நறுமலர்த்தொடைநாயகநானுனக்
கறிவுறுத்துவென்கேளிவ்வருந்தவம்
இறையெனப்புவிக்கிறில்பல்லாண்டெலாம்
முறையினிற்புரந்தேயருண்முற்றினான். 91

அரசின்வைகியநாளினமைந்துழி
விரசுகானிடைச்சென்றனன்வேட்டைமேல்
உரைசெய்மாதவத்தோங்குவசிட்டனும்
பரசுவானவன்பாலணைந்தானரோ. 92

வேறு

அருந்ததிகணவன்வேந்தற்கருங்கடன்முறையினாற்றி
இருந்தருடருதியென்னவிருந்துழியரிதாகிற்கு
விருந்தினியமைப்பெனென்றுச்சுரபியையழைத்துநீயே
சுரந்தருளமிர்தமென்னவருண்முறைசுரந்ததன்றே. 93

ழம
பெறுகெனவளித்துவேந்தோடியாவருந்துய்த்தபின்னர்
நறுமலர்த்தாரும்வாசக்கலவையுநல்கலோடும்
உறுதுயர்தணிந்துமன்னனுய்த்துணர்ந்துரைக்கலுற்றான். 94

மாதவவெழுந்திலாய்நீவேயப்படைப்படைகட்கெல்லாம்
கோதறுமமிர்தமிக்கோவுதவியகொள்கைதன்னால்

---

90. இவையனைத்தும் இவள் வண்ணம் பெறவேண்டலின் மேவுமெய்

94. அறுசுவை - இனிப்பு, கார்ப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. உறுதுயர் - பசியாலும் நடையாலுமடைந்ததுயர்.

தீதறுகுணத்தான்மிக்கசெழுமறைதெரிந்தநூலோர்
மேதகுபொருள்கள்யாவும்வேந்தருக்கென்கைதன்னால். 95

நிற்கிதுதகுவதன்றானீடருஞ்சுரபிதன்னை
யெற்கருளென்றலோடுமியம்பலன்யாதும்பின்னர்
வற்கலையுடையென்யானோவழங்கலென்வருவதாகிற்
கொற்கொள்வேலுழவநீயேகொண்டகல்கென்றுகூற. 96

பணித்ததுபுரிவனென்னாப்பார்த்திபனெழுந்துபொங்கிப்
பிணித்தனன்சுரபிதன்னைப்பெயர்வுழிப்பிணியைவீட்டி
மணித்தடந்தோளினாற்குக்கொடுத்தியோமறைகள்யாவும்
கணித்தவெம்பெருமவென்னக்கலைமறைமுனிவன்சொல்வான். 97

கொடுத்திலென்யானேமற்றைக்குடைகெழுவேந்தன்றானே
பிடித்தகல்வுற்றதென்னப்பெருஞ்சினங்கதுவநெஞ்சோ
டிடித்தெழுமுரசவேந்தன்சேனையையானேயின்று
முடிக்குவென்காண்டியென்னாமொய்ம்மயிர்சிலிர்த்ததன்றே. 98

பப்பரரெயினர்சீனர்சோனகர்முதலபல்லோர்
கைப்படையதனினோடுங்கபிலைமாட்டுதித்துவேந்தன்
துப்படைச்சேனையாவுந்தொலைவுறத்துணித்தலோடும்
வெப்புடைக்கொடியமன்னன்றனையர்கள்வெகுண்டுமிக்கார். 99

சுரபியின்வலியிதன்றால்சுருதிநூலுணரவல்ல
வரமுனிவஞ்சமென்னாமற்றவன்சிரத்தையின்னே
அரிகுதுமென்னப்பொங்கியடர்த்தனரடரவன்னான்
எரியெழவிழித்தலோடுமிறந்தனர்குமரரெல்லாம். 100

ஐயிருபதின்மர்மைந்தரவிந்தமையரசன்காணா
நெய்பொழிகனலிற்பொங்கிநெடுங்கொடித்தேர்கடாவிக்
கைதொடர்கணையினோடுங்கார்முகம்வளையவாங்கி
எய்தனன்முனியுந்தன்கைத்தண்டினையெதிர்கவென்றான். 101

கடவுளர்படைகளீறாக்கற்றனபடைகள்யாவும்
விடவிடமுனிவன்றண்டம்விழுங்கிமேல்விளங்கல்காணா
வடவரைவில்லிதன்னைவணங்கினன்வழுத்தலோடும்
அடலுறுபடையோன்றீயாவன்னவனகன்றானன்றே. 102

விட்டனன்படையைவேந்தன்விண்ணுளோருலகையெல்லாம்
சுட்டனனென்னவஞ்சித்துளங்கினர்முனியுந்தோன்றிக்

---

102. வடவரைவில்லி – வடதிசையிலுள்ளனவெல்லாம் வடவரையே யாயினும் வில்லியெனும் குறிப்பால் மேருவெனப்பட்டது.

கிட்டியபடையையுண்டுகிளர்ந்தனன்கிளருநேமி
முட்டவெம்பொறிகள்சிந்தப்பொருபடையுமாணதிற்றே. 103

கண்டனனரசன்காணுக்கலைமறைமுனிவர்க்கெல்லாம்
திண்டிறல்வலியுந்தேசுமுனைவனக்கிடந்தன்றான்
மண்டலமுழுதுங்காக்குமொப்பரும்பொருவலியனென்றான்
வொண்டலம்புரியவெண்ணரியும்பட்டேகாண்டிசையையுற்றான். 104

மாண்டமாதவத்தோன்செய்தவனையேயனைத்திலண்ணலி
பூண்டமாதவத்தனுகியரசர்கோவினையிமை
காண்டலுமமரர்வேந்தன்மறைக்குமுகுத்தேனும்
தூண்டினனரம்பைமாருட்டிலோத்தமையையுந்தொன்மானை. 105

அன்னவண்மேனகைமாமனங்கவேள்சரங்கள்பாயத்
தன்னுணர்வழிந்துகாதற்சகுந்தலைபயந்துதேவர்கள்
பன்னரும்பகல்கீர்வுற்றப்பரிணிதாங்கித்தவவின்
நன்னயமுணர்ந்தோனாகிநெஞ்சினைக்கனலமக்காண். 106

விண்முழுதாளிசெய்தவினையெல்லாம்வெருண்டிடப்போய்
மண்மகளாதியென்றுமடவரலனையேயளிக்
கண்மலர்சிவப்பவுள்ளங்கடிப்பரநக்கவுதினைகி
எண்மரின்வெளியனாயானன்றிசைதன்னையுற்றான். 107

தென்றிசையதனைநண்ணிச்செய்தவஞ்செய்யுஞ்செல்வி
வன்றிறலயோத்திவாழுமன்றிரிசங்குவென்பான்
தன்றனைக்குருவைநண்ணித்தனுவொடுந்துறக்கமெய்த
வின்றெனக்கருளுதியென்னவியானதிற்கிலனென்றான். 108

நினக்கொலாதகினையநீனிலத்தியாவரேனு
மனக்கினியாரைநாடிவருப்பல்யான்போவெனவியெனச்
சினக்கொடுந்திறலோய்முன்னர்ந்தேகசிகற்பினையுடத்துவேறுர்
நினக்கிதனுடிநின்றுய்நீசனுய்விடுதியென்றார். 109

மலருளோன்மைந்தன்மைந்தர்வழங்கியசாபந்தன்னல்
அலரியோன்றனுப்நாணுமடிவிறந்தரசர்கோமான்
புலரியங்கமலம்போலும்பொலிவொரீஇவதனம்பூவிற்
பலருமாங்கிகழ்தற்கொத்தபுவம்வந்துற்றதன்றே. 110

காசொடுமுடியும்பூணுங்கரியதாங்கனகம்போன்றுந்
தூசொடுமணியுமுந்நூலேறநருந்தோற்றம்போன்று

---

106. நூலின் நன்னயமுணர்தல் - மாதர்பால் மனங்கலங்காதிருத்தல்.

மாசொடுகருகிமேனிவனப்பழிந்திடவூர்வந்தான்
சீசியென்றியாருமெள்ளத்திகைப்பொடுபழுவஞ்சேர்ந்தான். 111

கானிடைச்சிறிதுவைகல்கழித்தொர்நாட்கௌசிகப்பேர்க்
கோனினிதுறையுஞ்சோலைகுறுகினன்குறுகவன்றான்
ஈனனீயாவனென்னைநேர்ந்ததிவ்விடையினென்ன
மேனிகழ்பொருள்களெல்லாம்விளம்பினன்வணங்கிவேந்தன். 112

இற்றிதோவெனநக்கன்றான்யானிருவேள்விமுற்றி
மற்றுலகளிப்பெனென்றுமாதவர்தம்மைக்கூவச்
சுற்றுறுமுனிவர்யாருந்தொக்கனர்வசிட்டன்மைந்தர்
கற்றிலமரசன்வேள்விகனற்றுறைபுலையற்கீவான். 113

என்றுரைத்தியாங்களொல்லோமென்றனரென்னப்பொங்கிப்
புன்றொழிற்கிராதராகிப்போகெனப்புகறலோடும்
அன்றவரெயினராகியடவிகடோறுஞ்சென்றார்
நின்றுவேள்வியையுமுற்றிநிராசனர்வருகவென்றான். 114

அரசனிப்புலையற்கென்னேயனற்றுறைமுற்றியெம்மை
விரசுகவல்லையென்பான்விழுமிதென்றிகழ்ந்துநக்கார்
புரசைமாக்களிற்றுவேந்தைப்போகநீதுறக்கம்யானே
உரைசெய்தேன்றவத்தினென்னவோங்கினன்விமானத்தும்பர். 115

ஆங்கவன்றுறக்கமெய்தவமரர்கள்வெகுண்டுநீசன்
ஈங்குவந்திடுவதென்னேயிருநிலத்திழிகவென்னத்
தாங்கலில்கவிழ்வான்மற்றுத்தாபதசரணமென்ன
ஓங்கினனின்னில்லென்னவுரைத்துருமொக்கநக்கான். 116

பேணலாதிகழ்ந்தவிண்ணோர்பெரும்பதமுதலாமற்றைச்
சேண்முழுதமைப்பலென்னாச்செழுங்கதிர்கோணாடிங்கண்
மாணொளிகெடாதுதெற்குவடக்கவாய்வருகவென்று
தாணுவோடூர்வவெல்லாஞ்சமைக்குவெனென்னும்வேலை. 117

நறைத்தருவுடையகோனுநான்முகக்கடவுடானும்
கறைத்தருகளனுமற்றைக்கடவுளர்பிறருந்தொக்குப்
பொறுத்தருண்முனிவநின்னைப்புகல்புகுந்தவனைப்போற்றும்
றன். 118

---

112. மேனிகழ் பொருள்களென்றது - தன்னை வசிட்டன் சபித்தல் முதலியன.

115. புரசை - யானைக்கழுத்தணி கயிறு.

116. நின்னில் லென்றவடுக்கு. விரைவுப்பொருளது.

அரசமாதவனீயாதியைக்குநாடன்பாலவர்க்குன்
புரைவிளக்கிடுகவென்னக்கடயுளர்போயபின்னர்
நிரைதவன்விரைவினேகிநெடுங்கடற்கிறைவன்வைகும்
உரவிடமதனைநண்ணியுறுதவமுனைநேர்ந்தகாலை. 119

குதைவரிசிலைவாட்டானைக்கோமகனைப்பரீட்டன்
சுதைதருமொழியன்னையர்க்குயிர்க்குயிராயதோன்றல்
வதைபுரிபுருடமேதம்வகுப்பவோர்மைந்தர்கொள்வான்
சிதைவிலன்கனகந்தேர்கொண்டடவிகடிதிற்சென்றான். 120

நற்றவரிசிகன்வைகுநகனைவந்தடைந்தண்ணலிக்
கொற்றவன்வினவலோடுமிசைந்தனர்குமரர்தாம்மூட்
பெற்றவளிளவலெற்கேயென்றனள்பிதாமுன்னென்றான்
மற்றையமைந்தனக்குமன்னையன்றன்னேநோக்கி. 121

கொடுத்தருள்வெறுக்கைவேண்டித்தெருத்தமாம்விழுமங்கூன்ற
வெடுத்தெனைவளர்த்ததாதைக்கென்றனதெற்றுழதுமேவுதன்
றடுப்பருந்தேரினேறித்தடையிலாப்படர்ந்தேலாகுந்
சுடர்க்கதிர்க்கடவுள்வானந்தூர்சியநேருறல்புக்கான். 122

அவ்வயினிழிந்துமேவுதனருங்கடன்முறையினாற்றச்
செவ்வியகுரிசிறன்றுந்தேசென்றனவியம்பநேரோய்வான்
அவ்வியமவித்தசிந்தைமுனிவனையாண்டுக்காணுக்
கவ்வையினோடும்பாதகமலமதுச்சிசேர்த்தான். 123

இறப்பொடுவணக்கஞ்செய்தவிடலையையினிதுநோக்கிச்
சிறப்புடைமுனிவனென்னேதெருமரல்செப்புகென்ன
அறப்பொருளுணர்ந்தோயென்றனைன்னைதரமுன்னையென்னை
உறப்பொருள்கொண்டுவேந்தற்குதவினனென்றுமுற்றோன். 124

மைத்துனனோடுமுன்னோன்வழங்கியமுறைமைகேளாத்
தத்துறலொழிநீயானேதடுப்பனின்னுயிரையென்னாப்
புத்திரர்தம்மைநோக்கிப்போகவேந்தோடுமென்னு
ளென்கூறவவர்மறுத்தகறல்காணூ. 125

119. ஐந்துநாண்மீன்களாவன; அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன. இவை படைப்புக்காலந் தொட்டு வடக்கிலிருந்தன. தேவர்களால் இவ்விஸ்வாமித்திரர் விஷயமாய்த் தெற்கில் பிரகாசிக்கும்படி நியமிக்கப்பட்டன. ஆதலால் அசுவினிமுதல் விசாகம் வரையிலுள்ள இருபத்திரண்டு நாண்மீன்களே வடக்கிலிப்பொழுது காணப்படுவன.

122. தடையிலா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

எழுங்கதிரவனுநாணச்சிவந்தனனிருகணெஞ்சம்
புழுங்கினன்வடவைதீயமயிர்ப்புறம்பொறியிற்றுள்ள
வழுங்கலில்சிந்தையீர்நீரடவிகடோறுஞ்சென்றே
யொழுங்கறுபுளிஞராகியுறுதுயருறுகவென்றான். 126

மாமுனிவெகுளிதன்னான்மடிகலாமைந்தர்நால்வர்
தாமுறுசவரராகச்சபித்தெதிர்சலித்தசிந்தை
ஏமுறலொழிகவின்னேபெறுகெனவிரண்டுவிஞ்சை
கோமகனுக்குநல்கிப்பின்னருங்குணிக்கலுற்றான். 127

அரசனோடகியூபத்தணைக்குபிம்மறையையோதின்
விரசுவர்விண்ணுளோரும்விரிஞ்சனும்விடைவலோனும்
உரைசெறிவேள்விமுற்றுமுன்னுயிர்க்கீறுண்டாகா
பிரசமென்றாரோயென்னப்பழிச்சொடும்பெயர்ந்துபோனான். 128

மறைமுனியுரைத்தவண்ணமனத்துறமைந்தனையச்
சிறையுறுகலுழனன்னஞ்சேமுதற்பிறவுமூரும்
இறைவர்தொக்கமரர்சூழவிளவறன்னுயிரும்வேந்தன்
முறைதருமகமுங்காத்தார்வடதிசைமுனியுஞ்சென்றான். 129

வடாதிசைமுனியுநண்ணிமலர்க்கரநாசிவைத்தாங்
கிடாவுபிங்கலையானையவிதயத்தூடெழுத்தொன்றெண்ணி
விடாதுபல்பருவநிற்பமூலமாமுகடுவிண்டு
தடாதிருட்படலமூடச்சலித்ததெத்தலமுந்தாவி. 130

வேறு

எயிலெரித்தவன்யானையுரித்தநாட்
பயிலுறுத்துரிபோர்த்தனன்பண்பெனப்
புயல்விரித்தெழுந்தாலெனப்பூதலம்
குயிலுறுத்திக்கொழும்புகைவிம்மவே. 131

தமர்திரண்டுலகியாவையுந்தாவுற
நிமிர்ந்தவெங்கதிர்க்கற்றையுநீங்குறக்
கமந்தமாதிரக்காவலர்கண்ணொடுஞ்
சுமந்தநாகமுங்கண்சும்புளித்தவே. 132

---

128. யூபம் – வேள்வித்தூண்.

129. சிறையுறுகலுழனன்னஞ்சேவூருமிறைவர் – மும்மைப் பெருந்தேவர், பிறவுமூரு மென்றதனுன் யானையை யூர்தியாகக்கொண்ட இந்திரன் முதலிய இறைவரைக் குறித்தமை காண்க. 132. கண்சும்புளித்தல் – கண்களைச் சுருக்கிப் பார்த்தல் சும்புளித்தல் – கூசுதல்.

திரிவஇற்பசேகதலத்தியானையும்
வெருவலிற்றனவெங்கதிர்மீண்டன
கருவியுற்றககனமெலாம்புகை
யுருவியுற்றிடவும்பர்துளங்கினர். 133

புண்டரீகனும்புட்டிருப்பாகனுங்
குண்டையூர்திருவிசியுமற்றுள
வண்டர்தாமும்வந்தவ்வயினெய்திவே
றெண்டபோதனன்றன்னையெதிர்ந்தனர். 134

பாதிமாமதிசூடியும்பைந்துழாய்ச்
சோதியோனுமத்தாமலராளியும்
வேதபாரகர்வேறிலர்நீயலான்
மாதபோதனவென்னவழங்கினர். 135

அன்னவாசகங்கேட்டுமைரந்தணன்
சென்னிதாழ்த்திருசெங்கமலங்குவித்
துன்னுநல்வினையுற்றதென்றேங்கினான்
றன்னுதேவர்தஞ்சூழலுட்போயினார். 136

ஈதுமுன்னர்நிகழ்ந்ததிவன்றனை
மாதவத்துயர்மாண்புடையானிலை
நீதிவித்தகன்றன்னருமைந்தனி
யாதுமக்கரிதென்றனனீறிலான். 137

என்றுகோதமன்காதலன்கூறிட
வென்றிவீரர்வியப்பொடுவந்தெழா
வொன்றுமாதவன்றாடொழுதேத்திய
பின்றையேத்திப்பெயர்ந்தனன்றன்னிடம். 138

முனியுந்தம்பியும்போய்முறையாற்றமக்
கினியபள்ளிகளெய்தினர்பின்னிருட்
கனியும்போல்பவன்கங்குலுந்திங்களுந்
தனியுந்தானுமத்தையனுமாயினான். 139

வருணமமுறை

பெண்ணினன்னலம்பெற்றதுண்டேகொலோ

133. திரிவஇற்ப - இயங்குதிணைநிலைத் திணையுயிரை, சென்றுநின்று வாழுயிரெலாமென்றதுமிது.
137. இவன்று - இவனிராக. 138. கோதமன்காதலன் - சதாநந்தன்.

எண்ணினீதலதென்றறியேனிரு
கண்ணினுள்ளுங்கருத்துள்ளுங்காண்பெனால். 140

வள்ளற்செங்கைக்கரியவன்வைகுறும்
வெள்ளப்பாற்கடல்போன்மிளிர்கண்ணினாள்
அள்ளற்பூமகளாகுங்கொலோவென
துள்ளத்தாமரையுள்ளுறைகின்றதே. 141

அருளிலாளெனினும்மனத்தாசையால்
வெருளிநோய்விடக்கண்ணின்விழுங்கலாற்
றெருளிலாவுலகிற்சென்றுநின்றுவாழ்
பொருளெலாமவள்பொன்னுருவாயவே. 142

வாணிலாமுறுவற்கனிவாய்மதி
காணலாவதோர்காலமுண்டாங்கொலோ. 143

வண்ணமேகலைதேரொன்றுவாணெடுங்
'ரண
டுண்ணிவந்தநகையுமென்றொன்றுண்டா
லெண்ணுங்கூற்றினுக்கிந்தனைவேண்டுமோ. 144

கன்னலின்கருப்புச்சிலையான்விரை
பொன்னைமுன்னியபூங்கணைமாரியால்
என்னையெய்துதொலைக்குமென்றாலினி
வன்மையென்னுமிதாரிடைவைகுமே. 145

கொள்ளைகொள்ளக்கொதித்தெழும்பாற்கடற்
பள்ளவெள்ளமெனப்படருந்நிலா
வெள்ளைவண்ணவிடமுமுண்டாங்கொலோ. 146

ஆகுநல்வழியல்வழியென்மனம்
ஆகுமோவதற்காகியகாரணம்
பாகுபோன்மொழிப்பைந்தொடிகன்னியே
யாகும்வேறிதற்கையுறவில்லையே. 147

கழிந்தகங்குலரசன்கதிர்க்குடை
விழுந்ததென்னவுமேற்றிசையாள்சுடர்க்

கொழுந்துசேர்நுதற்கோதறுபட்டிபோய்
அழிந்ததென்னவுமாழ்ந்தது திங்களே. 148

வீசுகின்றநிலாச்சுடர்வீய்ந்ததால்
ஈசனுமதியேகனுஞ்சோகத்தால்
பூசுவெண்கலவைப்புனைசாந்தினை
யாசைமாதரழித்தனவென்னவே. 149

வேறு

ததையுமலர்த்தாரண்ணலிவ்வண்ணமயலுழந்து தளருமெல்லை
சிதையுமனத்திடருடையசெங்கமலமுகமலரச்செய்யவெய்யோன்
புதையிருளினெழுகின்றபுகர்முகயானையினுரிவைப்போர்வைபோர்த்த
உதயகிரியெனுங்கடவுளுதல்கிழிக்கவிழியேபோலுதயஞ்செய்தான்.

விசையாடற்பசும்புரவிக்குரமிதிப்பவுதயகிரிவிரிந்ததூளி
பசையாகமறையவர்கைந்நறைமலருதிறைபுனலும்பரந்துபாய
அசையாதநெடுவரையின்முகடுதொறுமிளங்கதிர்சென்றணைந்துவெய்யோன்
றிசையாளுமதகரியைச்சிந்தூரமப்பியதேபோற்சிவந்தமாதோ.

பண்டுவருங்குறிபகர்ந்துபாசறையிற்பொருள்வயினிற்பிரிந்துபோன
வண்டுதொடர்நறுந்தெரியலுயிரனையகொழுநர்வரமணித்தேரோடுங்
கண்டுமனங்களிசிறப்பவொளிசிறந்துபொலிவகலுங்கற்பினார்போற்
புண்டரிகமுகமலரவகமலர்ந்துபொலிந்தனபூம்பொய்கையெல்லாம்.

எண்ணரியமறையினொடுகின்னரர்களிசைபாடவுலகமேத்த
விண்ணவருமுனிவர்களும்வேதியருங்கரங்குவிப்பவேலையென்னும்
மண்ணுமணிமுழவதிரவானரங்கினடம்புரிவாளிரவியான
கண்ணுதல்வானவன்கனகச்சடைவிரிந்தாலெனவிரிந்தகதிர்களெல்லாம்.

கொல்லாழிநீத்தங்கோர்குனிவயிரச்சிலைதடக்கைக்கொண்டகொண்டல்
எல்லாழித்தேரிரவியிளங்கரத்தாலடிவருடியனந்தறீர்ப்ப
வல்லாழிக்கரைகண்டானுயிரவாய்மணிவிளக்கமழலுஞ்சேக்கைத்
தொல்லாழித்துயிலாதேதுயராழிநெடுங்கடலுட்டுயில்கின்றானே. 154

ஊழிபெயர்ந்தெனக்கங்குலொருவண்ணம்புடைபெயரவுறக்கநீத்த
சூழியானையினெழுந்துதொன்னியமத்துறைமுடித்துச்சுருதியன்ன
வாழிமாதவற்பணிந்துமனக்கினியதம்பியொடும்வம்பின்மாலை
தாழுமாமணிமௌலித்தார்சனகன்பெருவேள்விச்சாலைசார்ந்தான்.

முடிச்சனகர் பெருமானு முறையாலே மறைவேள்வி முற்றிச்சுற்றம், இடிக்குரலின் முரசியம்ப விந்திரன்போற் சந்திரன்றோய் கோயி

லெய்தி, எடுத்தமணி மண்டபத்து ளெண்டவத்துமுனிவரோடு மிருந் தான்பைந்தார், வடித்தகுனி வரிசிலைக்கைம் மைந்தனுந்தம் பியுமருங்கி னிருப்பமாதோ. 156

இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணின் முகத்தழகு பருக நோக்கி, யருந்தவனை யடிவணங்கி யாரிவரை யுரைத்திடுமி னடிக ளென்ன, விருந்தினர்க ளின்னுடைய வேள்விகா ணியவந்தார் வில் லுங்காண்பார், பெருந்தகைமைத் தயரதன்றன் புதல்வரென வவர் தகைமை பேசலுற்றான். 157

த்தம் - 721.

---

## 11-வது குலமுறைகிளத்துபடலம்

நலமுதல்வன் மனுவினையாரறியாதார்
பேதிந்தவுயிரனைத்தும்பெரும்பசியால்வருந்தாமற்
சோதித்தன்வரிசிலையாணிலமடந்தைமுலைசுரப்பச்
சாதித்தபெருந்தகையுமிவர்குலத்தோர்தராபதிகாண்.

பிணியரங்கவினையகலப்பெருங்காலந்தவம்பேணி
மணியரங்கநெடுமுடியாய்மலரயனைவழிபட்டுப்
பணியரங்கப்பெரும்பாயற்பரஞ்சுடரையாங்காண
வணியரங்கந்தந்தானையறியாதாரறியாதார்.

தானு
வான்றரக்கிற்றிகொலென்றுகுறையிரப்பவரங்கொடுத்தாங்
கேன்றெடுத்தசிலையினனுயிகல்புரிந்தவிவர்குலத்தோர்
ரன்கா

மளபபர்தால
உரைகுறுகநிமிர்கீர்த்தியிவர்குலத்தோனொருவன்கா
ணரைதிரைமூப்பிவைமாற்றியிந்திரனுநந்தாமற்
குரைகடலைநெடுவரையாற்கடைந்தமுதுகொடுத்தானும்.

கருதலரும்பெருங்குணத்தோரிவர்முதலோர்கணக்கிறந்தோர்
திரிபுவனமுழுதாண்டுசுடர்நேமிசெலநின்றோர்
பொருதுறைசேர்வேலினுப்புலிப்போத்தும்புல்வாயும்
ஒருதுறையினீருண்ணவுலகாண்டோனுளனொருவன்.

5. பெருங்குணம் - சீவகாருண்ணியம் முதலியன.

மறைமன்னுமணிமுடியுமாரமும்வாளொளிடுமின்னப்
பொறைமன்னுவானவருந்தானவரும்பொருமொருநாள்
விறன்மன்னர்தொழுகழலாயிவர்குலத்தோன்விற்பிடித்த
வறமென்னவொருதனியேதிரிந்தமராபதிகாத்தோன். 6

இன்னுயிர்க்குமின்னுயிராயிருநிலங்காத்தாரென்று
பொன்னுயிர்க்குங்கழலவரையாம்போற்றும்புகழ்கிற்பா
மின்னுயிர்க்குநெடுவேலாயிவர்குலத்தோன்மென்புறவை
மன்னுயிர்க்குத்தன்னுயிரைமாறாகவழங்கினனால். 7

இடறொட்டவினநெடியவரையுருட்டியிவ்வுலகந்
திடறொட்டமெனக்கிடக்கும்வகையியற்றித்திகழ்வேந்தர்
உடறொட்டநெடுவேலாயிவர்குலத்தோருவரிநீர்க்
கடறொட்டாரெனின்வேறோர்கட்டுரையும்வேண்டுமோ. 8

தூநின்றசுடர்வேலோயனந்தனைசொல்லானேல்
யானின்றுபுகழ்ந்துரைத்தற்கெளிதோதான்வடவிற்கோன்றைப்
பூநின்றமவுலியையும்புக்களைந்தபுனற்கங்கை
வானின்றுகொணர்ந்தானுமிவர்குலத்தோர்மன்னவன்காண். 9

கயற்கடல்சூழுலகெல்லாங்கைநெல்லிக்கனியாக்கி
இயற்கைநெறிமுறையாலேயிந்திரற்குமிடரியற்றி
முயற்கறையின்மதிக்குடையாயிவர்குலத்தோன்முன்னொருவன்
செயற்கரியபெருவேள்வியொருநூறுஞ்செய்தமைத்தான். 10

சந்திரனைவென்றானுமுருத்திரனைச்சாய்த்தானுந்
துந்துமெனுந்தானவனைச்சுடுசரத்தாற்றுணித்தானும்
வந்தகுலத்திடைவந்தரகுவென்பான்வரிசிலையால்
இந்திரனைவென்றுதிசையிருநான்குஞ்செருவென்றான். 11

வில்லென்னுநெடுவரையால்வேந்தென்னுங்கடல்கலக்கி
எல்லென்றுமணிமுறுவலிந்துமதியெனுந்திருவை
அல்லெனுந்திருநிறத்தவரியென்னவயனென்பான்
மல்லெனுந்திரள்புயத்துக்கணியென்னவைத்தானே. 12

அயன்புதல்வன்றயரதனையறியாதாரில்லையவன்
பயந்தகுலக்குமரரிவர்தமையுள்ளபரிசெல்லாம்
நயந்துரைத்துக்கரையேறநான்முகற்குமரிதாய்பல்
வியந்துரைத்தகடைத்தலையாயானறிந்தபடிகேளாய். 13

---

6. அமராபதி - இந்திரநகரம்.

துனியின்றியுயிர்செல்லச்சுடராழிப்படைவெய்யோன்
பனிவென்றபடியென்னப்பகைவென்றுபடிகாப்போன்
றனுவன்றித்துணையில்லான்றருமத்தின்கவசத்தான்
மனுவென்றநீதியான்மகவின்றிவருந்துவான். 14

சிலைக்கோட்டுநுதற்குதலைச்செங்கனிவாய்க்கருநெடுங்கண்
விலைக்கோட்டும்பேரல்குன்மின்னுடங்குமிடையாரை
முலைக்கோட்டுவிலங்கென்றங்குடனாகிமுன்னின்ற
கலைக்கோட்டுப்பெயர்முனியாற்றுயர்நீங்கக்கருதினான். 15

தார்காத்தநறுங்குஞ்சித்தனயர்களென்றவமின்மை
வார்காத்தவனமுலையார்மணிவயிறுவாய்த்திலரால்
னீர்காத்தகடல்காத்தநிலங்காத்தேதனென்னிற்பின்
பார்காத்தற்குரியாரைப்பணிநீயென்றடிபணிந்தான். 16

அவ்வுரைகேட்டம்முனியுமருள்சுரந்தவ்வகையனுப்
இவ்வுலகமன்றியேயெவ்வுலகுமினிதளிக்குஞ்
செவ்வியிளஞ்சிறுவர்களைத்தருகின்றேனினித்தேவர்
வவ்விநுகர்பெருவேள்விக்குரியவெலாம்வருகென்றான். 17

காதலரைத்தருவேள்விக்குரியவெலாங்கடிதமைப்ப
மாதவரிற்பெரியோனுமற்றதனைமுற்றுவித்தான்
சோதிமணிப்பொற்கலத்துச்சுதையனையவெண்சோறோர்
பூதகணத்தரசேந்தியனனின்றும்புறப்பட்ட. 18

பொன்னின்மணிப்பரிகலத்திற்புறப்பட்டவின்னமுதைப்
பன்னுமறைப்பொருளுணர்ந்தபெரியோன்றன்பணியினால்
தன்னனையநிறைகுணத்துத்தசரதனும்வரன்முறையால்
நன்னுதலார்மூவருக்குநாலுகூறிட்டளித்தான். 19

விரிந்திடுதீவினைசெய்தவெவ்வியதீவினையாலும்
அருங்கடையின்மறையறைந்தவறஞ்செய்தவறத்தாலும்
இருங்கடகக்கரதலத்திவ்வெழுதரியதிருமேனிக்
கருங்கடலைச்செங்கனிவாய்க்கவுசலையென்பாள்பயந்தாள். 20

தள்ளரியபெருநீதித்தனியாறுபுகமண்டும்
பள்ளமெனுந்தகையானைப்பரதனெனும்பெயரானை
எள்ளரியகுணத்தாலுமெழிலாலுமிவ்விருந்த
வள்ளலையேயனையானைக்கேகயர்கோன்மகள்பயந்தாள். 21

---

18. புறப்பட்டது - என்புழி துவ்வீறுதொகுத்தல்பெற்றது.

அருவலியதிறலினராயறங்கெடுக்கும்விறலரக்கர்
வெருவருதிண்டிறலார்கள்வில்லேந்துமெனிற்செம்பொற்
பருவரையுநெடுவெள்ளிப்பருப்பதமும்போல்வார்கள்
இருவரையுமிவ்விருவர்க்கிளையானுமீன்றெடுத்தாள். 22

தலையாயபேருணர்விற்கலைமகட்குத்தலைவராய்ச்
சிலையாயுந்தனுவேதந்தெய்வரைப்போற்பணிசெய்யக்
கலையாழிக்கதிர்த்திங்களுதயத்திற்கலித்தோங்கும்
அலையாழியெனவளர்ந்தார்மறைநான்குமனையார்கள். 23

திறையோடுமரசிறைஞ்சச்செறிகழற்காற்றசரதனும்
பொறையோடுந்தொடர்மனத்தான்புதல்வரெனும்பெயரேகாண்
உறையோடுநெடுவேலாயுபநயனவிதிமுடித்து
மறையோடுவித்திவரைவளர்த்தானும்வசிட்டன்காண். 24

ஈங்கிவராலென்வேள்விக்கிடையூறுகடிதியற்றுந்
தீங்குடையகொடியோரைக்கொல்விக்குஞ்சிந்தையனாய்ப்
பூங்கழலார்க்கொண்டுபோய்வனம்புக்கேன்புகாமுன்னந்
தாங்கரியபேராற்றற்றாடகையேதலைப்பட்டாள். 25

அலையுருவக்கடலுருவத்தாண்டகைதன்னீண்டுயர்ந்த
நிலையுருவப்புயவலியைநீயுருவநோக்கையா
வுலையுருவக்கனலுமிழ்கட்டாடகைதன்னுரமுருவி
மலையுருவிமரமுருவிமண்ணுருவிற்றொருவாளி. 26

செக்கர்நிறத்தெரிகுஞ்சிசிரக்குவைகள்பொருப்பென்ன
வுக்கனவோமுடிவில்லையோராம்பிறெனுமரக்கி
மக்களிலங்கொருவன்போய்வான்புக்கான்மற்றையவன்
புக்கவிடமறிந்திலேன்போந்தனனென்வினைமுடித்தே. 27

ஆய்ந்தேறவுணரையவயற்கேயுமறிவரிய
காய்ந்தேவிலுலகனைத்துங்கடலோடுமலையோடுந்
தீந்தேறச்சுடுகிற்கும்படைக்கலங்கள்செய்தவத்தால்
ஈந்தேனுமனமுட்கவிவற்கேவல்செய்குனவால். 28

---

22. செம்பொற்பருவரை - மேரு. நெடுவெள்ளிப்பருப்பதம்-கைலாயம்.

24. பகைவரின்மையா லுறைபுகுதலின் உறையோடு நெடுவேலாயென்றார்.

27. மக்களிலங்கொருவன் என்றது - சுவாகு. மற்றையவனென்றது—மாரீசனை.

கோதமன் றன்பன்னிக்குமுன்னையுருக்கொடுத்ததிவன்
போதுநின் றதெனப்பொலிந்தபொலன்கழற்காற்பொடிகண்டாய்
காதலென் றனுயிர்மேலுமிக்கரியோன்பாலுண்டால்
ஈதிவன் றன்வரலாறும்புயவலியுமெனவுரைத்தான்.

ஆ_ திருவிருத்தம்-750.

## 12 - வது கார்முகப்படலம்

மாற்றமாறுரைப்பதென்மாயவிற்குநான்
தோற்றவாறெனமனந்துளங்குகின்றதா
ஞேற்றனணங்கையுநொய்தினையன்வில்
ஏற்றுமேலிடர்க்கடலேற்றுமென்றனன்.
என்றனனேன்றுதன்னெதிர்நின்றுரையக்
குன்றுறழ்வரிசிலைகொணர்மினீண்டென

ரா

பொன் ா.

உறுவலியானையையொத்தமேணியர்
செறிமயிர்க்கல்லெனத்திரண்டதோளினர்
அறுபதினுயிரராளவிலாற்றலர்
'மடுத்திடைய

'னறுயா

'ணுற

கடலை

சங்கொடுசக்கரந்தரித்தசெங்கைய

எங்குளனொருவனின்றேற்றினிச்சிலை
மங்கைதன்றிருமணம்வாழுமாலென்பார்.

3. அறுபதினுயிர றென்றதன்றி அற்றபதினுயிரவ ரெனக்கொண்டு ஐயாயிரவரெனக் கோடலுமமையும்.

5. சங்கொடு சக்கரந்தரித்த செங்கையசிங்கவேறென்பதற்குச் சங்கு சக்கரமேந்திய படையாகவுடைய சிங்கம்போல்வானுகிய திருமால் எனப் பொருள் கொள்க.

கைதவந்தனுவெனல்கனகக்குன்றென்பார்
எய்தவன்யாவனோவேற்றிப்பண்டென்பார்
செய்ததத்திசைமுகன்றீண்டியன்றுதன்
மெய்தவப்பெருமையின்முயற்சியாலென்பார்.

திண்ணெடுமேருவைத்திரட்டிற்றோவென்பார்
வண்ணவான்கடல்பண்டுகடைந்தமத்தென்பார்
அண்ணல்வாளரவிறைக்கரசனோவென்பார்
விண்ணிடுநெடியவில்வீழ்ந்ததோவென்பார்.

என்னிதுகொணர்கனவியம்பினனென்பார்
மன்னவருளர்கொலோமதிகெட்டாரென்பார்
முன்னையூழ்வினையிருன்முடிக்கலாமென்பார்
கன்னியுமிச்சிலைகாணுமோவென்பார். 8

இச்சிலையுதைத்தகோற்கிலக்கமியாதென்பார்
நச்சிலைநங்கைமேனாட்டும்வேந்தென்பார்
நிச்சயமெடுக்குங்கொனேமியானென்பார்
சிற்சிலர்விதிசெய்ததீமைதானென்பார். 9

மொய்த்தனரின்னணமொழியமன்னன்முன்
உய்த்தனர்நிலமுதுகுநெக்கிக்கீழுற
வைத்தனர்வாங்குநர்யாவரோவெனாக்
கைத்தலம்விதிர்த்தனர்கண்டவேந்தரே. 10

போதகமனையவன்பொலிவுநோக்கிய
வேதனைதருகின்றவில்லைநோக்கித்தன்
மாதினைநோக்குவான்மனத்தைநோக்கிய
கோதமன்காதலன்கூறன்மேயினான். 11

இமையவில்வாங்கியவீசன்பங்குறை
யுமையினையிகழ்ந்தனனென்னவோங்கிய
கமையறுசினத்தனிக்கார்முகங்கொளாச்
சமையுறுதக்கனார்வேள்விசாரவே. 12

உக்கனபல்லொடுகரங்களோடினர்
புக்கனர்வானவர்புகாதருழல்கள்

9. நங்கைமேல் என்புழி ஏழாவது நான்காவதன் பொருளது.
12. இமையவில் — மேருமலையாகிய வில்.

தக்கனல்வேள்வியிற்றழலுமாறின
முக்கணெண்டோளவன்முனியுமாறினன்.

தாளுடைவரிசிலைசமபுவுமபாதக
நாளுடைமையினவர்நடுக்கநோக்கியிக்
கோளுடைவிடையவன்குலந்துட்டோன்றிய
வாளுடையுழவனோர்மன்னன்பால்வைத்தான். 14

கார்முகவலியையான்கழறல்வேண்டுமோ
வார்சடையரனிகர்வரதனீயலால்
யாருளரறிபவரிதற்குத்தோன்றிய
தேர்முகவல்குலாள்செல்விகேளெனு. 15

வேறு

இரும்பனையகருநெடுங்கோட்டிணையேற்றின்பணையேற்ற
பெரும்புயலிற்பளிக்குறுகம்பிணைத்ததனோடிணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப்பொற்கலப்பைவயிரத்தின்கொழுமடுத்திட்
டுரம்பொருவினிலம்வேள்விக்கலகில்பலசாலுழுதேதம். 16

உழுகின்றகொழுமுகத்தினுதிக்கின்றகதிரொளிபோல்
பொழிகின்றபுவிமடந்தைதிருவெளிப்பட்டெனப்புணரி
எழுகின்றதெள்ளமுதோடெழுந்தவளுமிழிந்தொதுங்கித்
தொழுகின்றநன்னலத்துப்பெண்ணரசிதோன்றினள். 17

குணங்களையென்கூறுவதுகொம்பினைச்சேர்ந்தவையுய்யப்
பிணங்குவனவழகிவளைத்தவஞ்செய்துபெற்றதுகாண்
கணங்குழையாளெழுந்ததற்பின்கதிர்வானிற்கங்கையெனும்
அணங்கிழியப்பொலிவிழந்தவாறொத்தார்வேறுள்ளார். 18

சித்திரமிங்கிதுவொப்பதெங்குண்டுசெய்வினையால்
வித்தகமும்விதிவசமும்வெவ்வேறேபுறங்கிடப்ப
அத்திருவையமரர்குலமாதரித்தாரெனவறிஞ
வித்திருவைநிலவேந்தரெல்லாருங்காதலித்தார். 19

---

14. வாளுடையுழவன் — தேவராதனை.

15. வரதன் — வரங்கொடுப்போன்.

18. அழகுக்கழகு செய்பவளாதலின் — அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதென்றார்.

19 தக்கன் — பிரமனது மானத புத்திரருள் ஒருவன்.

கலித்தானைக்கடலோடுங்கைந்தானைக்களிற்றரசர்
ஒலித்தானையெனவந்துமணமொழிந்தார்க்கெதிருடுத்த
புலித்தானைக்களிற்றுரிவைப்போர்வையான்போர்வில்லை
வலித்தானேமங்கைதிருமணத்தானென்றியாம்வலித்தேம். 20

வல்வில்லுக்காற்றார்கண்மாரவேள்வளைகரும்பின்
மெல்வில்லுக்காற்றாராய்த்தாமெம்மைவிளிகுற்றார்
கல்வில்லோடுடன்வந்தகணங்குழையைக்காதலிந்தாச்
சொல்வில்லாலுலகளிப்பாய்போர்செய்யத்தொடங்கினார். 21

எம்மன்னர்பெருஞ்சேனையீவதனைமேற்கொண்ட
செம்மன்னர்புகழ்வேட்டபொருளேபோற்றேய்ந்ததாள்
பொம்மென்னவண்டலம்புபுரிகுழலைக்காதலித்த
வம்மன்னர்சேனைதமதாதைபோலாயிற்றால். 22

மற்காக்கும்மணிப்புயத்துமன்னனிவன்மழவிடையோன்
விற்காக்கும்வாளமருண்மெலிகின்றானெனவிரங்கி
எற்காக்குமுடிவிண்ணோர்படையீந்தாரெனவேந்தர்
அற்காக்கைகூகையைக்கண்டஞ்சினவாமெனவகன்றார். 23

அன்றுமுதலின்றளவுமாருமிந்தச்சிலையருகு
சென்றுமிலர்போயொளிந்தார்நேர்வேந்தர்திரிந்துமிலர்
என்றுமினிமணமில்லையென்றிருந்தேமிவனேற்றி
நன்றுமலர்க்குழற்சீதைநலம்பழுதாகாதென்றான். 24

நினைந்தமுனிபகர்ந்தவெலாநெறியுன்னியறிவனுந்தன்
புனைந்தசடைமுடிதுளக்கிப்போரேற்றின்முகம்பார்த்தான்
வனைந்தனையதிருமேனிவள்ளலுமம்மாதவத்தோன்
நினைந்தவெலாநினைந்தந்தநெடுஞ்சிலையைநோக்கினான். 25

வேறு

பொழிந்தநெய்யாகுதிவாய்வழிபொங்கி
எழுந்தகொழுங்கனலென்னவெழுந்தான்

21. நிறைமொழி மாந்தரென்பதுபற்றி சொல்வில்லா லுலகளிப்பா யென்றார்.

22. ஈவார்மேனிற்புகழ் என்பனவாதலின்-ஈவதனை மேற்கொண்ட செம்மன்பொருளே போற்புகழ்வாய்ப்ப என்றார்.

அழிந்ததுவில்லெனவிண்ணவரார்த்தார்
மொழிந்தனராசிகண்முப்பகைவென்றார்.
தூயதவங்கடொடங்கியதொல்லோன்
ஏயவன்வல்விலிறுப்பதன்முன்னஞ்
சேயிழைமங்கையர்சிந்தைதொறெய்யா

காணுநெடுஞ்சிலைகால்வலிதென்பார்

பாணியிவன்படர்செங்கைபடாதேல்
வாணுதனங்கையும்வாழ்விலளென்பார்.
ப்ப

நரந்தநறைக்குழனங்கையுநாமு
முருங்கெரியிற்புகமூழ்குதுமென்பார்.
வள்ளன்மணத்தைமகிழ்ந்தனனென்றாற்
கொள்ளெனமுன்புகொடுப்பதையல்லால்

பிள்ளைமுனிட்டதுபேதைமையென்பார். 30
ஞானமுனிக்கொருநாணிலையென்பார்
கோனிவனிற்கொடியோனிலையென்பார்
மானவனிச்சிலைகால்வளையானேற்
பீனதனத்தவள்பேறிலளென்பார். 31
தோகையரின்னனசொல்லிடநல்லோர்
ஓகைவிளம்பிடவும்பருவப்ப
மாகமடங்கலுமால்விடையும்பொன்
நாகமுநாகமுநாணநடந்தான். 32

---

26. அம்பகம் - கண், த்ரியம்பகன் - மூன்று கண்களையுடைய சிவன். அவன் வில்லாதலால் த்ரியம்பகமென இந்தவில்லுக்குக் காரணக்குறியாயிற்று.

30. உலகையழிக்கவந்த கங்கையைத் தன்சடைநுனியிற் காக்குமாற்ற லேற்ற 'வெள்ளமணைத்தவ' னென்றும், அவனேந்தும் வில்லை இராமனிடத் தளிப்பது தகாதென்பார் பிள்ளை முன்னிட்டது பேதைமையென்றுங் கூறினர்.

32. ஆற்றலிற் சிறந்ததாகலின் மாகமடங்கலும் நடையிற் சிறந்ததாகலின் மால்விடையும், சலியாமையின் பொன்னாகமும், கம்பீரமுடைமையின் நாகமு மென்றின்ன நாணச்சென்றானென்றது.

ஆடகமால்வரையன்னது தன்னைத்
தேடருமாமணிசிந்தையெனும்பொற்
சூடகவால்வளைசூட்டிடநீட்டும்
ஏடவிழ்மாலையிதென்னவெடுத்தான். 33

தடுத்திமையாமலிருந்தவர் தாளின்
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார்
கடுப்பினில்யாருமறிந்திலர்கையால்
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார். 34

வேறு

ஆரிடைப்புகுதுநாமென்றமரர்கள் கமலத்தோன்றன்
பேருடையண்டகோளம்பிளந்ததென்றேங்கிநைந்தார்
பாரிடையுற்றதன்மைபகர்வதென்பாரைத்தாங்கி
வேரெனக்கிடந்தநாகமிடியெனவெருவிற்றன்றே. 35

பூமழைசொரிந்தார்விண்ணோர்பொன்மழைபொழிந்தமேகம்
பாமமார்கடல்களெல்லாம்பன்மணிதூவியார்த்த
கோமுனிக்கணங்களெல்லாங்கூறினவாசிகொற்ற
நாமவேற்சனகற்கின்றுநல்வினைபயந்ததென்று. 36

மாலையுமிழையுஞ்சாந்துஞ்சுண்ணமும்வாசநெய்யும்
வேலைவெண்முத்தும்பொன்னுங்காசுநுண்டுகிலும்வீசிப்
பால்வளையமிர்தளாயபல்லியந்துவைப்பமுந்நீர்
ஓல்கிளர்ந்துவாவுற்றென்னவொலிநகர்கிளர்ந்ததன்றே. 37

நல்லியன்மகரவீணைத்தேனுகநகையுந்தோடும்
வில்லிடவாளும்வீசவேல்கிடந்தனையநாட்டத்
தெல்லியன்மதியமன்னமுகத்தியரெழிலிதோன்றச்
சொல்லியபருவநோக்குந்தோகையினாடினாரே. 38

புண்ணுறுபுலவிநீங்கக்கொழுநரைப்புல்லிக்கொண்டார்
வெண்ணிறமேகமேன்மேல்விரிகடல்பருகுமாபோன்
மண்ணுறுவேந்தன்செல்வம்வறியவர்முகந்துகொண்டார். 39

வயிரியர்மதுரகீதமங்கையரமுதகீதஞ்
செயிரியர்மகரயாழின்றேம்பிழிதெய்வகீதம்

---

35. கமலத்தோன் கோளம் - பிரமாண்டகோளம்.

37. நிறைமதியங் காண்புழி கடல் ஒல்லெனக் கிளர்ந்து பொங்கலான் ஓங்கிளர்ந் துவாவுற்றென்ன என்றார்.

பயிரியல்வேயின்கீதமென்றிவைபருகிவிண்ணோர்
உயிருடையுடம்புமெல்லாமோவியமொப்பநின்றார்.

ஐயன்வில்லிறுத்தவாற்றல்காணியமவரார்நாட்டுத்
தையலாரிழிந்துபாரின்மகளிரைத்தழுவிக்கொண்டார்
செய்கையின்வடிவினுடல்பாடலிற்றெளிதகேறற்றார்
மையரிநெடுங்கணோக்கமிமைத்தலுமயங்கினின்றார்.

தயரதன்புதல்வனென்பார்தாமரைக்கண்ணனென்பார்
புயலிவன்மேனியென்பார்பூவையும்பொருவுமென்பார்
மயனுடைத்துலகமென்பார்மானுடனல்லனென்பார்
கயல்பொருகடலுள்வைகுங்கடவுளேகாணுமென்பார்.

நம்பியைக்காணநங்கைக்காயிரம்நயனம்வேண்டுங்
கொம்பினைக்காணுந்தோறுங்குரிசிற்குமன்னதேயாந்
தம்பியைக்காண்மினென்பார்தவமுடைத்துலகமென்பார்
இம்பரிங்கரிற்றந்தமுனிவனையிறைஞ்சுமென்பார்.

இற்றிவணின்னதாகமதியொடுமெல்லிநீங்கப்
பெற்றுயிர்பின்னுங்காணுமாசையாற்சிறிதுபெற்ற
சிற்றிடைப்பெரியகொங்கைச்சேயரிக்கரியவாட்கட்
பொற்றொடிமடந்தைக்கப்பாலுற்றதுபுகலலுற்றாம்.

ஊசலாடுயிரினோடுமுருகுபூம்பள்ளிநீங்கிப்
பாசிழைமகளிர்சூழப்போயொருபளிக்குமாடக்
காசிருமரையின்பொய்கைச்சந்திரகாந்தமீன்ற
சீதநீர்தெளித்தமென்பூஞ்சேக்கையையரிதிற்சேர்ந்தாள்.

பெண்ணிவணுற்றதென்னும்பெருமையாலருமையான
வண்ணமுமிலைகளாலேகாட்டலால்வாட்டந்தீர்ந்தேன்
றண்ணறுங்கமலங்காளென்றளிர்நிறமுண்டகண்ணின்
உண்ணிறங்காட்டினீரென்னுயிர்தரவுலோவினீரே.

வேறு

நானுலாவுமேருவோடுநாளலாவுபாணியும்
தூணுலாவுதோளும்வாளியூடுலாவுதூணியும்
வாணிலாவினூலுலாவுமாலைமார்புமீளவுங்
காணலாகுமாகினாவிகாணலாகுமேகொலாம்.

47. அவனைக்காணாத வழியுயிரிழப்பலென்பதுபற்றிக் காணலாகுமாகினாவி காணலாகுமே கோலென்றார்.

விண்டலங்கலந்திலங்குதிங்களோடுமீதுதோய்
வண்டலம்பலங்கறங்குபங்கியோடும்வார்சிலைக்
கொண்டலொன்றிரண்டுகண்ணின்மொண்டுகொண்டென்றுவியை
உண்டதுண்டெனுஞ்சினின்றுமுண்டதன்றுமுண்டரோ. 48

பஞ்சரங்குதீயினாவிபற்றிடுகொற்றவாய
வெஞ்சரங்கணெஞ்சரங்கவெய்யகாமனெய்யவே
சஞ்சலங்கலந்தபோதுதையலாரையுய்யவந்
தஞ்சலஞ்சலென்கிலாதவாண்மையென்னவாண்மையே. 49

இளக்கலாதகொங்கைகாளெழுந்துவிம்மியென்செய்தீர்
முளைக்கலாமதிக்கொழுந்துபோலும்வாண்முகத்தினான்
வளைக்கலாதவிற்கையாளிவள்ளன்மார்பினுள்ளுறத்
திளைக்கலாகுமாகிலானசெய்தவங்கள்செய்ம்மினே. 50

எங்குநின்றெழுந்ததிங்கதிங்குவந்துதெனைந்நலாம்
அங்கியன்றனங்கனெய்தவம்பினம்புகைத்ததோய்
பொங்குகின்றகொங்கைமேல்விடப்பொழிந்ததென்னினும்
கங்குல்வந்ததிங்களன்றதங்களங்கமில்லையே. 51

அடர்ந்துவந்தனங்கனெஞ்சழன்றுயிர்த்துமாமெய்யும்
விடங்குடைந்தமெய்யினின்றுமேவந்திடாதெழுந்துவெங்
கடந்துதைந்தகாரியானையன்னகாளைதாளடைந்
துடன்றொடர்ந்துபோனவாவிவந்தவாறெனுள்ளமே. 52

விண்ணுளேயெழுந்தமேகமார்பினூலின்மின்னொடும்
மண்ணுளேயிழிந்ததென்னவந்துபோனமைந்தனார்
எண்ணுளேயிருந்தபோதும்யாவரென்றுதேர்கிலேன்
கண்ணுளேயிருந்தபோதுமென்கொல்காண்கிலாதவே. 53

பெய்கடற்பிறந்தயல்பிறக்கொணாமருந்துபெற்
றையபொற்கலத்தொடங்கைவிட்டிருந்தவாதர்போன்
மொய்கிடக்குமண்ணணேறுண்முயங்கிடாதுமுன்னமே
கைகடக்கவிட்டிருந்துகட்டுரைப்பதென்கொலோ. 54

48 இராமன் மரகதமேனியனாதலின் இலைகளாலே வண்ணங்காட்டலா லென்றார். இராமனைக்கண்டவழித்தன் வடிவழகிவந்து மாமை நிறங்கோட லான் என்றளிர் நிறமுண்ட கண்ணெனென்றார்.

50. என்செய்தீர் ஒன்றுஞ்செய்திலீர் என்பது படநின்றது. கலைகள் பிறத்தற்கிடமாகிய மதிக்கொழுந்தென்பார் மூலைக்கலாமதிக்கொழுந்தென்றார்

52. காரியானை - கரியயானை என்றபடி.

54. மணிமுதலியனயாவுந்தருதலின் பெய்கடலென்றார். நீலமாலை - ஒரு சேடியின்பெயர். நால்வகைப்படையுட் சிறந்தமையின் கயத்தை முற்கூறினார்.

என்றுகொண்டுணைந்துநைந்திரங்கிவிம்மிவிம்மியே
பொன்றிணிந்தகொங்கைமங்கையிடரின்மூழ்துபோழ்தின்வாய்
குன்றமன்னசிலைமுறிந்தகொள்கைகொண்டுகுளிர்மனத்
தொன்றுமுண்கண்மதிமுகத்தொருத்திசெய்ததுரைசெய்வாம். 55

வேறு

வடங்களுங்குழைகளும்வானவில்லிடத்
தொடர்ந்துபூங்குழல்களுந்துகிலுஞ்சோர்தர
நுடங்கியமின்னெனநொய்தினெய்தினா
ணெடுந்தடங்கிடந்தகண்ணீலமாலையே. 56

வந்தடிவணங்கிலள்வழங்குமோதையள்
அந்தமிலுவகையளாடிப்பாடினள்
சிந்தையுண்மகிழ்ச்சியும்புகுந்தசெய்கையும்
சுந்தரிசொல்லெனத்தொழுதுசொல்லுவாள். 57

கயரததுரகமாக்கடலன்கல்வியன்
றயரதனெனும்பெயர்த்தனிச்சென்னேமியான்
புயல்பொழிதடக்கையான்புதல்வன்பூங்கணை
மயல்விளைமதனற்கும்வடிவுமேன்மையான். 58

மராமரமிவையெனவளர்ந்ததோளினான்
அராவணையமலனென்றயிர்க்குமாற்றலான்
இராமனென்பதுபெயரிளையகோவொடும்
பராவருமுனியொடும்பதிவந்தெய்தினான். 59

பூணியன்மொய்ம்பினன்புனிதனெய்தவில்
காணியவந்தனனென்னக்காவலன்
யாணடை
நாணினிதேற்றினானடங்கிற்றும்பரே. 60

மாத்திரையளவிற்றாண்மடுத்துமுன்பயில்
சூத்திரமிதுவெனத்தோளின்வாங்கினான்
ஏத்தினரிமையவரிழிந்தபூமழை
வேத்தவைநடுக்குறமுறிந்துவீழ்ந்ததே. 61

கோமுனியுடன்வருகொண்டலென்றபின்
றாமரைக்கண்ணினானென்றதன்மையால்
ஆமவனேகொலென்றையநீங்கினாள்
[illegible]லை. 62

62. இலக்கணக்குறைபாடின்றியே வளராநின்ற தென்பார், வாமமே கலையினுள் வளர்ந்த தல்குலென்றார்.

வேறொருபுலமகன்விரும்பிவாங்கினன்
மாறதிர்கழலினன்வாசியென்றனன்.

இலைமுகப்படத்தவனெழுதிக்காட்டிய
தலைமகன்சிலைத்தொழில்செவியிற்சார்தலு
நிலைமுகவலயங்கணிமிர்ந்துநீங்கிட
மலையெனவளர்ந்தனவயிரத்தோள்களே.

வெற்றிவேன்மன்னவன்றக்கன்வேள்வியில்
கற்றைவார்சடைமுடிக்கனிச்சிவானவன்
முற்றவேழுலகையும்வென்றழூரிவில்

?ன.

'ரதிரிடைவிடாதுநேர்
துன்றியகனைகழற்றூர்கொள்கெனப்
பொன்றிணிகலன்களுந்துகும்போக்கினன்
குன்றெனவுயரியகுவவுத்தோளினன்.

வானவன்குலத்தெமர்வரத்தினல்வரும்
வேனில்வேளிருந்தவம்மிதிலைநோக்கியஞ்
சேனையுமரசருஞ்செல்கமுன்னென
வானைமேலணிமுரசறைகென்றேவினன்.

வாமபரிவரிதிரைக்கடலைவள்ளுநவன்
றேம்பொழிதுழாய்முடிச்செங்கண்மாலவன்
ஆம்பரிசுலகெலாமளந்துகொண்டநாட்
சாம்புவன்றிரிந்தெனத்திரிந்

சாற்றியமுரசொலிசெவியிற்சாருமுன்
கோற்றொடிமகளிருங்கோலமைந்தரும்
வேற்றருகுமாரரும்வென்றிவேந்தருங்
காற்றெறிகடலெனக்களிப்பிரேங்கினர்.

விடைபொருநடையினன்சேனைவெள்ளமோர்

ரடிய

5. கனிச்சி வானவன் - மழுப்படை இறைவன். கணிச்சி யென்னும்

7. வானவன் - வானத்திலியங்குங் காரணத்தால் சூரியனுக்குத் தலைமைப்பற்றிவந்த பெயர். வேள் - விருப்பத்தையுண்டாக்குவோன்.

கடையுகமுடிவினிலெல்லையுங்காற்படப்
புடைபெயர்கடலெனவெழுந்துபோயதே. 10

சில்லிடமுலகெனச்செறிந்ததேர்கடாம்
புல்லிடுசுடரெனப்பொலிந்தவேந்தரால்
எல்லிடுகதிர்மணியெறிக்குமோடையால்
வில்லிடுமுகிலெனப்பொலிந்தவேழமே. 11

கால்விரிந்தெழுகுடைகணக்கிலாதனம்
பால்சிறைவிரித்துவிண்பறப்பபோன்றன
மேல்விரிந்தெழுகொடிப்படலைவிண்ணெலாந்
தோலுரிந்துகுவனபோன்றதோன்றுமால். 12

நுடங்கியதுகிற்கொடிநாரைக்கைம்மலைக்
கடங்கலுழ்சேனையைக்கடலிதாமென
விடம்படவெங்கலுழுமெழுந்தவெண்முகில்
தடம்புனல்பருகிடத்தாழ்வபோன்றவே. 13

இழையிடையிளவெயிலெறிக்குமவ்வெயில்
தழையிடைநிழல்கெடத்தவழுமத்தழை
மழையிடையெழிற்கெடமலருமம்மழை
குழைவுறமுழங்கிடுங்குழாங்கொள்பேரியே. 14

மன்மணிப்புரவிகண்மகளிரூர்வன
வன்னமுந்தியதிரையாறுபோன்றன
பொன்னணிபுணர்முலைபுரிமென்கூந்தலார்
மின்னெனமடப்பிடிமேகம்போன்றவே. 15

இணையெடுத்திடையிடைநெருக்கவேழையர்
துணைமுலைக்குங்குமச்சுவடுமாடவர்
மணிவரைப்புயத்துமென்சாந்துமாழ்கிமேல்
அணையெனப்பொலிந்ததக்கடல்செலாறரோ. 16

முத்தினுன்முழுநிலவெறிக்குமொய்ம்மணிப்
பத்தியாலிளவெயில்பரப்பும்பாகினுந்
தித்தியாநின்றசொற்சிவந்தவாய்ச்சியர்
உத்தராசங்கமிட்டொளிக்குங்கூற்றமே. 17

15. மாதரை மின்னாகவும், மடப்பிடியை மேகமாகவு முருவகஞ் செய்

17. உத்தராசங்கம் – மேற்போர்வை.

வில்லினர்வாளினர்வெறித்தகுஞ்சியர்
கல்லிணையழிந்துயர்கனகந்தோளினர்
வல்லியின்மருங்கினர்மருங்குமாப்பிடி
புல்லியகளிறெனமைந்தர்போயினர். 18

மன்றலம்புதுமலர்மழையிற்சூழ்ந்தெனத்
துன்றிருங்கூந்தலார்முகங்கண்டோன்றலால்
ஒன்றலாமுழுமதியூருமானம்போற்
சென்றனவாலவர்சிவிகையீட்டமே. 19

மொய்திரைக்கடலெனமுழங்குமூக்குடைக்
கைகளிற்றிசைநிலைக்களிற்றையாய்வன
மையலுற்றிழிமதமழையருமையால்
தொய்யலைக்கடந்திலசூழியானையே. 20

சூருடைநிலையெனத்தோய்ந்துந்தோய்கிலா
வாருடைவனமுலைமகளிர்சிந்தைபோல்
காரொடுஞ்சதியொடுந்தாவுமாயினும்
பாரிடைமிதிக்கிலபரியின்பந்தியே. 21

ஊடியமனத்தினருருதநோக்கினர்
நீடியவுயிர்ப்பினர்நெரிந்தநெற்றியர்
தோடவிழ்கோதையுந்துறந்தகூந்தலர்
ஆடவருயிரெனவருகுபோயினர். 22

மாறெனத்தடங்களைப்பொருதுமாமரம்
ஊறுபட்டிடவிடையொடித்துச்சாய்த்துராய்
ஆறெனச்சென்றனவருவிபாய்கவுள்
தாறெனக்கனலுமிழ்தறுகண்யானையே. 23

உழுந்திடவிடமிலையுலகமெங்கணும்
அழுந்தியவுயிர்க்கெலாமருட்கொம்பாயினான்
எழுந்திலனெழுந்திடைப்படருஞ்சேனையின்
கொழுந்துபோய்க்கொடிமதின்மிதிலைகூடிற்றே. 24

கண்டவர்மனங்கள்கைகோப்பக்காதலின்
வண்டமர்கோதையர்வதனராசியால்

---

20. மூக்குடைக்கை — புழைக்கை.
21. சூருடைநிலை — பூமியிற் கால் தோயாது செல்லல்.

பண்டிகள்பண்டிகள்பரிசிற்சொல்லன
புண்டரீகத்தடம்போலவேபோன்றவே. 25

பாண்டியின்வைத்தவோர்பாவைதன்றனும்
ஈண்டியவன்பினனேகுவாயினிடைக்
காண்டலுநோக்கியகணைக்கணத்தசனாய்
ஆண்டகைக்கினியதோர்முதலாயதே. 26

பிள்ளைமானோக்கிபைப்பிரிந்தபோகின்றாய்
அள்ளனீர்மருதவைப்பதனினன்னபோய்
புள்ளுறமென்றுமனைப்பூவிநோக்கினான்
உள்ளமுந்தானுநின்றாசலாநிலாய். 27

வேறு

அங்கண்ஞாலத்தரசபிணைக்குகளா
பொங்குவெண்குடைசாமரைபோர்க்களத்
கங்கைபாறுகடுத்தகாசினைச்
சங்குபோர்முழங்கியதானையே. 28

அமரருஞ்சொல்லணங்கனையாமுரி
கவருங்கூர்நுதிக்கண்ணொளிர்சாலவேல்
குமரர்நெஞ்சகுளிப்பவுடங்கலாத்
சமரபூமியுமொத்ததானையே. 29

தோண்மிடைந்தனதாணமிடைந்தன
வாண்மிடைந்தனவாசமின்மிடைந்தனத்
தாண்மிடைந்தனதாம்பிமிடைந்தன
வாண்மிடைந்தனவாளிமிடைந்தன. 30

வார்குலாமுலைவைத்தகண்வாங்கிடப்
பேர்கிலாதுபிறங்குமுகத்தினன்
நேர்கிலானெதிர்யந்திரிற்சென்றுரு
மூரிமாமதயானையைமுட்டினான். 31

சுழிகொள்பாய்பரிதுள்ளவோர்தோகையாள்
வழுவில்வீழவுதற்றுனைபோர்வள்ளறான்
எழுவினீள்புயத்தாலெடுத்தேந்தினான்
றழுவினின்றொழியான்றனைமேல்வையான். 32

துணர்த்ததாமரைநோவத்தொடர்ந்தடர்
கணைக்கருங்கணிணுனையொர்காளைதான்

31. வார்குலாமுலை — கச்சுவிரும்புமுலை.

பணைத்தவெம்முலைப்பாய்மதயானையை
யணைக்கநங்கைக்ககவிடமில்லென்றான். 33

சுழியுங்குஞ்சிமிசைச்சுரும்பார்த்திடப்
பொழியுமாமதயானையிற்போகின்றான்
கழியகூரியவென்றொருகாரிகை
விழியைநோக்கித்தன்வேலையுநோக்கினான். 34

தரங்கவார்குழற்றாமரைச்சீறடிக்
கருங்கண்வாளுடையாளையோர்காளைதான்
நெருங்குபூண்முலைநீள்வளைத்தோளினீர்
மருங்குலெங்குமறந்துவைத்தீரென்றான். 35

கூற்றம்போலுங்கொலைக்கணினாலன்றி
மாற்றம்பேசகிலாளையொர்மைந்தன்றா
னாற்றுநீரிடையங்கைகளாலெடுத்
தேற்றுவாருமையாவர்கொலேவென்றான். 36

தள்ளரும்பரந்தாங்கியவொட்டகந்
தெள்ளுதேன்குழையாவையுந்தின்கில
உள்ளமென்னத்தம்வாயுமுலர்ந்தன
கள்ளுண்மாந்தரிற்கைப்பனதேடியே. 37

அரத்தநோக்கினரற்றிரண்மேனியர்
பரித்தகாவினர்ப்பப்பரரேகினார்
திருத்துகூடத்தைத்திண்கணையத்தொடும்
எருத்தினேந்தியமால்களிறென்னவே. 38

பித்தயானைபிணங்கிப்பிடியிற்கை
வைத்தமேலிருந்தஞ்சியமங்கைமார்
எய்த்திடுக்கணுற்றார்புதைத்தார்க்கிரு
கைத்தலங்களிற்கண்ணடங்காமையே. 39

வாமமேகலையாரிடைவாலதி
பூமிதோய்பிடிச்சிந்தரும்போயினார்
காமர்தாமரைநாண்மலர்க்கானத்துள்
ஆமைமேல்வருந்தேரையினையரோ. 40

---

36. கண்ணினாலன்றி மாற்றம்பேசவென்றது - கண்ணளவானன்றி வாயிற்றோன்றுஞ் சொற்களை.

38. கணையம் - மதயானையைத்தடுக்குமரம்.

40. சிந்தர் - குறளர், இவர் மெய்காப்பாளர்.

இம்பர்நாட்டின் றரமல்லளிங்கிவள்
உம்பர்கோமகற்கெனவின்றதொக்குமால்
கம்பமாவரக்கால்கள்வளைத்தொரு
கொம்பனாளைக்கொண்டோடுங்குதிரையே. 41

சந்தவார்குழல்சோர்பவைதாங்கலார்
சிந்துமேகலைசிந்தையுஞ்செய்கலார்
எந்தைவில்லிறுத்தானெனுமின்சொலை
மைந்தர்பேசமனங்களித்தோடுவார். 42

குடையர்குண்டிகைதூக்கினர்குந்திய
நடையர்நாசிபுதைத்தகைநாற்றலர்
கடைகளிற்றையுங்காரிகையாரையுந்
அடையவஞ்சியவந்தணர்முந்தினார். 43

நாறுபூங்குழனங்கையர்கண்ணினீர்
ஊரநேர்வந்துருவுவெளிப்பட
மாறுகொண்டனைவந்தனையாகில்வந்
தேறுதேகெனக்கைகளிழிச்சுவார். 44

குரைத்ததேருங்களிறுங்குதிரையு
நிரைத்தவார்முரசுந்திமிர்த்தெங்கணும்
இரைத்தபேரொலியாலிடையாருந்
உரைத்துணர்ந்திலருமரிசேனையினார். 45

நட்சிலம்பிவளைந்தனதுண்டுகில்
கட்சிலம்புகருங்குழலார்குழூ
வுட்சிலம்புசிலம்பவொதுங்கலாற்
புட்சிலம்பிடுபொய்கையும்போன்றதே. 46

தெண்டிரைப்பரவைத்திருவன்னவர்
நுண்டிரைப்புரைநோக்கியநோக்கினைக்
கண்டிரைப்பனவாடவர்கண்களி
வண்டிரைப்பனவானமதங்களே. 47

உழைகலித்தனவென்னவுயிர்த்துணை
நுழைகலிக்கருங்கண்ணியர்நூபுர

---

44. உருவுவெளிப்பட என்றார். போர்வயிற்பிரிந்த தலைவன் உறவெளித் தோற்றத்தை 46. கள் - மலர்த்தேன்.
48. உழை - ஏழிசைக்குள், சிரத்திற்பிறக்குமிசை.

இழைகலித்தனவின்னியமாவெழு
மழைகலித்தெனவாசிகலித்தவே. 48

மண்களிப்பநடப்பவர்வாணுதல்
உண்களிக்கமலங்களினுள்ளுறை
திண்களிச்சிறுதும்பியெனச்சிலர்
கண்களித்தனகாமன்களிக்கவே. 49

எண்ணுமாத்திரமும்மரிதாமிடை
வண்ணமாத்துவர்வாய்க்கனிவாய்ச்சியர்
திண்ணமாத்தொளிர்செவ்விளநீரிழி
சுண்ணமார்த்தனதூளியுமார்த்தவே. 50

சித்திரத்தடந்தேர்மைந்தர்மங்கையர்
உய்த்துரைப்பநினைப்பவுலப்பில
ரித்திறத்தினரெத்தனையோபலர்
மொய்த்திரைத்துவழிக்கொண்டுமுன்னினார். 51

வேறு

குசையுறுபரியுந்தேரும்வீரருங்குழுமியெங்கும்
விசையொடுகடுகப்பொங்கிவீங்கியதூளிவிம்மிப்
பசையுறுதுளியின்றாரைப்பசுந்தொளையடைந்தமேகந்
திசைதொறுநின்றயானைமதத்தொளைசெம்மிற்றன்றே. 52

கேடகந்தடக்கையாலேகிளரொளிவாளும்பற்றிச்
சூடகத்தளிர்க்கைமற்றைச்சுடர்மணித்தடக்கைபற்றி
யாடகத்தோடையானையழிமதத்திழுக்கலாற்றிற்
பாடகக்காலினாரைப்பயப்பயக்கொண்டுபோனார். 53

செய்களின்மடுவினன்னீர்ச்சிறைகளினிறையப்பூத்த
நெய்தலுங்குமுதப்பூவுநெகிழ்ந்தசெங்கமலப்போதுங்
கைகளுமுகமும்வாயுங்கண்களுங்காட்டக்கண்டு
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரால். 54

பந்தியம்புரவினின்றும்பாரிடையிழிந்தோர்வாசக்
குந்தளபாரஞ்சோரக்குலமணிக்கலன்கள்சிந்தச்

---

49. தும்பி - வண்டு. 50. யாத்தனமென்றது மரீஇயது 'ஆதுபில் காலத்தெந்தை' என்புழிப்போல.

52. செம்மிற்று - அடைத்தது. 53. ஆடகம் - நால்வகைப்பொன்னி
னொ

சந்தநுண்டுகிலும்வீழுந்தளிர்க்கையாலணைந்துச்சார
வந்ததுவேழமென்னமயிலெனவிரியல்போவார். 55

குடையொடுகளிறுங்கொங்கற்குழாங்களுங்கொடியின்காடும்
இடையிடைமயங்கியெங்கும்வெளிகரந்திருளைச்செய்யப்
படைகளுமுடியும்பூணும்பட்டவெயில்பரப்பிச்செல்ல
விடையொருகணத்தினுள்ளேயிரண்டுபகலுமுண்டே. 56

முருக்கிதழ்முந்தமூரன்முறுவலார்முகங்களென்னுந்
திருக்கிளர்கமலப்போதிற்றீட்டினகிடந்தகூர்வாள்
நெருக்கிடையறக்குநீர்களீங்குமினீங்குமென்றென்
றுருக்கனிலொளிருமேனியாடவரகலப்போவார். 57

நீந்தருநெறியினூற்றநெருக்கினூற்சுருக்குண்டற்றுங்
காந்தினமணியுமுத்துஞ்சிந்தினகலாபந்தூர்ந்த
பாந்தளினல்குலார்தம்பரிபுரம்புலம்பப்பைம்பொற்
பூந்தளிருறைப்பமாழ்கிப்போக்கரிதென்னநிற்பார். 58

கொற்றநல்லியங்களெங்குங்கொண்டலிற்றுமைப்பப்பண்டிப்
பெற்றவேறன்னப்புள்ளிற்பேதையர்வெருவிநீங்க
முற்றுறுபாங்கரெல்லாமுறைமுறைபாசந்தோடும்
பற்றறவீசியேகியோகியிற்பரிவுதீர்ந்த. 59

காற்செறிவேகப்பாகர்கார்முகவுண்மை [illegible]
வார்ச்சிறைக்கொங்கையன்னார்புமருப்புங்காணப்
பாற்செறிகடலிற்றோன்றுமுப்பணைக்கைம்மால்யானையென்ன
நீர்ச்சிறைபற்றியேறுநின்றதன்றனையவேழம். 60

அறலியற்கூந்தற்கண்வாளமுதுகுகுமுதச்செவ்வாய்
விறலியரோடுநல்யாழ்ச்செயிரியர்பரவிமேலார்
நறைசெவிப்பெய்வதென்னநைவளமேகப்பாடன்
முறைமுறைபகர்ந்துபோனார்கின்னரமிதுனமொப்பார். 61

---

56. குடைகளிறு முதலாயின இருளைச்செய்தமையானும். படைகளு முடியு முதலாயினபகலைச்செய்தமையானும், 'இடையொரு கணத்தினுள்ளே யிரண்டு பகலுமுண்டே' என்றார்.

57. நீர்கள் - முன்னிலைப் பன்மைப்பெயர்; இதனை 'மேவித்தொழு துய் மினீர்கள்' என்றதனானறிக.

58. கலாபம் - பதினாறு கோவைமணி. இது மாதரிடையணியுளொன்று.

60. காற்செறிவேகம் - வாயுவேகம்.

அருவிபெய்வரையிற்பொங்கியங்குசமிமிரவெங்கும்
இரியலிற்சனங்கள்சிந்துமிளங்களிச்சிறுகண்யானை
வரிசிறைத்தும்பிவேறோர்வீழ்மதந்தோய்ந்துமாதர்
சுரிகுழற்படியவேற்றின்பிடியொடுந்தொடர்ந்துசெல்ப. 62

நிறைமதித்தோற்றங்கண்டநீணெடுங்கடலிதென்ன
வறைபறைதுவைப்பத்தேருமானையுமாடன்மாவுங்
கறைகெழுவேற்கணாருமைந்தருங்கவினியொல்லை
நெறியிடைப்படரவேந்தனேயமங்கையரெழுந்தார். 63

பொய்கையங்கமலக்கானிற்பொலிவதோரன்னமென்னக்
கைகயர்வேந்தன்பாவைகணிகையரணியினீட்ட
ஐயிறுநூறுசூழ்ந்தவாய்மணிச்சிவிகைதன்மேல்
தெய்வமங்கையருநாணத்தேனிசைமுரலப்போனாள். 64

காரணமின்றியேயுங்கனலெழவிழிக்குங்கண்ணார்
வீரவேத்திரத்தார்தாழ்ந்துவிரிந்தகஞ்சுகத்துமெய்யார்
தாரணிபுரவிமேலார்தலத்துளார்சலித்தசொல்லார்
ஆரணங்கனையமாதரடிமுறைகாத்துப்போனார். 65

விரிமணித்தார்கள்பூண்டவேசரிவெரிநிற்றோன்றார்
அரிமலர்த்தடங்கணல்லாராயிரந்திரட்டிசூழக்
குருமணிச்சிவிகைதன்மேற்கொண்டலின்மின்னிதென்ன
இருவரைப்பயந்தநங்கையாழிசைமுரலப்போனாள். 66

செங்கையின்மஞ்ஞையன்னஞ்சிறுகிளிபூவைபாவை
சங்குறைகழித்தவன்னசாமரைமுதலதாங்கி
யிங்கலதெண்ணுங்காலிவ்வெழுதிரைவளாகந்தன்னின்
மங்கையரில்லையென்னமடந்தையர்மருங்குபோனார். 67

வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்முகத்தைவெண்மதியமென்று
கொள்ளையிற்சுற்றுமீன்கள்குழுமியவனையவூர்தி
தெள்ளரிப்பாண்டிப்பாணிச்செயிரியரிசைத்தேன்சிந்த
வள்ளலைப்பயந்தநங்கைவானவர்வணங்கப்போனாள். 68

கூனொடுகுறளுஞ்சிந்துஞ்சிலதியர்குழாமுங்கொண்ட
பாணிறப்புரவியன்னப்புள்ளெனப்பாரிற்செல்லத்

---

63. நேயமங்கையரென்றது - அறுபதினாயிரமாதரை.
66. வெரிந் - முதுகு. இருவரைப்பயந்த நங்கை - சுமத்திரியை.

தேனொடுஞிமிறும்வண்டுந்தும்பியும்பாடல்செய்ய
பூநிறைகூந்தன்மாதர்புடைபிடிநடையிற்போனார். 69
துப்பினின்மணியிற்பொன்னிற்சுடர்மரகதத்தின்முத்தின்
ஒப்பறவமைந்தபைம்பூணொளியம்புகழ்வேறி
முப்பதிற்றிரட்டிகொண்டவாயிரமுகிழ்மென்கொங்கைச்
செப்பருந்திருவினல்லார்தேர்மிசையேறிப்போனார். 70
செவிவயினமிர்தகேள்விசெறித்திட்டோர்தூயநாவின்
அவிகையினளிக்குமீராயிரத்திரட்டியாறுங்
கவிகையினீழற்கற்பினருந்ததிகணவன்முந்நூற்
சிவிகையினன்னமூருந்திசைமுகனென்னச்சென்றான். 71
பொருகளிறிவுளிபொற்றேர்பொலங்கழற்குமரர்முந்நீர்
அருவரைசூழ்ந்ததென்னவருகுமுன்பின்னுஞ்செல்லத்
திருவளர்மார்பர்தெய்வச்சிலையினர்தேரர்வீரர்
இருவருமுனிபின்போனவிருவருமென்னப்போனார். 72
நித்தியநியமமுற்றிநேமியான்பாதஞ்சென்னி
வைத்தபின்மறைவல்லோர்க்குவரம்பறுமணியும்பொன்னும்
பத்தியானிரையும்பாரும்பரிவுடனல்கிப்போய்முன்
முத்தணிவைரப்பூணான்மங்கலமுகூர்த்தநண்ணான். 73
இருபிறப்பாளரெண்ணாயிரர்மணிக்கலசமேந்தி
யருமறைவருக்கமோதியறுகுநீரளித்துவாழ்த்த
வான்முறைவந்தார்கோடிமங்கலமழலைச்செவ்வாய்ப்
பருமணிக்கலாபத்தார்பல்லாண்டிசைபரவப்போனான். 74
கண்டிலனென்னையென்பார்கண்டனனென்னையென்பார்
குண்டலம்வீழ்ந்ததென்பார்குறுகரிதினிச்செலென்பார்
உண்டுகொலெழுச்சியென்பாரொலித்ததுசங்கமென்பார்
மண்டலவேந்தர்வந்துநெருங்கினர்மயங்கிமாதோ. 75
பொற்றொடிமகளிரூரும்பொலங்கொடார்ப்புரவிவெள்ளஞ்
சுற்றுறுகமலம்பூத்ததொடுகடற்றிரையிற்செல்லக்
கொற்றவேன்மன்னர்செங்கைப்பங்கயக்குழாங்கள்கூம்ப
மற்றொருகதிரோனென்னமணிநெடுந்தேரிற்போனான். 76

---

69. தேன்முதலாயின வென்றது - நால்வகை வண்டினை. ஞிமிறு - பொன்வண்டு.

72. இருவரென்றது - பரதசத்துருக்கரை.

73. நேமியான் - ஆயிர மோலியரும் பாஞ்சடை.

ஆர்த்ததுவிசும்பைமுட்டிமீண்டகன்றிசைகளெங்கும்
போர்த்ததங்கொருவர்தம்மையொருவர்கட்புலங்கொளாமைச்
சீர்த்ததுசெறிந்ததோடித்திரைநெடுங்கடலையெல்லாந்
தூர்த்ததுசகரரோடுபகைத்தெனத்தூளிவெள்ளம். 77
சங்கமும்பணையுங்கொம்புந்தாளமுங்காளத்தோடு
மங்கலபேரிசெய்தபேரொலிமழையையோட்டத்
தொங்கலுங்குடையுந்தோகைப்பிச்சமுஞ்சுடரையோட்டத்
திங்கள்வெண்குடைகண்டோடநீதவருமருளச்சென்றான். 78
மந்திரகீதவோதைவலம்புரிமுழங்குமோதை
அந்தணராசியோதையார்த்தெழுமுரசினோதை
கந்துகொல்களிற்றினோதைகடிகையர்கவிதையோதை
இந்திரதிருவன்செல்லவெழுந்தனதிசைகளெல்லாம். 79
நோக்கியதிசைகளெல்லாந்தன்னையேநோக்கிச்செல்லான்
வீக்கியகழற்கால்வேந்தர்விரிந்ததைகைம்மலர்கள்கூப்பத்
தாக்கியகளிறுந்தேரும்புரவியும்படைஞர்தாமும்
ஆக்கியதூளிவிண்ணுமண்ணுலகாக்கப்போனான். 80
வீரருங்களிறுந்தேரும்புரவியுமிடைந்தசேனை
பேர்விடமில்லைமற்றோருலகில்லைபெயர்வதாக
நீருடையாடையாளுநெளிந்தனண்முதுகையென்றாற்
பார்பொறைநீக்கினானென்றுரைத்ததெப்பரிசுமன்றே. 81
இன்னணமேகிமன்னன்யோசனையிரண்டுசென்றான்
பொன்வரைபோலுமிந்துசயிலத்தின்சாரல்புக்கான்
மன்மதக்களிறுமாதர்கொங்கையுமாரனம்புந்
தென்வரைச்சாந்துநாறுஞ்சேனையுமிறுத்ததன்றே. 82

ஆக திருவிருத்தம் - 898.

## 14—வது வரைக்காட்சிப்படலம்

கோவையார்வடக்கொழுங்குவடொடிதரநிவந்த
ஆவிவேட்டனவரிசிலையனங்கன்மேற்கொண்ட
பூவைவாய்ச்சியர்முலைசிலர்புயத்தொடும்பூட்டத்
தேவதாரத்துஞ்சந்தினும்பூட்டினசிலமா. 1
நேரொடுங்கலில்பகையினைநீதியால்வெல்லும்
சோர்விடம்பெறுவுணர்வினன்சூழ்ச்சியேபோல

காரொடுந்தொடர்கவட்டெழின்மராமரக்குவட்டை
வேரொடுங்கொடுகிரியெனநடந்ததோர்வேழம். 2

திரண்டதாணெடுஞ்செறிபணைமருதிடையொடியப்
புரண்டுபின்னருமுரலொடுபோனவன்போல
வுருண்டுகாறொடர்பிறகிடுதறியொடுமொருங்கே
யிரண்டுமாமரமிடையிறநடந்ததோரியானை. 3

கதங்கொள்சீற்றத்தையாற்றுவானினியனகழறிப்
பதங்கொள்பாகனுமங்கிரியொத்தனன்பன்னூல்
விதங்களாலவன்மெல்லெனமெல்லெனவிளம்பும்
இதங்கள்கொள்கிலாவிறைவனையொத்ததோரியானை. 4

மாறுகாண்கிலதாய்நின்றுமழையெனமுழங்குந்
தாறுபாய்கரிவனகரிதண்டத்தைத்தடவிப்
பாறுபின்செலக்காலெனச்செல்வதுபண்டோர்
ஆறுபோகியவாறுபோமாறுபோன்றதுவே. 5

பாத்தயானையிற்பதங்களிற்படுமதநாறக்
காத்தவங்குசமிமிர்ந்திடக்கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலம்பாலையைப்பொடிப்பொடியாகக்
காத்திரங்களாற்றலத்தொடுந்தேய்த்ததோர்களிறு. 6

அலகிலானைகளனேகமுமவற்றிடைமிடைந்த
திலகவாணுதற்பிடிகளுங்குருளையுஞ்செறிந்த
உலவைநீள்வனத்தூதமேயொத்ததவ்வூதத்
தலைவனேயொத்துப்பொலிந்ததுசந்திரசயிலம். 7

தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவர்த
மருண்டபுன்மையைமாற்றுவரெனுமிதுவழக்கே
உருண்டவாய்தொறும்பொன்னுருளுரைத்துரைத்தோடி
இருண்டகல்லையுந்தன்னிறமாக்கியவிரதம். 8

கொவ்வைநோக்கியவாய்களையிந்திரகோபங்
கவ்விநோக்கினவென்றுகொல்காட்டினமயில்கள்

---

3. உரலொடுபோனவனென்றது - கண்ணபிரானை.

4. சீற்றம்-சிறிதுபொழுது நிகழுங்கோபம். இது சீறு என்னும் பகுதி யடியாகப் பிறந்ததென்றறியாதார் சிறுமையென்னும் பண்டியாகப் பிறந்த தென்பர். 5. வனகரிதண்டத்தை தடவுதல் - மோப்பம் பிடித்தல்.

9. கவ்விநோக்கனவென்று கால் எனற்குக் கவ்விய அழகுடையன வென்றே எனக்கொள்க.

நவ்விநோக்கியர்நலங்கொண்மேகலைபொலஞ்சாயற்
றநத. 9

உய்க்கும்வாசிகளிழிந்திளவன்னத்திரளொத்துங்கி
மெய்க்கலாபமுங்குழைகளுமிழைகளும்விளங்கத்
தொக்கமென்மாநிழல்படத்துவன்றியகுழல்
புக்கமங்கையர்பூத்தகொம்பாமெனப்பொலிந்தார். 10

தளங்கொடாமரையெனத்தளிரடியினுமுகத்தும்
வளங்கொண்மாலைவண்டலமரவழிவருந்தினராய்
விளங்குதம்முருப்பளிங்கிடைவெளிப்படவேறோர்
துளங்குபாவையிற்றோழியரயிர்த்திடத்துயின்றார். 11

பிடிபுக்காயிடைமின்னொடும்பிறங்கியமேகம்
படிபுக்காலெனப்படிதரப்பரிபுரம்புலம்பத்
துடிபுக்காவிடைத்திருமகடாமரைதுறந்து
குடிபுக்காலெனக்குடிபுக்கார்கொடியன்னமடவார். 12

வேறு

உண்ணமுதமுந்திபெனையோர்நகர்கொணர்ந்த
துண்ணெனுமுழக்கினதுருக்கர்தரவந்த
மண்மகடன்மார்பினணிவன்னசரமென்னப்
பண்ணியல்வயப்பரிகள்பந்தியினிரைத்தார். 13

நீர்த்திரைநிரைத்தவெனநீடிரைநிரைத்தார்
ஆர்கலிநிரைத்தவெனவாவணநிரைத்தார்
கார்நிரையெனக்களிறுகாவிடைநிரைத்தார்
மாருதநிரைத்தவெனவாசிகணிரைத்தார். 14

நடிக்குமயிலென்னவருநவ்விவிழியாரும்
வடிக்குமயில்வீரருமயங்கினர்திரிந்தார்
இடிக்குமுரசக்குரலினெங்குமுரல்சங்கின்
கொடிக்களினுணர்ந்தரசர்கோநகரடைந்தார். 15

மிதிக்கநிமிர்தூளியின்மறைக்கமணிமெய்யைச்
சுதைக்கணுரையைப்பொருவுதூசுகொடுதூய்தா
வுதிர்த்தனரிளங்குமரரோவியரிலோவம்
புதுக்கினரெனத்தருணமங்கையர்பொலிந்தார். 16

தாருயர்தடக்கிரியிழிந்துதரைசேருங்
கோளரியெனக்கரிகள்கொற்றவரிழிந்தார்

---

12. ஆயிடை என்புழி அகரச்சுட்டு நீண்டது.

பாளைவிரியொத்தலவுசாமரைபடப்போய்
வாளெழுநிரைத்தபடமாடமனைபுக்கார். 17

தூசினெடுவெண்படமுடைக்குடில்கடோறும்
வாசநகைமங்கையர்முகங்கண்மறைவானின்
மாசின்மதியின்கதிர்வழங்குநிறமெங்கும்
வீசுதிரைவெண்புனல்விழுங்கியதுபோலும். 18

மண்ணுறவிழுந்துநெடுவாளுறவெழுந்து
கண்ணுதல்பொருந்தவருகண்ணனின்வருங்கார்
உண்ணிறநறும்பொடியைவீசியொருபாகம்
வெண்ணிறநறும்பொடிபுனைந்தமதகைவேழம். 19

தீயவரொடொன்றியதிறந்தருநலத்தோர்
ஆயவரையந்நிலையறிந்தனர்துறந்தாங்
கேயவருநுண்பொடிபடிந்துடனெழுந்தொண்
பாப்பரிவிரைந்துதிரிகின்றனபரந்தே. 20

மும்மைபுரிவன்கயிறுகொய்துசெயன்மொய்ம்பாற்
றம்மையுமுணர்ந்தகைகண்டுவிரைகின்ற
அம்மையினொடிம்மையையறிந்துநெறிசெல்லுந்
செம்மையவரென்னநனிசென்றனதுரங்கம். 21

விழுந்தபனியன்னதிரைவீசுபுரைதோறுங்
கழங்குபயின்மங்கையர்கருங்கண்மிளிர்கின்ற
தழங்குகழிசிந்தியதரம்பயிறரங்கத்
தெழுந்திடைபிறழ்ந்தொளிர்கொழுங்கயல்களென்ன. 22

வெள்ளநெடுவாரியுறவீசியிளவேனுங்
கிள்ளவெழுகின்றபுனல்கேளிரின்விரும்பித்
தெள்ளுபுனலாறுசிறிதேயுதவுகின்ற
வள்ளதுமறுத்ததவும்வள்ளலையுமொத்த. 23

துன்றிநெறிபங்கிகடுளக்கியழலோடு
மின்றிரிவவென்னமணியாரமிளிர்மார்பர்

---

17. படமாடம்-ஆடையாணியன்றமனை, கூடாரம் என இக்காலவழக்கு.

21. அம்மை இம்மைப்பயன்களை யறிந்து முத்திநெறிப்படர்பவராதலிற் செம்மையவரென்றார்.

22. கழங்கு என்றது - கழங்காடலை.

23. நீரைக்கலக்கும் மதயானைகளை மதுகயிடவரோடுவமை கூறினார்.

மன்றன்மணநாறுபடமாடநுழைகின்றார்
குன்றின்முழைதோறுநுழைகோளரிகளொத்தார். 24

நெருங்கயிலெயிற்றனையசெம்மயிரினெற்றிப்
பொருங்குலிகமப்பியனபோர்மணிகளார்ப்பப்
பெருங்களிறலைப்புனல்கலக்குவனபெட்குங்
கருங்கடல்கலக்குமதுகயிடவரையொத்த. 25

ஒக்கநெறியுய்ப்பவருரைத்தகுறிகொள்ளா
பக்கவினமொய்த்தயலலைக்கநனிபாரா
கைக்கரிமதத்தவிலைமாதர்கலையல்குற்
புக்கவரையொத்தனபுனற்சிறைகளேறு. 26

துகிலிடைமடந்தையரொடாடவர்துவன்றிப்
பகலிடையவட்டிலின்மடுத்தெரிபரப்பும்
அகிலிடுகொழும்புகையழுங்கலின்முழங்கா
முகில்படுநெடுங்கடலையொத்துளதம்மூதூர். 27

வேறு

கமருறுபொருப்பின்வாழும்விஞ்சையர்காணவந்தார்
தமரையுமறியார்நின்றுதிகைப்புறுந்தகைமைசான்ற
குமரருமங்கைமாருங்குழுமலால்வழுவிவிண்ணின்
றமரர்நாடிழிந்ததென்னப்பொலிந்ததவ்வணிகவெள்ளம். 28

வெயினிறங்குறையச்சோதிமின்னிழல்பரப்பமுன்னாந்
துயிலினணார்செவ்வியாருந்துனியுறுமுனிவினோடுங்
குயிலொடுமினிதுபேசிச்சிலம்பொடுமினிதுகூவி
மயிலினந்திரிவதென்னத்திரிந்தனர்மகளிரெல்லாம். 29

தாளிணைகழல்களார்ப்பத்தாரிடையளிகளார்ப்ப
வாள்புடையிலங்கச்செங்கேழ்மணியணிவலயமின்னத்
தோளெனவுயர்ந்தகுன்றின்சூழல்களினிதுநோக்கி
வாளரிதிரிவதென்னத்திரிந்தனர்மைந்தரெல்லாம். 30

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப்
பற்றியவளைந்தவென்னப்பரந்துவந்திறுத்தசேனைக்
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொம்பனார்வந்
துற்றவர்காணலுற்றமலைநிலையுரைத்துமன்றே. 31

29. துனி - கலவிக்காலத்து ஆடவர்பாற்குற்றங்காரணமாக மாதரிடத்துண்டாவதோர் சிறுபிணக்கு.

பம்புதேன்மிஞிறுதும்பிபரந்திசைபாடியாடு
மும்பர்வானகத்தினின்றவொளிதருதருவினோங்குங்
கொம்புகள்பனைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிகளுயிரேயன்னதுணைமடப்பிடிக்குநல்கும். 32

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர்க்குவளையன்ன
கண்மலர்க்கொடிச்சிமார்க்குக்கணித்தொழில்புரியும்வேங்கை
யுண்மலர்வெறுத்ததும்பிபுதியதேறலுறாதாகத்
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே. 33

மீனெனும்பிடிகளோடும்விளங்குவெண்மதிநல்வேழங்
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குமுறிப்பாயுந்
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்முந்தி
வானநீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ. 34

குப்புறற்கருமையாலக்குலவரைச்சாரல்வைகி
யொப்பறத்துளங்குகின்றவுடுபதியாடியின்கண்
இப்புறத்தேயுங்காண்பார்குறத்தியரியைந்தகோலம்
அப்புறத்தேயுங்காண்பாரரம்பையரழகுமாதோ. 35

உதியுறுதுருத்தியூதுமுலையுறுதீயும்வாயின்
அதிவிடநீறுசெய்யுமுண்கிலாதாவியுண்ணுங்
கொதிநுனைவேற்கண்மாதர்குறத்தியர்தருபெற்றேடு
மதியினைவாங்கியொப்புக்காண்குவர்குறவர்மன்னோ. 36

பேணுதற்குரியமேகக்குருளையம்பிடிகளீன்ற
காணுதற்கினியவேழக்கன்றுகளிக்குமுன்றில்
கோணுதற்குரியதிங்கட்குழவியுங்குறவர்தங்கள்
வாணுதற்கொடிச்சிமார்மகவொடுதவழுமாதோ. 37

அஞ்சனக்கிரியினன்னவழிவுகள்யானைகொன்ற
வெஞ்சினத்தரியின்றிண்காற்கவட்டொடுவிஞ்சைவேந்தர்
குஞ்சியந்தலத்துநீலக்குலமணித்தலத்துமாதர்
பஞ்சியங்கமலம்பூத்தபசுஞ்சுவடுடைத்துமன்னோ. 38

செங்கயலனையநாட்டஞ்செவியுறமுறுவதொன்று
பொங்கிருங்கூந்தல்சோராபுருவங்கணெரியாபூவின்

---

33. தினைக்குரல் கொய்தற்கு வேங்கைமலர்தல் காலமாதலின் கணித் தொழில் புரியும் வேங்கை யென்றார்.

அங்கையுமிடறுங்கூட்டிநரம்பளைந்தமுதமூறு
மங்கையர்பாடல்கேட்டுக்கின்னரமயங்குமாதோ. 39

கள்ளவிழ்கோதைமாதர்காதொடுமுறவுசெய்யுங்
கொள்ளைவாட்கண்ணினார்தங்குங்குமக்குப்பைதங்கும்
தெள்ளியபளிக்குப்பாறைத்தெளிநனைமணியிற்செய்த
வள்ளமுநறவுமென்னவரம்பிலபொலியுமன்றே. 40

ஆடவராவிசோரவஞ்சனவாரிசோர
ஊடலிற்சிவந்தநாட்டத்தும்பர்தம்மரம்பைமாதர்
தோடவிழ்கோதைநின்றுந்துறந்தமந்தாரமாலை
வாடலநறவுகுத்தவயின்வயின்மயங்குமாதோ. 41

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக்
கூந்தலங்கமுகின்பாளைகுழலினோடொப்புக்காண்பார்
ஏந்திழையரம்பைமாதர்பொரிமணிக்கடகம்வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். 42

சரம்பயில்சாபமென்னப்புருவங்கடம்மினுடை
நரம்பினோடினிதுபாடிநாடகமயிலோடாடு
அரம்பையர்வெறுத்துநீத்தவவிர்மணிக்கோவையாரம்
வரம்பிலகடுவன்பூணமந்திகண்டுவக்குமாதோ. 43

சாந்துயர்தடங்கடோறுந்தாதுராகத்திற்சார்ந்த
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலுங்
காந்தினமணியின்சோதிக்கதிரொடுங்கலந்துபூசச்
சேந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமன்றே. 44

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முத்தஞ்சிந்தி
மலைமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான
அலகில்பொன்னலம்பியாரஞ்சேர்ந்துசோருருவிமாலை
யுலகளந்தவன்றன்மார்பினுத்தரீயத்தையொத்த. 45

கோடுலாநாகப்போதோடிலவங்கமலருங்கூட்டிச்
சூடுவார்களிவண்டோச்சித்தூநறுந்தேறலுண்பார்
கேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும்
பாடலாலூடனீங்கும்பரிமுகமாக்கள்கண்டார். 46

---

41. மந்தாரம் - பஞ்சதருக்களிலொன்று.
44. தாதுராகம் - காவிக்கல்.

பெருங்களிப்புற்றமைந்தர்பேரெழிலாகத்தோடு
பொருந்துணைக்கொங்கையன்னபொருவிலகோங்கரும்பின்மாடே
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டிற்றங்கள்
கருங்குழற்களிக்கும்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார். 47

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்கணைமுடுகிப்புக்க
சுடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினார்தாம்
வடகத்தோடுடுத்ததூசைமாசிலீர்நனைப்பநோக்கிக்
கடகக்கையெறிந்துதம்மிற்கருங்குழல்விரைநக்கார். 48

பூவணைபலவுங்கண்டார்பொன்னறைமாலைகண்டார்
மேவருங்கோபமன்னவெள்ளிலைத்தம்பல்கண்டார்
ஆவியினினியகொண்கர்ப்பிரிந்தறிவழிந்தவிஞ்சைப்
பாவையர்வைகத்தியந்தபல்லவசயனங்கண்டார். 49

பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப்
பீனவெம்முலையினிட்டபெருவிலையாரமாடத்
தேன்முரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார். 50

சுந்தரவதனமாதர்துவரிதழ்ப்பவளவாயும்
அந்தமில்கரும்புந்தேனுமமிழ்துமுண்டல்குல்விற்குர்
பைந்தொடிமகளிர்கைத்தோர்பசையில்லையென்னவிட்ட
மைந்தரினீத்ததீந்தேன்வள்ளங்கள்பலவுங்கண்டார். 51

அற்பகலாக்குஞ்சோதிப்பளிக்கறையமளிப்பாங்கர்
மற்பகமலர்ந்ததிண்டோள்வானவர்மணந்தகோல
விற்பகைநுதலினார்தங்கலவியின்வெறுத்துநீத்த
கற்பகமீன்றமாலைகலனொடுங்கிடப்பக்கண்டார். 52

கையெனமலரவேண்டியருட்பியகாந்தளேறுக்கிப்
பையரவிதுவென்றஞ்சிப்படைக்கண்கள்புதைக்கின்றாரும்
நெய்திரள்வயிரப்பாறைநிழலிடைத்தோன்றும்போதைக்
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரும். 53

பின்னங்களுகிரிற்செய்துபிண்டியந்தளிர்க்கைக்கொண்ட
சின்னங்கண்முலையினப்பித்தேமலர்கொய்கின்றாரும்

---

48. வடகம் - மேற்போர்வை.
50. பானல் - நீலோற்பலம்.

வன்னங்கள் பலவுந்தோன் றமணியொளிர்மலையினில்லா
கின்றுரும். 54

வேறு

ஈனுமாழையிளந்தளிரேயொளி
ஈனுமாழையிளந்தளிரேயிடை
மானும்வேழமுநாகமுமாதர்தோண்
மானும்வேழமுநாகமுமாடெலாம். 55

திமிரமாவுடற்குங்குமச்சேதகந்
திமிரமாவொடுஞ்சந்தொடுந்தேய்க்குமால்
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார்
அமரமாதரையொத்ததவ்வானமே. 56

போரவாவொடுமாசுணம்பேரவே
போரவாவொடுமாசுணம்பேரவே
ஆரவாரத்தினோடுமருவியே
ஆரவாரத்தினோடுமருவியே. 57

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம்
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை
யகிலுமாரமுமாரவங்கோங்குமே
யகிலுமாரமுமாரவங்கோங்குமே. 58

துன்னரம்பைநிரம்பியதொல்வரை
துன்னரம்பையருருவிற்றோன்றுமால்
கின்னரம்பயில்கீதங்களென்னவாங்
கின்னரப்பயில்கின்றனரேழைமார். 59

ஊறுமாகடமாவுறலுங்கெலாம்
ஊறுமாகடமாமதமோடுமே

ஆறுசேர்வனமாவரையாடுமே.

கல்லியங்குகருங்குறமங்கையர்
கல்லியங்ககழ்காமர்கிழங்கெடா
வல்லியங்கணெருங்குமருங்கெலாம்
ீம.

54. மணி - நவமணிகளையுங்கொள்க.

கோளிபங்கயமூழ்கக்குளிர்கயங்
கோளிபங்கயமூழ்கக்குலைந்தவால்
ஆளிபொங்குமரம்பையிரோதியே
யாளிபொங்குமரம்பையரோதியே. 62

ஆகமாலையமாகவுளாள்பொலி
வாகமாலையுளாரெனலாகுமான்
மேகமாலைமிடைந்தனமேலெலா
மேகமாலைமிடைந்தனசிறலாம். 63

பொங்குசேதவுகர்பூமிதிருமென
எங்குமாதருமைந்தருமீண்டியத்
துங்கமால்வரைச்சூழல்கவரியானையும்
தங்கிநீங்கலர்தாமிவரிதாடுவார். 64

இறக்கமென்பதையெண்ணிலரென்னுங்காற்
பிறக்குமென்பதோர்பீழையதாதலாற்
றுறக்கமெய்தியதூயவரேயென
மறக்கிற்றிலரன்னதன்மாண்பெலாம். 65

வேறு

மஞ்சார்மலைவாரணைபொத்ததுவானினேறும்
வெஞ்சாயையுடைக்கிரங்கதன்மீதுபாயும்
பஞ்சானனமொத்ததுமற்றதுபாயவுறுஞ்
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெக்கர்வானம். 66

திணியார்சினைமாமரம்யாவையுஞ்செக்கர்பாயத்
தணியாதகருந்தளிரீன்றனபோன்றதாழ
அணியாரொளிவந்தாமிரம்பலினங்கமெங்கு
மணியாலியன்றம்மலையொத்ததவ்வாசில்குன்றம். 67

கண்ணுக்கினிதாகிவிளங்கியகாட்சியாலும்
எண்ணற்கரிதாகியிலங்குசிரங்களாலும்
வண்ணக்கொழுஞ்சந்தனச்சேர்ந்ததுமார்பணிந்த
அண்ணற்கரியோன்றனையொத்ததவ்வாசில்குன்றம். 68

---

62. ஆளி — வண்டுகள்.

66. ஆளி - சிங்கம். செக்கர்வான முதலியன கூறிப்போந்தமையானும், வருவது மாலைப்போதாகலானும் மஞ்சார்மலை என்பதற்கு அத்தகிரியெனப் பொருளுரைத்துக்கொள்க. பஞ்சானனம் — விரிந்த முகமுள்ளது.

68. சந்தனச்சேதகம் — சந்தனக்குழம்பு.

ஊனும்முயிருமனையாரொருவர்க்கொருவர்
தேனும்மிஞிறுஞ்சிறுதும்பியும்பம்பியார்ப்ப
யானையினமும்பிடியும்மிகலாளியேறு
மானுங்கலையும்மெனமால்வரைவந்திழிந்தார். 69

கால்வானகத்தேருடைவெய்யவன்காய்கடுங்கட்
கோன்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்கோளரிம்மா
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேறிருந்த
மால்யானையீட்டமெனவந்துபரந்ததன்றே. 70

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும்
அந்தாரரசர்க்கரசன்றனனீகவெள்ளம்
நந்தாதொலிக்குநரலைப்பெருவேலையெல்லாஞ்
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்தவன்றே. 71

தண்ணற்கடலிற்றளிசிந்துதரங்கநீங்கி
விண்ணிற்சுடர்வெண்மதிவந்ததுமீன்கள்சூழ
வண்ணக்கதிர்வெண்ணிலவின்றெனவாலுகத்து
டொண்ணித்திலமீன்றொளிர்வால்வளையூர்வதொத்தே. 72

மீனாறுவேலையொருவெண்மதியீனும்வேலை
நோனாததனைநுவலற்கருங்கோடிவெள்ளம்
வானாடியரிற்பொலிமாதர்முகங்களென்னும்
ஆனாமதியங்கண்மலர்ந்ததனீகவேலை. 73

மண்ணும்முழவின்னொலிமங்கையர்பாடலோதை
பண்ணுநரம்பிற்பயிலாவிசைப்பாணியோதை
கண்ணும்முடைவேயிசைகண்ணுளராடரோறும்
விண்ணும்மருளும்படிவிம்மியெழுந்தவன்றே. 74

மணியின்னணிநீக்கிவயங்கொளிமுத்தம்வாங்கி
அணியும்முலையாரகிலாவிபுலர்த்துநல்லார்
தணியும்மதுமல்லிகைத்தாமம்வெறுத்துவாசந்
திகைக்கத்திகைசேர்க்கலானாரும்.

69. ஆனையினமென்றது - பிடியெனப் பிற்கூறலாற்றினமெனக் கூறுக.
70. கால் - ஈண்டு ஒற்றையுருளை.
73. நோனா - பொறாத.
74. பாணியோதை - தாளவோசை. கண்ணுளர் - நாடகர்.
75. பித்திகைக்கத்திகை - கருமுகைமாலை.

புதுக்கொண்டவேழம்பிணிப்போர்புனைபாடலோதை
மதுக்கொண்டமாந்தர்மடவாரின்மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற்புனைமேகலைப்பூசலோதை
கதக்கொண்டயானைகளியாற்களிக்கின்றவோதை. 76

உண்ணுவமுதன்னகலைப்பொருளுள்ளதுண்டும்
பெண்ணாரமுதம்மனையார்மனத்தூடல்போர்க்கும்
பண்ணார்ந்தபாடல்செவியாற்பயன்கொளாடல்
கண்ணாணினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே. 77

ஆக திருவிருத்தம் - 905.

---

## 15 - வது பூக்கொய்படலம்

மீனுடையெயிற்றுக்கங்குற்கனகனைவெகுண்டுவெய்ய
கானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித்
தானுடையுதயமென்னுந்தமனியத்தறியினின்று
மானுடமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். 1

முறையெலாமுடித்தபின்னர்மன்னனுமூரித்தேர்மேல்
இறையெலாம்வணங்கப்போனானெழுந்துடன்சேனைவெள்ளங்
குறையெலாஞ்சோலையாகிக்குழியெலாங்கழுநீராகித்
துறையெலாங்கமலமானசோணையாறடைந்ததன்றே. 2

அடைந்தவணிறுத்தபின்னரருக்கனுமும்பர்க்கார
மடந்தையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமுங்
குடைந்துவண்டுறையுமென்பூககொய்துநீராடமைதீர்
தடங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார். 3

திண்சிலைபுருவமாகச்சேயரிக்கருங்கணம்பாற்
புண்சிலசெய்வரென்றுபோவனபோன்றமஞ்ஞை
பண்சிலம்பளிகளார்ப்பநாணிறப்பறந்துபோன்ற
ஒண்சிலம்பார்ப்பமாதரொதுங்குதோறொதுங்குமன்னம். 4

---

76. புனைபாடல் - யானைகளைத்தளைக்குங்காற் பாடும்பாட்டு.

77. கலைப்பொருளுள்ளதுண்டு மென்றது - கலையின் றுணிந்தபொருளைச் செவியாகிய வாயால் நுகர்ந்துமெனக்கொள்க. கலைப்பொருள் - சாதியொருமை.

1. கனகனென்றது - இரணியனை, மானுடைமடங்கல் - நரமடங்கல்.

செம்பொன்செய்சுருளுந்தெய்வக்குழைகளுஞ்சேர்ந்துமின்னப்
பம்புதேனலம்பவொல்கிப்பணைபிணையுடனோக்கிக்
கொம்பொடுங்கொடியனாரைக்குறித்தறிந்துணர்தறேற்றார்
வம்பவிழலங்கன்மாலைமைந்தருமயங்கினின்றார்.

பாசிழைப்பரவையல்குற்பண்டருநிலவித்தண்டேன்
மூசியகூந்தன்மாதர்மொய்த்தபேரவைகேட்டுக்
[illegible]
வாசகம்வல்லார்முன்னின்றியாவர்வாய்திறக்கவல்லார். 6

நஞ்சினுங்கொடியநாட்டமமுதினுநயந்துநோக்கிச்
செஞ்செவேகமலக்கையாற்றீண்டலுந்தீண்டகொம்பர்
தஞ்சிலம்படியின்மென்பூச்சொரிந்துடன்றாழ்ந்தவென்றால்
வஞ்சிபோன்மருங்குலார்மாட்டியாவரேவணங்கிலாதார். 7

அம்புயத்தணங்கினன்னாரம்மலர்க்கைகளண்ட
வம்பியலலங்கற்பங்கிவாளரிமருளுங்கோளார்
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்
கொம்புகடாமுமென்றல்கூறலாந்தகைமைத்தொன்றோ. 8

நதியினுங்குளத்தும்பூவாநளினங்கள்குவளையோடு
மதிநுதல்வல்லிபூப்பநோக்கியமாலைத்தும்பி
யதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா
புதியனகண்டபோழ்துவிடுவரோபுதுமைபார்ப்பார். 9

உலந்தருவயிரத்திண்டோளொழுகிவாளொளிகொண்மேனி
மலர்ந்தபூந்தொடையன்மாலைமைந்தர்பான்மயிலினன்னார்
கலந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாரா
புலந்தவர்போலநின்றுவளைகிலபூத்தகொம்பர். 10

பூவெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவளநோக்கி
யாவையாங்கணவர்கண்ணுக்கழகிலவிவையென்றெண்ணிக்
கோவையும்வடமுநாணுங்குழைகளுங்குழையப்பூட்டிப்
பாவையர்பணிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார். 11

---

6. வாசகம்வல்லார் - வாய்வன்மையுடையார். ஓரறிவுயிரேதாழின் ஆறறிவுயிர்தாழ்வது கூறாதேயமைந்ததென்க.

8. வாளரிமருளுங்கோள் - கம்பீரநடை, உடல், வலி, சமர்க்கஞ்சாத்தறுகண்மையின்றோரன்னவற்றை.

8. நதியினுங்குலத்தும்பூவாநளினங்கள் - முகத்தாமரைகள்.

10. உலம் - திரண்டகல்.

வேறு

துறும்போதினிற்றோன்றுவைத்துண்டுழறும்பிரிட்ட
நறுங்கோதையோடுநனைசின்னமூழ்த்தநல்லார்
வெறுங்கூந்தன்மொய்க்கின்றனவேண்டலவேண்டுபோதும்
உறும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே. 12

மெய்ப்போதினங்கைக்கணியன்னவண்வெண்பளிங்கிற்
பொய்ப்போதுதாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி
யிப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்
கைப்போதினோடுநெடுங்கண்பனிகாநின்றாள். 13

கோளுண்டதிங்கண்முகத்தாளொருத்திகொம்பொர்மன்னன்
தோளுண்டமாலையொருதோகையைச்சூட்டநோக்கித்
தாளுண்டகச்சிற்றளையுண்டமுலைக்கண்மீது
வாளுண்டகண்ணீர்மழையுண்டெனவாரநின்றாள். 14

மயில்போல்வருவாண்மனங்காணியகாதன்மன்னன்
செயிர்தீர்மலர்க்காவினொர்மாதவிச்சூழல்சேரப்
பயில்வாளிறைபண்டுபிறிந்தறியாள்பதைத்தாள்
உயிர்நாடியொல்குற்றுடல்போலலமந்தழன்றாள். 15

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற
நெய்தாவும்வேலானொடுநெஞ்சுபுலந்துநின்றாள்
எய்தாதுநின்றம்மலர்நோக்கியெனக்கிதீண்டக்
கொய்தீதியென்றோர்குயிலைக்கரங்கூப்புகின்றாள். 16

செம்மாந்ததெங்கின்னிளநீரையொர்செம்மனோக்கி
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றொரேழை
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள். 17

போரென்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்
மாரன்னனையான்மலர்கொய்திருந்தானைவந்தோர்
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப
வாரென்னவோடுமனலென்னவெதும்புகின்றாள். 18

---

14. கோளுண்டதிங்கள் - இராகுவினாற் பீடிக்கப்பட்ட சந்திரன்.

15. மாதவிசூழல் - வசந்தமல்லிகைக்கொடி வீடு. இதனை வடநூலார் லதாக்ருஹம் என்பர்.

18. ஆரென்றவன் வினவலான் நம்மைப்போலிவன்மாட்டு விளையாட்டு. மகளிர் பலருளரென்பது - கருதினனென்பது.

ஊற்றூர்நறைநாண்மலர்மாதரொருங்குவாசச்
சேற்றூல்விளையாதசெந்தாமரைக்கைகணீட்டி

மாற்றானுதவான்கடுவச்சையன்போலொர்மன்னன். 19

தைக்கின்றவேனோக்கினடன்றுயிரன்னமன்னன்
மைக்கொண்டகண்ணொளிர்மாற்றவள்பேர்விளம்ப
மெய்க்கொண்டநாணந்தலைக்கொண்டிடவிம்மிமென்பூக்
கைக்கொண்டுமோந்தாளுயிர்ப்புண்டுகரிந்தவன்றே. 20

திண்டோரரசன்றொருவன்குலத்தேவிமார்தம்
ஒண்டாமரைவாண்முகத்துண்மிளிருண்கணெல்லாம்
கண்டாதரிக்கத்திரிவான்மதங்கொளவியுண்ண
வண்டாதரிக்கத்திரிமாமதவானையொத்தான். 21

சநதிக்கலாப
வந்திக்கலாகும்மடவாட்குவ்வருத்துநல்கி
நிந்திக்கலாகாவுருவத்தினனின்றபோழ்துஞ்

22

வேறு

வந்தெங்குந்தம்மன்னுயிரேயோபிறிதொன்றோ
கந்தந்துன்றுஞ்சோர்குழல்காணார்கலைபேணார்
அந்தந்தோறுமற்றுகுமுத்தமைவபாரார்
சிந்துஞ்சந்தத்தேமலர்நாடித்திரிவாளும். 23

யாழொக்குஞ்சொற்பொன்னனையாளோரிகன்மன்னன்
தாழத்தாழாடாழ்ந்தமனத்தாடளர்கின்றாள்

தாடர்வாளும். 24

---

19. பண்மாதரொன்றாது—மாதரொன்றாது இருவரை. வச்சையன்-லோபி.

21. உண்கண்—மையுண்டகண். இதனை 'இருநோக்கிவளுண்கண்' என்பதனானறிக.

22. சந்திக்கலாவெண்மதி — மாலைப்பொழுதிற் றோன்றுங் கலைகளோடு

23. அந்தமென்றது — கடைப்பூட்டுகளை.

24 பொன்னனையாள் - திருமகளொப்பாள்.

அந்தாரகத்தைங்கணைநூறாயிரமாகச்
சிந்தாநின்றசிங்கநயினான்செய்குவனீதாரமன்
மந்தாரங்கொண்டகுதியோமாதவியென்றோர்
சந்தார்கொங்கைத்தார்குழலாள்பாற்றளர்வாளும். 25

நாடிக்கொண்டாள்குற்றநயந்தாண்முனிவாற்றுன்
ஊடிக்காணக்காட்டுநலத்தாளுடனில்லாள்
தேடித்தேடிச்செய்தசெழும்பூநறுமாலை
சூடிச்சூடிக்கண்ணாடிநோக்கித்துவள்வாளும். 26

மறலிக்கூறும்வன்கதிர்வேலாவிடையேவந்
துறவிக்கோலம்பெற்றிலெனென்றூடன்வாழ்விப்
பிறவிக்கொல்லேனென்செய்வதிப்போதளியென்று
விறலிக்கீவாளொண்ணிழையெல்லாம்விடுவாளும். 27

வம்பிற்பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக்
கம்பிக்கின்றநுண்ணிடைநோவக்கசிவாளும்
பைம்பொற்கிண்ணம்மெல்விரலங்கிப்பயில்கின்ற
கொம்பிற்கிள்ளைப்பிள்ளையொளிக்கக்குழைவாளும். 28

தன்னைக்கண்டாண்மென்னடைகண்டாமதேபோற்
றன்னக்கண்டாடோறமைமென்றுணையென்றாள்
உன்னைக்கண்டாரென்றுவர்பொல்லாதுநீயென்
றன்னக்கன்னிக்காடையளிப்பானமைவாளும். 29

பாகொக்குஞ்சொன்றண்கலையாடன்படரல்குல்
ஆகக்கண்டோராடரவென்றப்பானண்ணுந்
தோகைக்கஞ்சிக்கொம்பிணைதாங்கித்துணரீன்ற
சாகைத்தங்கைக்கண்கள்புதைத்துத்தளர்வாளும். 30

பொன்னேதேனேபூமகளேகாணணையென்றுத்
தன்னேரில்லாளங்கொருகொய்பூந்தழைமூழ்கி

---

25. ஐங்கணை - மா, தாமரை, நெய்தல், அசோகு, முல்லை.

27. எவ்வகைவினையையேனும் தன் கைப்படையேயல்லது வேறு துணை வேண்டாது முட்டின்றி முடிக்கு மாற்றலுடையானென்பார் 'மறலிக்கூறும் வன்கதிர்வேலா' வென்றதென்க

28. கச்சினின்று மடங்காதுபுறத்தே தோன்றுவதாகலின்வம்பிற் பொங்கும் கொங்கையென்றார்.

30. புதைத்துத் தளர்வாளென்றதை முன்பின்னாக நிறுத்தி விகுதிபிரித்துக் கூட்டியுரைக்க.

இன்னேயென்னைக்காறுதிநீயென்றிகலித்தன்
நன்னீலக்கண்கையின்மறைத்துநகுவாளும்.

வில்லிற்கோதைநாணுறமிக்கோணிகலங்கம்
புல்லிக்கொண்டதாமரைமென்பூமலர்தாங்கி
யல்லிற்கோதைமாதர்முகப்போரவிந்தச்
செல்வக்கானிற்செங்கதிரென்னத்திரிவாளும்.

செய்யிற்கொள்ளுந்தெள்ளமுதஞ்செஞ்சிலையொன்று
கையிற்பெய்யுங்காமனுநாணுங்கவினார்தம்
மையற்பேதைமாதர்மிழற்றும்மழலைச்சொல்
தெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும்.

சோலைத்தும்பிமென்குழலாகத்தொடைமேவுங்
கோலைக்கொண்டமன்மதவாயன்குறியுய்ப்ப

மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும்.

வேறு

ஊக்கமுள்ளத்துடையமுனிவராற்
காக்கலாவதுகாமன்கையில்லெனும்
வாக்குமாத்திரமல்லதுவல்லியிற்
பூக்கொய்வாள்புருவக்கடைபோதுமே.

நாறுபூங்குழனன்னுதல்புன்னைமேல்
ஏறினான்மனத்தும்பர்சென்றேறினாள்
ஊறுஞானத்துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ. 36

சினையின்மேலிருந்தானுருத்தேவரால்
வனையவுமரியாள்வனப்பின்றலை
நினைவுநோக்கமுநீக்கலன்கைகளால்
னனையுநாண்முறியுங்கொய்துநல்கினான். 37

31. நீலமென்றது - ஆகுபெயர்.

35. ஊக்கமென்றது - தாம் விடுத்த காமநுகர்ச்சியிற் றளராதிருக்கு நிலைமையை.

36. நன்னுதன்மனத்தும்பர் சென்றேறுதலென்றது-தலைவிபால்வைத்த வேட்கைப்பெருக் கடங்காது அவளையே நாடிநிற்றலை.

வண்டுவாழ்குழலாண்முகநோக்கியோர்
தண்டுபோற்புயத்தான்றடமார்பினான்
உண்டுகோபமென்றுள்ளத்துணர்ந்தவள்
தொண்டைவாயிற்றுடிப்பொன்றறிசாலவே. 38

ஏயுந்தன்மையரிவ்வகையாரெலாந்
தூயதண்ணிழற்சோலைத்துறைமலர்
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை
பாயுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினார். 29

ஆ_ திருவிருத்தம் - 1014.

---

## 16-வது நீர்விளையாட்டுப்படலம்

புனைமலர்த்தடங்கணேக்கிப்பூசல்வண்டார்த்தப்பொங்க
வினையறுதுறக்கநாட்டுவிண்ணவர்களமுநாண
அனகருமணங்களொருமலர்ச்சோலையின்று
வனகரிபிடிகளோடும்வருவனபோலவந்தார்.

அங்கவர்பண்ணைநன்னீராடுமாறணைந்ததோற்றம்
கங்கைவார்சடையோனன்னமாமுனிகனலமேனான்
மங்கையர்கூட்டத்தோடும்வானவர்க்கிறைவன்செல்வம்
பொங்குபாற்கடலிற்செல்லுந்தோற்றமேபோன்றதன்றே.

மையவாங்குவளையெல்லாமாதர்கண்மலர்கள்பூத்த
கையவார்முருவத்தார்தங்கண்மலர்குவளைபூத்த
செய்யதாமரைகளெல்லாந்தெரிவையர்முகங்கள்பூத்த
தையலார்முகங்கள்செய்யதாமரைபூத்தவன்றே.

தாளையேய்கமலத்தாளின்மார்புறத்தழுவுவாரும்
தோளையேபற்றிவெற்றித்திருவெனத்தோன்றுவாரும்

38. தண்டுபோற்புயத்தா னென்பதனான் வலியதோளானெனப்போதராலான் தான்றேண் மாலையை யொருத்திக்குச் சூட்டிவந்தானென் றாடினா ளென்க.

1. தீவினையிழந்தாரெய்துதற்கிடனாகலின், வினையறுதுறக்கநாடென்றார்.
2. கங்கைவார்சடையோனன்ன மாமுனியென்றது - தூர்வாசனை.
3 சாமுத்திரிகைநூலி னொழுங்கென்பது படக்கையென்றார்.
4. வெற்றித் திருவென்றமையான் தோளென்றது - ஆடவர்தோளை விளக்கிநின்றது. அம்மாதாருடைய உறுப்பிடை ஒவ்வொன்றுமே காண்பா

பாளையேவிரிந்ததென்னப்பாரந்துநீருந்துவாரும்
வாளைமீனுகவஞ்சிமைந்தரைத்தழுவுவாரும்.

வண்டுணக்கமழுஞ்சுண்ணம்வாசநெய்நானத்தோடுங்
கொண்டெதிர்வீசுவாருங்கோதைகொண்டோச்சுவாரும்
தொண்டைவாய்ப்பெய்துதூநீர்கொழுநர்மேற்றாகின்றாரும்
புண்டரீகக்கைநகூப்பிப்புனன்முகந்திறைக்கின்றாரும்.

மின்னொத்தவிடையினாரும்வேயொத்ததோளினாரும்
சின்னத்தினளகபந்திதிருமுகமறைப்பநீக்கி
அன்னத்தைவருதியென்றோடவென்றழைக்கின்றாரும்
பொன்னொத்தமுலையின்வந்துபூவொந்தவுளைகின்றாரும்.

பண்ணுளர்பவளத்தொண்டைபங்கயம்பூத்ததன்ன
வண்ணவாய்க்குவளைவாட்கண்மருங்கிலாக்கரும்பினன்னார்
உண்ணிறைகயலைநோக்கியோடுநீர்த்தடங்கட்கெல்லாங்
கண்ணுளவாங்கொலென்றுகணவரைவினவுவாரும்.

தேனகுநறவமாலைச்செறிகுழற்றெய்வமன்னார்
தானுடைக்கோலமேனிதடத்திடைத்தோன்றநோக்கி
நானகநகுகின்றாளிந்நன்னுதறோழியாமென்
றூனமில்முலையினாரமுளங்குளிர்ந்துதவுவாரும்.

குண்டலத்திருவில்வீசக்குலமணியாரமின்ன
விண்டொடர்வரையின்வைகுமென்மயிற்கணங்கள்போல
வண்டுழர்கோதைமாதர்மைந்தர்தம்வயிரத்திண்டோட்
டண்டுகள்தழுவுமாசைபுனற்கரைசார்கின்றாரும்.

அங்கிடையுற்றகுற்றம்யாவதென்றறிதறேற்றாஞ்
செங்கயலனையநாட்டஞ்சிவப்புறச்சீறிப்போன
மங்கையோர்கமலச்சூழன்மறைந்தனண்மறையமைந்தன்
பங்கயமுகமென்றோரானையுற்றுப்பார்க்கின்றானும்.

பொற்றொடிதளிர்க்கைச்சங்கம்வண்டொடுபுலம்பியார்ப்ப
எற்றுநீர்குடையுந்தோறுமேந்துபோல்குனின்றும்

ருடைய மனங் கண்களை யொருசேரக்கவரும் வனப்பிற்றாகலின் அவ்வாறு தம்மை அவர்பாற்செல்லக் கணவர் அவ்வவ்வமையத்து அவ்வவ்வுறுப்பே காரணமாக அவர்க்கிட்டு மின்னொத்தவிடையினாள்; வேயொத்ததோளினாள் என கூறுங் கூற்றினைத் தாம்கொண்டு கூறினாரல்லது இடையொன்றுமே சிறந்தார் தோளொன்றுமே சிறந்தாரென இருவகையாகக் கூறினாரல்லர்.

முலைகடந்தமின்முந்திநெருங்கலா

செய்யவாய்வெளுப்பக்கண்சிவப்புற
மெய்யராகமழியத்துகிலெனத்
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலாற்
பொய்கைகாதற்கொழுநரும்போன்றதே.

ஆனதூயவரோடுடனாடினர்
ஞானநீரவராகுதனன்றரோ
மீனுநாறினவேறினிவேண்டுமோ. 20

மிக்கவேந்தர்தமெய்யழிசாந்தொடும்
புக்கமங்கையர்குங்குமம்போர்த்தலால்
ஒக்கநீலமுகிற்றலையோடிய
செக்கர்வானகமொத்ததுதீம்புனல். 21

காகதுண்டநறுங்கலவைக்களி
யாகமுண்டதடங்களுநீங்கலாற்
பாகடைந்தபனிக்கனிவாய்ச்சியர்
வேகடஞ்செய்மணியெனமின்னினார். 22

பாயரித்திறலான்பசுஞ்சாந்தினால்
தூயபொற்புயத்துப்பொதிதூக்குறி
மீயரித்துவிளர்க்கவொர்மெல்லியல்
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே. 23

கதம்பநாள்விரைகள்ளவிழ்தாதொடுந்
ததும்புபூந்திரைத்தண்புனல்சுட்டதால்
நிதம்பபாரத்தொர்நேரிழைகாமத்தால்
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே. 24

தையலாளையொர்தாரணிதோளினு
னெ.

---

19. வாய்வெளுத்தலுங் கண்சிவத்தலு மாதரைத் தோய்வதனாலுண்டாவது. 22. வேகடஞ்செயல் — சாணைபிடித்தல். அன்றி — அழுக்கற்றுதல் எனினுமமையும். 23. பசுமை வெண்மை யென்னும் பண்புகள் வண்ணப்புனை யுணர்த்தாது முறையே ஈரமுமின்மையு முணர்த்துகின்றன.

24. கதம்பம் — பரிமளப்பொடி.

செய்யதாமரைச்செல்வியைத்தீம்புனல்
கையினூட்டுங்களிற்றரசென்னவே. 25

சுளியுமென்னடைதோற்கநடந்தவர்
அளிகொள்சீரடியொத்தனவாமென
விளிவுதோன்றமிதிப்பனபோன்றன
நளினமேறியநாகிளவன்னமே. 26

எரிந்தசிந்தையரெத்தனையென்கெனோ
வரிந்தகூருகிராலழிசாந்துபோய்த்
தெரிந்தகொங்கைகள்செவ்வியநூல்புடை
வரிந்தபொற்கலசங்களைமானவே. 27

தாழநின்றதைதமலர்க்கையினால்
ஆழிமன்னொருவன்னுரைந்தானது
வீழியின்கனிவாயொருமெல்லியல்
தோழிகண்ணிற்கடைக்கணிற்சொல்லினாள். 28

தள்ளியோடியலைதடுமாறலாற்
றெள்ளுநீரின்முழுகுசெந்தாமரை
புள்ளிமானனையார்முகம்போல்கிலா
துள்ளிநாணியொளிப்பனபோன்றவே. 29

ருமபுனலாடிய
வனைகருங்குழன்மைந்தருமாதரும்
அனையநீர்வறிதாகவந்தேறினார்
புனைநறுந்துகில்பூணொடுந்தாங்கினார். 30

மேவினார்பிரிந்தாரந்தவீங்குநீர்

ஓவுவானமுழுமண்ணிறைதாமரைப்
பூவெலாங்குடிபோனதும்போன்றதே. 31

மானினோக்கியர்மைந்தரொடாடிய
நீர்வ

25. தாமரைச்செல்வியைக் கையினூட்டுங்களிற்றரசென்ன என்றமையான் சகலக்குமியை யுணர்த்தியது.

28. கண்ணிற்கடைக்கணிற்சொல்லல் என்றது - நயனபாடையை.

30. தாங்கினாரென்றமையான் ஆடையணியிவற்றானல்லது இயற்கையழகினை யுடையரென்பதும், பூவின்மெல்லியரென்பதும் பெறப்பட்டன.

தானுமன்னதுகாதலித்தானென
மீனவேலையைவெய்யவனெய்தினான். 32

ஆற்றலின்மையினாலழிந்தேயுந்தம்
வேற்றுமன்னர்தமேல்வரும்வேந்தர்போல்
ஏற்றுமாதர்முகங்களொடேங்கலுந்
தோற்றசந்திரன்மீளவுந்தோற்றினான்.

ஆ திருவிருத்தம்-1047.

---

## 17 - வது உண்டாட்டுப்படலம்

வெண்ணிறநறைநிறைவெள்ளமென்னவும்
பண்ணிறஞ்செறிந்திடைப்பரந்ததென்னவும்
உண்ணிறைகாமமிக்கொழுகிற்றென்னவுந்
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே. 1

கலந்தவர்க்கினியதோர்கள்ளுமாய்ப்பிரிந்
துலந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன்
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய்
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே. 2

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாங்
கூறுபாற்கடலேயொத்தகுன்றெலாம்
ஈறிலான்கயிலையையியைந்தவெண்ணினி
வேறியாம்புகல்வதுநிலவின்வீக்கமே. 3

எள்ளருந்திசைகளோடியாரும்யாவையுங்
கொள்ளைவெண்ணிலவினாற்கோலங்கோடலால்
வள்ளுறைவயிரவாண்மகரகேதனன்
வெள்ளணியொத்ததுவேலைஞாலமே. 4

துயங்குதாரகைநிரைதாளமீழலும்
இயங்குதார்மிடைந்தகாரெழினிச்சூழலுங்

---

32. மீனவேலையை வெய்யவனெய்தினானென்றது பொழுதுபட்டதென்பதுணர்த்திற்று.

3. ஈறிலான் - சங்காரகாரணனாகிய சிவன், இதற்குவேறு கூறுவாருமுளர்.

4. யாரும்யாவையும் என்றது - இயங்குதிணை. நிலைத்திணைகளை. மகரகேதனன் - கயற்கொடியையுடைய மன்மதன்.

கயங்கள்போன்றனிர்பளிங்கடுத்தகானமும்
வயங்குபூம்பந்தருமகளிரெய்தினார். 5

பூக்கமழோதியர்போதுபொங்கிய
சேக்கையின்விளைசெருச்செருக்குந்திங்கயார்
ஆக்கியவமிழ்தெனவப்பொன்வள்ளத்து
வாக்கியபசுநறாமாந்தமேயினார். 6

மீனுடைவிசும்பினார்விருந்தைநாட்டவர்
ஊனுடையுடம்பினாருருவமொப்பிலார்
மானுடைநோக்கினார்வாயின்மாந்தினார்
தேனுடைமலரிடைத்தேன்பெய்தென்னவே. 7

உக்கபால்புரைநிலாவுண்டவள்ளமுங்
கைக்கொளின்னொளிபடச்சிவந்துகாட்டத்தம்
மைக்கருஞ்சிவந்தநோர்மடந்தைவாய்வழிப்
புக்கதேனமிர்தமாய்ப்பொலிந்தபோன்றவே. 8

தாமமுநானமுந்தகைந்ததண்ணகிற்
றாமமுண்குழலியருண்டநாறுநறை
ஓமவெங்குழியுகுநெய்யினுள்ளநறை
காமவெங்கனலினைக்கனற்றிக்காட்டிற்றே. 9

வேறு

விடனைக்குநெடியநோக்கினமிழ்தொக்குமின்சொலார்த
மடனைக்குமடனுமுண்டேலவாறுதலொருத்திகாறைத்
தடனைக்குநிழலைப்பொன்செய்தண்ணறுந்தேறல்வள்ளத்
துடனைக்கவுவந்தாநீயுமுண்ணுதிதோழியென்றாள். 10

அச்சநுண்மருங்குலாளோரணங்கனாளகப்பந்தி
நச்சுவேற்கருங்கட்செவ்வாய்நளிர்முகமதுவட்டோன்றப்
பிச்சிநீயென்செய்தாயிப்பெருநறவிருக்கவாளா
வெச்சிலைநுகர்தியோவென்றெயிற்றரும்பிலங்கநக்காள். 11

றமெலாநகைசெய்தேசப்பொருவருமேனிவேறோர்
மறமுலாங்கொலைவேற்கண்ணாண்மணியின்வள்ளத்துவெள்ளை
நிறநிலாக்கற்றைபாயநிறைந்ததுபோன்றுதோன்ற
வனவதனைவாயின்வைத்தனளுணுட்கொண்டாள். 12

---

5. பளிங்கடுத்த கானமென்றது - பளிங்குப்பாறையை.
6. இன்பச்செரு - கலவிப்போர்.
10. நோய்நோக்கென்பதுபட விடனைக்குநெடிய நோக்கென்றார்.

யாழ்க்குமின்குழற்குமின்பமளிந்தனவிவையாமென்னக்
கேட்குமென்மழலைச்சொல்லோர்கிஞ்சுகங்கிடந்தவாயாள்
தாட்கருங்குவளைதோய்ந்ததண்ணறைச்சாடியுட்டன்
வாட்கணினிழலைக்கண்டாள்வண்டெனவோச்சுகின்றாள். 13

களித்தகண்மதர்ப்பவாங்கோர்கனங்குழைகள்ளினுள்ளால்
வெளிப்படுகின்றகாட்சிவெண்மதிநிழலைநோக்கி
அளித்தனனபயம்வானத்தரவினையஞ்சிநீவந்
தொளித்தனையஞ்சலென்றாங்கினியனவுணர்த்துகின்றாள். 14

அழிகின்றவறிவினாலோர்பேதைதமையாலோவாற்றிற்
சுழியொன்றினின்றதன்னவுந்தியாளொருத்திசெந்தேன்
பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புரைந்துகீழ்வந்
திழிகின்றகொழுநிலாவைநறவெனவள்ளத்தேற்றாள். 15

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை
யின்னமிழ்தனையவின்சொலிடைதடுமாறியென்னே
வன்னமேகலையைநீக்கிமலர்த்தொடையல்குல்சூழ்ந்தாள்
பொன்னரியாடைகொண்டுபுரிகுழல்புனையலுற்றாள். 16

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி
விண்மதிமதுவினாசைவீழ்ந்ததென்றொருத்தியுன்னி
உண்மகிழ்துணைவனோடூடுநாள்வெம்மைநீங்கித்
தண்மதியாதியாகிறருவெனிந்நறவையென்றாள். 17

எள்ளொத்தகோலமூக்கினேந்திழையொருத்திமுன்கை
தள்ளத்தண்ணறவையெல்லாந்தவிசிடையுகுத்துந்தேறாள்
உள்ளத்தின்மயக்கந்தன்னாலுட்புறந்துண்டென்றெண்ணி
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள். 18

வான்றுணைப்பிரிதலாற்றாவண்டினம்வச்சைமாக்கள்
ஏன்றமாநிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்பத்
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனனுகரநாணி
யூன்றியகழுநீர்நாளத்தாளினாலொருத்தியுண்டாள். 19

---

13. தாட்கருங்குவளைதோய்ந்த தண்ணறைச்சாடியென்றது — மொய்க்கும் வண்டுகட்கஞ்சி அத்தண்டின் சிறுதொளையினறவை யுரிஞ்சுதற்கென்க.

14. உரையாநின்றாளென்னாது உணர்த்துகின்றாளென்றதனான், இனியன என்றது உறுதிமொழியென்பதுணர்த்திற்று.

16. அல்குல் சூழ்ந்தாள் எனப்பின்வருதலான் மேகலை என்றதாடையினை.

19. வச்சைமாக்கள் — உலோபிகள்.

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவியோட
வள்ளுறைகழித்தவாள்போல்வசியுறவயங்குகண்
கள்ளுறைமலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள்
உள் [illegible]ணலெண்ணாள். 20

வேறு

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல்
ஏற்றிவாளெயிறுகளதுக்கிபின்றளிர்
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு
சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாரினே. 21

துடித்தவான்றுவரிதழ்த்தொண்டைத்தூநிலாக்
கடித்தவாலெயிறுகளதுக்கிக்கண்களால்
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்மெய்
பொடித்தவேர்புறத்துகுநறவம்போன்றவே. 22

கனித்திரளிதழ்பொழிசெம்மைகண்புக
நினைப்பதொன்றுரைப்பதொன்றாமொர்நேரிழை
தனித்தடமரைமலர்முகத்துச்சாபமுங்
குனித்ததுபனித்ததுகுழவித்திங்களே. 23

இலவிதட்டுவர்விடவெயிற்றுத்தேன்வா
முலைமிசைக்கச்சொடுகலையுமூட்டற
அலைகுழல்சோர்தரவசதியாடலாற்
கலவிசெய்கொழுநருங்கள்ளுமொத்தவே. 24

அனகனுக்கறிவியென்றறியப்போக்குமோர்
இனமணிக்கலையினாடோழிநீயுமென்
மனமெனத்தாழ்த்தியோவருதியோவென்றாள். 25

மானமர்நோக்கியோர்மதுகைவேந்தன்பால்
ஆனதன்பாங்கியராயினாரெலாம்

---

20. தன்னுள்ளத்து நீங்காதுறைதலின் உள்ளுறையன்பனென்றார்.
21. சீற்றமாமபிநயமெனக் காரியத்தைக்காரணமாக உபசரித்தார்.
23. கனிமொழி என்புழி வினைப்பகுதியே வினையெச்சப் பொருடந்து வரிப்புனைபந்தென்புழிப்போல.
25. கனைகடல் — ஒலிகடல். யான் நீயேனென்பாள் எதிர்மறைமுகத்தான். அவனை அனகனென்றாள்.

போனவர்போனவர்த்தொடரப்போக்கினாள்
தானுமங்கவர்பினே தமியளேகினாள். 26

விரைசெய்பூஞ்சேக்கையினடுத்தமீமிசைக்
கரைசெயாவாசையங்கடலுளாளொரு
பிரசமென்குதலையாள் கொழுநன்பேரெலாம்
உரைசெயுங்கிள்ளையையுவந்துபுல்லினாள். 27

மன்றலொருசிறையிருந்தொர்வாணுதல்
தன்றுணைக்கிள்ளையைத்தருதியென்றுவிளைய
இன்றுபோய்க்கொணர்கிலையென்செய்வாயெனக்
கன்றிலோடடுத்தியென் றழுதுசீறினாள். 28

வளைபயின் முன்கையோர்மயிலனாடனக்
கிளையவள் பெயரினைக்கொழுநனீந்தது
முளையெயிறிலங்கிடமுறுவல்வந்தது
களகளவிரிந்தனகயற்கணாவியே. 29

செற்றமுன்புரிந்ததோர்செம்மல்வெம்மையாற்
பற்றலுமல்குலிற்பாந்தமேகலை
யற்றுகுமணியின்முன்பவளிசேர்ந்தன
பொற்றொடியொருத்திகண்பொருதமுத்தமே. 30

தோடவிழ்கூந்தலாளொருத்திதோன்றலோ
டூடுகேனுயிருருகுநோய்கெடக்
கூடுகேனவன்குணங்கள்வீணையிற்
பாடுகேனெனப்பலவும்பண்ணினாள். 31

மாடகம்பற்றியமகரவீணை தன்
றோடவிழ்மலர்க்கரஞ்சிவப்பத்தொட்டனள்
பாடினளொருத்தி தன்பாங்கிமார்களோ
டூடினதுரைசெயாளுள்ளத்துள்ளதே. 32

குழைத்தபூங்கொம்பனாளொருத்திகூடலை
இழைத்தனளவ்வளிட்டபோதெலாம்
பிழைத்தலுமனங்கவேள்பிழைப்பிலம்பொடும்
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டென்னவே. 33

---

26. போனவர் போனவர் — முற்போனவரையும் பிற்போனவரையு முணர்த்திற்று.

27. மீமிசை ஒருபொருட்பன்மொழி.

பந்தணிவிரலினாளொருத்திபையுளாள்
சுந்தரனொருவன்பாற்றாதுபோக்கினாள்
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினாள்
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தநாட்டமே. 34

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்
சித்தமுண்டொருத்திக்கதன்பன்றேர்கிலான்
பொய்த்ததோர்மூரியானிமிர்ந்துபோக்கினா
ளெத்தனையிறந்தனகடிகையீண்டென்றாள். 35

[illegible]

இதைப்புனநனைத்திடமுளைத்தவேயெனப்
பதைத்தனளொருத்தன்மேலொருத்திபஞ்சடி
யுதைத்தலும்பொடித்தனவுரோமராசியே. 36

மலிந்தபேருவகையன்மாற்றுவேந்தரை
நலிந்தவாளுழவனோர்நங்கைகொங்கைபோய்
மெலிந்தவாநோக்கித்தன்புயங்கள்வீங்கினான். 37

ஏய்ந்தபேரெழிலினானொருவனெய்தினான்
வேய்ந்தபோலெங்கணுமனங்கன்வெங்கணை
பாய்ந்தபூம்பள்ளியிற்படுத்தபல்லவந்
தீய்ந்தனநோக்கினன்றிகைக்குஞ்சிந்தையான். 38

ஊட்டியசாந்துவெந்துலரும்வெம்மையான்
நாட்டினையளித்திநீயென்றுநல்லவர்
ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்
வாட்டொழின்மைந்தற்கோர்மங்கைகொங்கையே. 39

பயிருறுகிண்கிணிபரந்தமேகலை
வயிரவான்பூணவைவாங்கிநீக்கினாள்
உயிருறுதலைவன்பாற்போகவுன்னினாள்
செயிருறுதிங்களைத்தீயநோக்கினாள். 40

---

35. மூரி - உறக்கம்.

36. பஞ்சடி - செம்பஞ்சூட்டியதாள்.

40. நீ தோன்றித் தலைவன்பாற் காமவேட்கை யுண்டாக்கப் பிறறியா வண்ணம் செல்வேனை நிலாவெரித்துத் தடுத்தி. இது நிற்குத்தக்கதென்பாள் செயிருறுதிங்களைத் தீயநோக்கினாளென்றார்.

ஏனுமிவ்வன்மையையென்னென்றுன்னுதும்
ஆலைமென்கரும்பிலாவொருவற்காங்கொரு
சோலைமென்குயிலனாள்சுற்றிவீக்கிய
மாலையைநிமிர்ந்திலவயிரத்தோள்களே. 41

சோர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவான்
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினாள்
காரிகையிவளவள்கருத்தைநோக்கியோர்
வேரியந்தெரியலான்வீடுநோக்கினாள். 42

சினங்கெழுவாட்கையோர்செம்மல்பாலொரு
கனங்குழைமயிலனாள்கடிதுபோயினாள்
மனங்குழைநறவமோமாலைதான்கொலோ
அனங்கனேயார்கொலோவழைத்ததூதரே. 43

தொகுதருகாதற்குத்தோற்றசீற்றத்தோர்
வகிர்மதிநெற்றியாண்மழைக்கணாளிவந்
துகுதலுமுற்றதென்னென்றுகொற்றவ
னகுதலுநக்கனணாணுநீங்கினாள். 44

பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய
கைத்தலநீக்கினள்கருத்தினீக்கலள்
சித்திரம்போன்றவச்செயலொர்தோன்றற்குச்
சத்திரமார்பிடைத்தைத்ததொத்ததே. 45

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப்
புல்லியகையினள்போதிதூதெனச்
சொல்லுவானுறுமுறுநாணிற்சொல்லலள்
எல்லையில்பொழுதெலாமிருந்துவிம்மினாள். 46

ஊறுபேரன்பினாளொருத்திதன்னுயிர்
மாறிலாக்காதலன்செலவைமற்றொரு
நாறுபூங்கோதைபானவிலநாணுவாள்
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினாள். 47

41. பிரிந்து நின்று காமவெப்பத்தானைந்தமையின் ஆலைமென் கரும்பனா ளென்றும், அவன்பட்ட காமவிடாயை யொருவண்ணந் தணியப்பெற்றது இவள் சொல்லேயென்று கருதிச் சோலைமென் குயிலனாளென்றுங் கூறினார்.

44. ஆற்றகுப்பைகளென்றாற்போலத் தோற்ற சீற்றமென்புழிக் காலங் காட்டு மின்னிடைநிலை புணர்ந்துகெட்டது.

46. பன்முறையாற்றிய செய்கையி னெல்லையில்லாமையை அச்செய் கை நிகழ்ந்த பொழுதின்மேலேற்றி எல்லையில் பொழுதெலா மென்றார்.

கருத்தொருதன்மையதுயிருமொன்றாக
மருத்தியுமத்துணையாயினார்
ஒருத்தியுமொருவனுமுடலுமொன்றெனப்
பொருத்தினரிவரெனப்புல்லினாரரோ. 48

வெதிர்பொருதோளினாளொருத்திவேந்தன்வந்
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல
லங்கதுமென வணங்கினாளது
புதுமையாதலினவர்க்கச்சம்பூத்ததே. 49

துனிவருநலத்தொடுசோர்கின்றாளொரு
குனிவருநுதலிக்குக்கொழுநனின்றியே
தனிவருதோழியுந்தாயையொத்தனள்
ளினியபூந்தென்றலுமிரவுமென்னவே. 50

ஆக்கியகாதலொருத்தியந்தியில்
தாக்கியதெய்வமுண்டென்னுந்தன்மையள்
நோக்கினணின்றனளுவன்றதோர்கிலள்
போக்கினதாதினோடுணர்வும்போக்கினாள். 51

மறப்பிலள்கொழுநனைவரவுநோக்குவாள்
பிறப்பினொடிறப்பெனப்பெயருஞ்சிந்தையால்
துறப்பருமுகிலிடைத்தோன்றுமின்னெனப்
புறப்படும்புருமொருபூத்தகொம்பனாள். 52

எழுதருங்கொங்கைமேலனங்கனெய்தவம்
புழுதவெம்புண்களில்வளைக்கையொற்றினாள்
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லினாள்
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டியே. 53

ஆர்த்தியுமுற்றதுமறிஞர்க்கற்றந்தான்
வார்த்தையினுணர்த்துதலரிதன்றேவெனு
வேர்த்தனள்வெதும்பினண்மெலிந்துசாய்ந்தனள்
பார்த்தனளொருத்திதன்பாங்கனாளையே. 54

தனங்களினிளையவர்தம்மின்மும்மடி
கனங்கனமிடையிடைகளிக்குங்கள்வனாய்
மனங்களினுழைந்தவர்மாந்துதேறலை
யனங்கனுமருந்தினாதல்வேண்டுமால். 55

52. படமாடத்தைத் துறப்பரு முகிலென்றார்.
53. கொங்கையி னருமைநோக்கி எழுதருங் கொங்கையென்றார்.

வேறு

நறைகமழலங்கன்மாலைகளிர்நறுங்குஞ்சிமைந்தர்
துறையறிகலவிச்செவ்விதந்தோகையர்தூசுவீசி
நிறையகலல்குல்புல்குங்கலைபழித்தகலநீத்தார்
அறைபறையனையநீராரருமறைக்காவலோதான். 56

பொன்னருங்கலனுந்தூசும்புறத்துளதுறந்தல்லாம்போ
நன்னுதலொருத்திதன்பாலகத்துளநாணுநீத்தாள்
உன்னருந்துறவுபூண்டவுணர்வுடையொருவனேபோல்
தன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றன்றே. 57

பொருவருமதனன்போல்வானொருவனும்பூவின்மேலைத்
திருவினுக்குவமைசொல்வாளொருத்தியுஞ்சேக்கைப்போரில்
ஒருவருக்கொருவர்தோலாரொத்தனருயிருமொன்றே
இருவர்தமுணர்வுமொன்றேயென்றபோதியாவர்வெல்வார். 58

கொள்ளைப்போர்வாட்கணாளங்கொருத்தியோர்குமரன்றன்
வள்ளற்றாரகலந்தன்னைமலர்க்கையாற்புதைப்பநோக்கி
யுள்ளத்தாருயிரன்னாண்மேலுதைபடுமென்றுநீர்நங்
கள்ளத்தாற்புதைத்தியென்றுமுன்னையிற்கனன்றுமிக்காள். 59

பாலுளபவளச்செவ்வாய்ப்பணைமுலைநிகர்த்தமென்றோள்
வேலுளநோக்கினாளோர்மெல்லியல்வேலையன்ன
மாலுளசிந்தையானோர்மழையுளதடக்கையாற்கு
மேலுளவரம்பைமாதரென்பதோர்விருப்பையீந்தாள். 60

வேறு

புனத்துறைமயிலனாள்கொழுநன்பொய்யுரை
நினைத்தனள்சீறுவாளொருத்திநீடிய
சினத்தொடுகாதல்கள்செய்தபோரிடை
மனத்துறைகாதலேவாகைகொண்டதே. 61

கொலையுருவமைந்தெனக்கொடியநாட்டத்தோர்
கலையுருவல்குலாள்கணவற்புல்குவாள்

---

58. ஒத்தகிழவனும் கிழத்தியுமொத்த வின்பந்துய்த்தலின் ஒருவருக்கொருவர் தோலாரொத்தன ரென்றார்.

59. வளமென்றது — வள்ளமெனவிரிக்கும்; வழிவிரித்தல் பெற்றது.

60. மழையுளதடக்கை என்றது கொடையின்சிறப்புத்தோன்றநின்றது.

61. வெற்றியை வாகை யென்றார்.

சிலையுருவழிதரச்செறிந்தமார்பிற்றன்
முலையுருவினவெனமுதுகைநோக்கினாள். 62

குங்குமமுதிர்ந்தனகோதைசோர்ந்தன
சங்கினமுரன்றனகலையுஞ்சாய்ந்தன
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன
மங்கையரிளநலமைந்தருண்ணவே. 63

துனியுறுபுலவியைக்காதல்சூழ்சுடர்
பனியெனத்துடைத்தரும்பதைக்குஞ்சிந்தையாற்
புனையிழையொருமயில்பொய்யுறங்குவாள்
கனவெனாநலத்தினாற்கணவற்புல்லினாள். 64

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனாங்
கிட்டியபோதுடல்கிடைக்கப்புல்லினார்
விட்டிலர்கங்குலின்விடிவுகண்டிலர்
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால். 65

அருங்களிமால்களிறனையவீரர்க்குங்
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்
நெருங்கியவனமுலைசுமக்கநேர்கலா
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே. 66

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க்
கிடையுறுதிருவெனவிந்துநந்தினான்
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்
றன். 67

ஆக திருவிருத்தம் - 1114.

62. உருவுதலாகிய இயைபில்லாதிருப்ப அவ்வியல்புபட முலையுருவின வெனக் கூறினார்.

64. கனவிடைப்பயந்ததுபோற் கணவனைப் புல்லுதற் கேதுவாதல் பற்றிகனவெனா நலமென்றார்.

65. பிரிவானுளதாம் வருத்தத்தினருமைதோன்றக்கிட்டியபோதென்றார்

67. சுடர்மணிக்கரசென்றது பீதகவாடைப்பிரானார் மார்பிடை மணியாகிய கவுத்துவத்தை.

# 18-மது எதிர்கொள்படலம்

வேறு

அடாநெறியறைதல்செல்லாவருமறையறைந்தநீதி
விடாநெறிப்புலமைச்செங்கோல்வெண்குடைவேந்தர்வேந்தன்
படாமுகமுகிலிற்றோன்றும்பருவமொத்தருவிபல்குங்
கடாநிறையாறுபாயுங்கடலொடுங்கங்கைசேர்ந்தான். 1

கப்புடைநாவினாகருலகமுங்கண்ணிற்றோன்றத்
துப்புடைமணலிற்றுகிக்கங்கைநீர்சுருங்கிக்காட்ட
அப்புடையனீகவேலையகன்புனன்முகந்துமாந்த
உப்புடைக்கடலுந்தெண்ணீருண்ணசையுற்றதன்றே. 2

ஆண்டுநின்றெழுந்துபோகியகன்பணைமிதிலையென்னும்
ஈண்டுநீர்நகரின்பாங்கரிருநிலக்கிழவனெய்தத்
தாண்டுமாபுரவித்தானைத்தண்ணளிச்சனகனென்னுந்
தூண்டருவயிரத்தோளான்செய்ததுசொல்லலுற்றாம். 3

வந்தனனரசனென்னமனத்தெழுமுவகைபொங்கக்
கந்தடுகளிறுந்தேருங்கலினமாக்கடலுஞ்சூழச்
சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைதோன்ற
விந்திரதிருவன்றன்னையெதிர்கொள்வானெழுந்துவந்தான். 4

கங்கைநீர்நாடன்சேனைமற்றுளகடல்களெல்லாஞ்
சங்கினமார்ப்பவந்துசார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்தபாற்கடலெதிர்வதேபோன்
மங்கையைப்பயந்தமன்னன்வளநகர்வந்ததன்றே. 5

வேறு

இலைகுலாவயிலினானனிகமேழெனவுலா
நிலைகுலாமகரநீர்நெடியமாகடலெலாம்
அலகின்மாகளிறுதேர்புரவியாளெனவிராய்
உலகெலாநிமிர்வதேபொருவுமோருவமையே. 6

தொங்கல்வெண்குடைதொகைப்பிச்சமுட்படவிராய்
எங்கும்விண்புதைதரப்பகன்மறைந்திருளெழப்

---

1. படாமுகமென்றது - யானையை.
2. படைகளின் மிகுதிநோக்கி அப்புடையநீகமென்றார்.
3. இருநிலக்கிழவனென்றது - தயரதனை.
4. இந்திரதிருவனென்றது - மது.

பங்கயஞ்செய்யவும்வெளியவும்பலபடத்
தங்குதாமரையுடைத்தானமேபோலுமே. 7

கொடியுளாரோதனிக்குடையுளாரோகுலப்
படியுளாரோகடற்படையுளாரோபகர்
மடியிலாவரசிளைஞன்மார்புளாரோவவர்
முடியுளாரோதெரிந்துணர்கிலாமுளரியாள். 8

வார்முகங்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண்
டோர்முழங்கரவமேயாழிசைமுழங்கரவமே
தேர்முழங்கரவம்வெண்டிரைமுழங்கரவமே
கார்முழங்கரவம்வெங்கரிமுழங்கரவமே. 9

சூழுமாகடல்களுந்திடர்படத்துகடவழ்ந்
தேழுபாரகமுமுற்றுளதெனத்தெளிதரோ
வாழியானுலகளந்தன்றுதாள்சென்றவப்
பூழையூடேபொடித்தப்புறம்போயதே. 10

மன்னெடுங்குடைமிடைந்தடையவான்மறைதரத்
துன்னிடுநிழல்வயங்கிருடுரப்பெளிதரோ
பொன்னிடுட்புவியிடும்பூணமணிக்கலனெலா
மின்னிடும்வில்லிடும்வெயிலிடும்நிலவிடும். 11

தாவின்மன்னவர்பிரான்வரமுரட்சனகனும்
எவருஞ்சிலையினுனெதிர்வருநெறியெலாந்
தூவுதண்சுண்ணமுங்கனகநுண்டூளியும்
பூவின்மென்றாதுகும்பொடியுமேபொடியெலாம். 12

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச்
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும்
வெறியுடைக்கலவையும்விரவுசேறாமிகு
செறிமதக்களுழியாய்சேறுமேசேறெலாம். 13

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினும்
சென்றுவந்துலவுமச்சிதைவிலாநிழலினோர்
வென்றிநின்கொடியொடுந்நெடுவிதானமும்விராய்
நின்றவெண்குடைகளினிழல்களேநிழலெலாம். 14

மாறிலாமதுகையான்மகிழ்பெருந்தானைமேல்
ஊறுபேருவகையானனிகம்வந்துற்றபோ

8. முளரியாள் — சயமகள்.

தீதிலோதையினொடும்மறிதிரைப்பரவைமேல்
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே. 15

கந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர்
தந்தையேயனையவத்தகவினான்முன்புதன்
சிந்தையேபொருநெடுந்தேரின்வந்தெய்தினான். 16

எய்தவந்திருநெடுந்தேரிழிந்தினியதன்
மொய்கொடிண்சேனைபின்னிற்கமுன்சேறலுங்
கையின்வந்தேறெனக்கடிதின்வந்தேறினான்
ஐயனும்முகமலர்ந்தகமுறத்தழுவினான். 17

தழுவிநின்றவனிருங்கிளையையுந்தமரையும்
வழுவில்சிந்தனையினான்வரிசையின்னளவளாய்
எழுகமுந்துறவெனாவினிதுவந்தெய்தினான்
உழுவைமுந்தரியனானெவரினும்முயரினான். 18

இன்னவாறிருவரும்மினியவாறகவத்
துன்னுமாநகரினின்றெதிர்வரத்துன்னினான்
தன்னையேயனையவன்றழலையேயனையவன்
பொன்னின்வார்சிலையிறப்புயநிமிர்த்தருளினான். 19

தம்பியுந்தானுமத்தானைமன்னவனகர்ப்
பம்புதிண்புரவியும்படைஞரும்புடைவரச்
செம்பொனின்பசுமணித்தேரின்வந்தெய்தினான்
உம்பரும்மிம்பருமுரகருந்தொழவுளான். 20

யானையோவிரதமோவிவுளியோபிடிகளோ
ஆனபேருறையிலாநிறைவையாரறிகுவார்
தானையோர்சனகனேவலினெடுந்தாதைமுன்
போனபோருழவர்தம்புடைவரும்படையினே. 21

காவியுங்குவளையுங்கடிகொள்காயாவுமொத்
தோவியஞ்சுவைகெடப்பொலிவதோருருவொடே

---

16. அனைவோர்க்குந் தெய்வமிலைமுகப்பைம்பூணிறையென்பது பற்றித் தந்தையேயனையவத்தகவினானென்றார். 19. பொன்னின்வார்சிலை-ஈசன்வில்.

20. உம்பர்முதலினர் தொழவுளானென்றது - இராமனை.

21. உறைஎன்றது - மிகப்பெரியதோரெண்.

22. கரியகோலப்பெருந்தகையாதலின் காவியுங்குவளையுங் கடியகாயாவு மென்றார்.

தேவருந்தொழுகழற்சிறுவன்முன்பிரிவதோர்
நன்னவந்தரசன்மாடுறுகின்றான். 22

அனிகம்வந்தடிதொழக்கடிதுசென்றரசர்கோன்
இனியபைங்கழல்பணிந்தெழுதலுந்தழுவினான்
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தனமலைத்
தனிநெடுஞ்சிலையிறத்தவழ்தடங்கிரிகளே. 23

இளையபைங்குரிசில்வந்தடிபணிந்தெழுதலுந்
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினான்
களைவருந்துயரறக்ககனமெண்டிசையெலாம்
விளைதரும்புகழினானெனவரிதுயர்மேன்மையான். 24

கற்றைவார்சடையினான்கைக்கொளாதநுவிறக்
கொற்றவீர்புயநிமிர்ந்தருளுமக்குரிசிலின்
பெற்றதாயரையுமப்பெற்றியிற்றொழுதெழுந்
துற்றபோதவர்மனத்துவகையாருரைசெய்வார். 25

உன்னுபேரன்புமிக்கொழுகிவார்ந்தொண்கணீர்
பன்னுதாரைகடாந்தொழுதெழும்பரதனைப்
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினான்
றன்னையத்தாதைமுன்றழுவினானென்னவே. 26

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற்
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப்
பொருவருங்குமரர்தம்புனைநறுங்குஞ்சியால்
இருவர்பைங்கழலும்வந்திருவரும்வருடினார். 27

கோல்வருஞ்செம்மையுங்குடைவருந்தண்மையுஞ்
சால்வருஞ்செல்வமென்றுணர்பெருந்தாதைபோன்
மேல்வருந்தன்மையான்மிகவிளங்கினர்கடா
னால்வரும்பொருவினான்மறையெனுந்நடையினார். 28

23. மலையென்றது - மேருவை, அஃது மலைகளுட் சிறந்தமைபற்றி.

24. துயரறக் ககனமெண்டிசையெலாம் விளைதரும்புகழினானென்றார், சம்பரன் முதலானோரைக் குலத்தோடுங்களைந்த சிறப்புநோக்கி.

25. யாரென்னும் வினாவினைக் குறிப்பு ஈண்டின்மைகுறித்துநின்றது, 'யாஅருலகத்தோர் சொல்லில்லா' ரென்புழிப்போல.

28. நால்வருநடையான் நான்மறை பொருவினவற்றையே உவமை கூறினார்.

சான்றெனத்தகையசெங்கோலினானுயிர்கடாம்
ஈன்றநற்றாயெனக்கருதுபேரருளினான்
ஆன்றவிச்செல்வமித்தனையுமொய்த்தருகுறத்
தோன்றலைக்கொண்டுமுற்செல்கெனச்சொல்லினான். 29

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினார்
தீதிலாவுவகையுஞ்சிறிதரோபெரிதரோ
கோதைசூழ்குஞ்சியக்குமரர்வந்தெய்தலுந்
தாதையோடொத்ததத்தனையின்றன்மையே. 30

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந்
தழிவில்சிந்தையினுவந்தாடன்மாமிசைவரத்
தழுவுசங்கொடுநெடும்பணைதழங்கிடவெழுந்
தெழுதருந்தகையதோர்தேரின்மேலேகினான். 31

பஞ்சிசூழ்மெல்லடிப்பாவைமார்பண்ணைசூழ்
மஞ்சுசூழ்நெடியமாளிகையின்வந்திடைவிராய்
நஞ்சுசூழ்விழிகள்பூமழையின்மேல்விழநடந்
திஞ்சிசூழ்மிதிலைமாவீதிசென்றெய்தினான். 32

சூடகந்துயல்வரக்கோதைசோர்தரமலர்ப்
பாடகம்பரதநூல்பகரவெங்கடகரிக்
கோடரங்கிடவெழுங்குவிதடங்கொங்கையார்
ஆடரங்கல்லவேயணியரங்கமெல்லாம். 33

பேதைமார்முதல்கடைப்பேரிளம்பெண்கடாம்
ஏதியார்மாரவேளேவவந்தெய்தினார்
ஆதிவானவர்பிரானணுகலாலணிகொள்கார்
யார்வீதிவாயுற்றவாறுரைசெய்வாம். 34

ஆக திருவிருத்தம் – 1148.

30. வினையுவகைபோலாது உயிர்க்குறுதி பயத்தலான் தீதிலாவுவகை யென்றார். ஆதலொத்தது என்றது - ஆதொத்ததெனநின்றது.

32. சூழ் என்னு முதனிலைத்தனி வினைப்பெயர் சூழ்ந்தென்னும் வினையெச்சப் பொருளது.

34. பேதைமார்முதல் கடைப்பேரிளம் பெண்களென்றது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ணென்னு மெழுவரை.

# 19-வது உலாவியற்படலம்



மானினம்வருவபோன் றுமயிலினந்திரிவபோன்று
மீனினமிளிர்வபோன் றுமின்னினமிடைவபோன்றுந்
தேனினஞ்சிலம்பியார்ப்பச்சிலம்பினம்புலம்பவெங்கும்
பூனைகூந்தன்மாதர்பொம்மெனப்புகுந்துமொய்த்தார். 1

விரிந்துவீழ்கூந்தல்பாரார்மேகலையற்றநோக்கார்
சரிந்தபூந்துகில்கடாங்காரிடைதடுமாறத்தாழார்
நெருங்கினர்நெருங்கிப்புக்குநீங்குமினீங்குமின்னென்
றருங்கலமனையமாதர்தேனுகரளியின்மொய்த்தார். 2

கண்ணிறாற்காதலென்னும்பொருளேயேகாண்கின்றோமிப்
பெண்ணினீர்மையினுலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்
மண்ணினீருலர்ந்துவானமழையறவறந்தகாலத்
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார். 3

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானல்பூத்த
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூந்
தள்ளத்தம்மிடைகளேவத்தமைவலித்தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாருமொத்தார். 4

அரத்தமுண்டனையமேனியகலிகைக்களித்ததாளும்
விரைக்கருங்குழலிக்காகவில்லிறநிமிர்ந்துவீங்கும்
வரைத்தடந்தோளுங்காணமறுகினின்வீழுமாதர்
இரைத்துவந்தமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார். 5

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான்
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்குங்கண்ணனென்றே
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான். 6

எண்கடந்தலகிலாதின்றேகுறுமிவன்றேரென்று
பெண்கடாந்தம்மிநொந்துபேதுறுகின்றகாலை

---

1. கண்ணான் மானினத்தையும், சாயலான் மயிலினத்தையும், அணிகலனான் மீனினத்தையும், இடையான் மின்னினத்தையுங் கூறினர்.

3. காதலைப்பொருளென்றார் வைசேடிகர்பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றுள் அறுவகைப்பொருளென்றதனை யென்க.

6 யாவர் கண்ணிடைச்செல்வனென்றதுபற்றிக் கண்ணனென்றதென்க.

மண்கடந்தமரர்வைகும்வான்கடந்தானைத்தான்றன்
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளோதான். 7

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பருநலனும்பண்புஞ்
செயிரின்றியலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும்
வயிரஞ்செய்பூணுநாணுமடனுந்தன்னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதனிமைநின்றாள். 8

குழையுறுமிளிருங்கெண்டைகொண்டலின்றுளிசிந்தத்
தழையுறுக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய
இழையுறுப்புண்ணுறுத்திளமுலையொருத்திசோர்ந்து
மழையுறுமின்னினன்னமருங்குல்போலொடுங்கிநின்றாள். 9

பஞ்சணிவிரலினார்தம்படைநெடுங்கண்களெல்லாம்
செஞ்செவேயையன்மெய்யிற்கருமையைச்சேர்ந்தவோதா
மஞ்சனமேனியான்றன்மணிநிறமாதரார்தம்
அஞ்சனநோக்கம்பார்க்கவிருண்டதோவறிகிலேமால். 10

மாந்தளிர்மேனியாளோர்வாளுநுதன்மதனனெங்கும்
பூந்துணர்வாளிமாரிபொழிகின்றபூசனோக்கி
வேந்தர்கோனுனைநோக்கான்வீரன்வில்லாண்மையாரான்
ஏந்திழையாரையெய்வான்யாவனோவொருவனென்றாள். 11

சொன்னலங்கடந்தகாமச்சுவையையோருருவமாக்கி
இன்னலந்தெரியவல்லாரெழுதியதென்னநின்றாள்
பொன்னையும்பொருவுநீராள்புனைந்தனவெல்லாம்போகத்
தன்னையுந்தாங்கலாதாடுகிலொன்றுந்தாங்கிநின்றாள். 12

விற்றங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்மா
சுற்றெங்குமெறிப்பவள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள்

---

7. கடவுள் என்னும் பெயர்பற்றி மண்கடந்தமரர்வைகும் வான்கடந்தா ரென்றார்.

8. உருத்தெனக் கலைமுதலியன தன்னினீங்கினமை யுணராமை இலக்கணையாற் கூறினார்.

9. இவனை யடையத் தவமுடையே னல்லேனெனத் தன்னை நோக்கிக் கவன்றமையான் கெண்டையாலி சிந்தவென்றார்.

11. வேந்தர்கோனுனைக் கச்சமும்வீரன் வில்லாண்மைக்கு நாணமுமில் லாது ஏந்திழையாரை யெய்வதனுன் யாவனோ என்றதென்க.

12. உளத்து நிகழுங் காமச்சுவை பிறர்க்குப்புலப்பட இற்றென்று வாயாற் கூறுவதறிதும், ஏனையுலகங்களினும் சிறந்ததுமாகலின் சொன்னலங் கடந்த காமச்சுவை என்றார்.

கொற்றஞ்செய்கொலைவேலென்னக் கூற்றெனக்கொடியகண்ணாள்
மற்றொன்றுங்காண்கிலாதாடமியனேவள்ளலென்றாள். 13

மைக்கருங்கூந்தற்செவ்வாய்வாணுதலொருத்தியுள்ளம்
நெக்கனளுருகுகின்றாணெஞ்சிடைவஞ்சன்வந்து
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலங்கொள்வாயுஞ்
சிக்கெனவடைத்தேதன்றோழிசேருதுமமளியென்றாள். 14

தாக்கணங்கனையமேனிதைந்தவேள்சரங்கள்பாராள்
வீக்கியகலையுந்தூசும்வேறுவேறானதோராள்
ஆக்கியபாவையன்றோவொருத்தியாண்டமலன்மேனி
நோக்குறுவாரையெல்லாமெரியெழநோக்குகின்றாள். 15

களிப்பனமதர்ப்பநீண்டுகதுப்பினையளப்பகள்ளம்
ஒளிப்பனவெளிப்பட்டோடப்பார்ப்பனசிவப்புள்ளூற
வெளுப்பனகறுப்பவானவேற்கணாளொருத்தியுள்ளங்
குளிர்ப்பொடுகாணவந்தாள்வெதுப்பொடுகோயில்புக்காள். 16

கருங்குழற்பாரம்வார்கொள்கனமுலைகலைசூழல்குல்
நெருங்கினமறைப்பவாண்டோர்நீக்கிடம்பெறாதுவிம்மும்
பெருந்தடங்கண்ணிகாணும்பேரெழிலாசைதூண்ட
மருங்குலின்வெளிகளூடேவள்ளலைநோக்குகின்றாள். 17

வரிந்தவாளனங்கன்வாளிமனங்கழன்றனமுமாதர்
எரிந்தபூணினமுங்கொங்கைவெயர்த்தபோதிழிந்தசாந்தும்
சரிந்தமேகலையுமுந்துஞ்சங்கமுந்தாழ்ந்தகூந்தல்
விரிந்தபூந்தொடையுமன்றிவெள்ளிடையரிதவ்வீதி. 18

13. வள்ளலென்றார். யாவருங்காண வீதியாய்வந்துதவுதனோக்கி.

14. தானடைந்து நமக்கு வேட்கையைப்பெருக்கி அது பயன்படத்தழுவுதலும் உள்ளத்தேவருதல் பெயர்த்தும் சேர்தலென்னுமொரு நிலைநிற்றலுமில்லாமையின்வஞ்சனென்றும், தன்போற்றோழியும் வேட்கையுடையாளாகலானும். தான்கண்ணெனும் புலன்கொள்வாயைச் சிக்கென வடைத்தலின் அவனையுமுடன்கொண்டுபோகவேண்டுமாகலானு மவனையு முளப்படுத்திச் சேருதுமமளி யென்றுங் கூறினர்.

15. யாவரு மொருங்கு நோக்கலின் திருமேனிக்குக்கண்ணெச்சில் படுமென்றதனானும், தன்னை இறைவற்குரியளாகக்கருதி ஏனையோர் நோக்கப் பெறாது அது நமக்கின்றென்னுங் கருத்தானு மெனக.

தோள்கண்டார்தோளேகண்டார்தொடுகழற்கமலமன்ன
தாள்கண்டார்தாளேகண்டார்தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்டகண்ணார்யாரேவடிவினைமுடியக்கண்டார்
ஊழ்கொண்டசமயத்தன்னானுருவுகண்டாரையொத்தார். 19

வேறு

தையல்சிற்றிடையாளொருதாழ்குழல்
உய்யமற்றவனுள்ளத்தொடுங்கினான்
வையமுற்றும்வயிற்றினடக்கிய
ஐயனிற்பெரியாரினியாவரே. 20

அலம்புபாரக்குழலியொராயிழை
சிலம்புமேகலையும்மொலிசெய்திட
நலம்பெய்கொம்பினடந்துவந்தெய்தினாள்
புலம்புசேடியர்கைம்மிசைப்போயினாள். 21

அருப்புமென்முலையாளங்கொராயிழை
இருப்புநெஞ்சினையேனுமொரேழைக்காப்
பொருப்புவில்லைப்பொடிசெய்தபுண்ணியா
கருப்புவில்லிறுத்தாட்கொண்டுகொவென்றாள். 22

மைதவழ்ந்தகருங்கணோர்வாணுதல்

செய்தவந்தெதிர்நின்றமைதானிது
கைதவங்கொல்கனவுகொலோவென்றாள். 23

மாதொருத்திமனத்தினையல்லதோர்
தூதுபெற்றிலளின்னுயிர்சோர்கின்றாள்
போதரிக்கட்பொலங்குழைப்பூண்முலைச்
சீதையெத்தவஞ்செய்தனளோவென்றாள். 24

---

19. தாடகையை வென்ற தோளாண்மை நோக்கித் தோள்கண்டார் தோளே கண்டாரென்றும், அகலிகை சாபமொழித்த தாளின்பெருமை நோக்கிக் கமலமன்னதாள் கண்டார் தாளேகண்டார் தாளேகண்டாரென்றும், ஈசன் வில்லிறுத்த ஆற்றறொன்றத் தடக்கைகண்டாருமஃதே என்றுங் கூறினார்.

21. புலம்புசேடியரென்றார் இவளைப்பிரியுமாறுவந்ததென்று கவன்றமையானென்க.

23. செய்துமுடித்த தவத்தானாகலின் செய்தவனென்றார்.

24. கிள்ளை நாரைமுதலிய தூதினின்று நீங்குதற்கு மனத்தினையல்லதோர் தூதென்றார்.

பழுதிலாவொருபாவையன்னாள் பதைத்
தழுதுவெய்துயிர்த்தன்புடைத்தோழியைத்
தொழுதுசோர்ந்தயர்வாளிந்தத்தோன்றலை
எழுதலாகுங்கொன் மன்மதனாலென்றாள். 25

[illegible]

தெண்ணுங்காலிவ்விலக்கணமெய்திட
ஒண்ணுமோவிதுணர்த்துகின்றேனிவன்
கண்ணனேயிதுகண்டிரும்பின்னென்றாள். 26

கனகநூபுரங்கைவளையோடுக
மனநெகும்படிவாடியொர்வாணுதல்
அனகனிந்நகரெய்தியதாதியிற்
சனகன்செய்ததவப்பயனாலென்றாள். 27

நனிவருந்திநலங்குடிபோயிடப்
பனிவருங்கணோர்பாசிழையல்குலாண்
முனிவருங்குலமன்னருமொய்ப்பறத்
தனிவருங்கொல்கனவின்றலையென்றாள். 28

புனங்கொள்கார்மயில்போலியொர்பொற்கொடி
[illegible]

மனங்கள்போலமுகமுமறைக்குமே. 29

இணைநெடுங்கணோரிந்துமுகத்திரு
அணையணைந்திடியுண்டவராவெனப்
புணர்நலங்கிளர்கொங்கைபுழுங்கிட
வுணர்வழுங்கவுயிர்த்தனளாவியே. 30

ஆம்பலொத்தமுதூறுசெவ்வாய்ச்சியர்
தாம்பதைத்துயிருட்டடுமாறுவார்
தேம்புசிற்றிடைச்சீதையைப்போற்சீறி
தேம்பல்பெற்றிலரெங்ஙணமுய்வரே. 31

வேர்த்துமேனிதளர்ந்துயிர்விம்மலோ
டார்த்தியுற்றமடந்தையராரையுந்

---

26. ஒன்றுமோ என்றது - ஒண்ணுமோ எனமரீஇயது.
28. பசும்பொனணியன்ற அணியைப் பாசிழை என்றது - வழுவமைதி.
29. உருவிலியாதலான் - அநங்கவேளென்றார்.

தீர்த்தனித்தனைசிந்தையிற்செங்கணிற்
பார்த்திலானுட்பரிவிலனோவென்றாள். 32

வையம்பற்றியமங்கையரெண்ணிலா
ரையன்பொற்புக்களவிலையாதலால்
எய்யும்பொற்சிலைமாரனுமென்செய்வான்
கையம்பற்றுடைவாளினுங்கைவைத்தான். 33

நானவார்குழனாரியரோடலால்
வேனில்வேளொடுமேலுறைவார்களோ
டானபூசலறிந்திலமம்புபோய்
வானநாடியர்மார்பினுந்தைத்தவே. 34

மருண்மயங்குமடந்தையர்மாட்டொரு
பொருணயந்திலன்போகின்றதேதிவன்
கருணையென்பதுகண்டறியான்பெரும்
பரிணதன்கொல்படுகொலையானென்றாள். 35

தொய்யில்வெய்யமுலைத்துடிபோலிடை
நையுநொய்யமருங்குலொர்நங்கைதான்
கையுமெய்யுமறிந்திலள்கண்டவர்
உய்யுமுய்யுமெனத்தளர்ந்தோய்வுற்றாள். 36

பூகலூசல்புரிபவர்போலொரு
பாகின்மென்மொழிதன்மலர்ப்பாதங்கள்
சேகுசேர்தரச்சேவகன்றேரின்பின்
ஏகுமீளுமிதென்செய்தவாறரோ. 37

பெருத்தகாதலிற்பேதுறுமாதரின்
ஒருத்திமற்றங்கொருத்தியைநோக்கியென்
கருத்துமவ்வழிகண்டதுண்டோவென்றாள்
அருத்தியுற்றபின்னாணமுண்டாகுமோ. 38

நங்கையங்கொருபொன்னயந்தாருயந்
தங்களின்னுயிருங்கொடுத்தார்தமர்

---

32. தீர்த்தனென்றதிராமனை.

33. கையம்பற்றுடைவாளினுங் கைவைத்தானென்றார். கை அம்புக ளொழிந் துடைவாளினுங் கைவைத்தானென்க. இனி உடைவாளினுங் கைவைத்தான் என்றது - கையம்புமலரப்பாதலின் தேன்சொரிவதனான் நழுவுகின்றமைபற்றி, அங்ஙனமாகா வண்ணம் கேதகையின் பராகத்தானழுவாவண்ணஞ் செய்தானென்றது. 35. படுகொலையான் - கழிபெருங்கொலையாளி.

எங்களின் னுயிரெங்களுக்கிகலா
ஒகன்றாள். 39

நாமத்தாலழிவாளொருநன்னுதல்
சேமத்தார்வில்லிறுத்ததுதேருங்கால்
தூமத்தார்குழற்றாமொழித்தோகைபாற்
காமத்தாலன்றுகல்வியினுலென்றாள். 40

ஆரமுந்துகிலுங்கலனியாவையுஞ்
சோரவின்னுயிர்சோருமொர்சோர்குழல்
கோரவில்லிமுனையெனைக்கொல்கின்றான்
மாரவேளின்வலியவர்யாரென்றாள். 41

மாதரின்னணமொய்த்திடவள்ளல்போய்க்
கோதில்சிந்தைவசிட்டனுங்கோசிக
வேதபாரனுமேவியமண்டபம்
ஏதின்மன்னர்குழாத்தொடுமெய்தினன். 42

திருவினாயகன்மின்றிரிந்தாலெனத்
துருவின்மாமணியாரந்துயல்வரப்
பருவமேகம்படிந்ததுபோற்படிந்
திருவர்தாளுமுறையினிறைஞ்சினன். 43

இறைஞ்சவன்னவரேத்தினரேவவோர்
நிறைஞ்சபூந்தவிசேறிநிழற்கள்போற்
புறஞ்செய்தம்பியருட்பொலிந்தானரோ
வறஞ்செய்காவற்கயோத்தியிற்றோன்றினன். 44

ஆனமாமணிமண்டபமன்னது
தானைமன்னன்றமரொடுஞ்சார்ந்தனன்
மீனெலாந்தனபின்வரவெண்மதி
வானிலாவுறவந்ததுமானவே. 45

வந்துமாதவர்பாதம்வணங்கிமேற்
சிந்துதேமலர்மாரிசிறந்திட

40. சேமித்துவைத்த வில்லாதலின் சேமத்தார் வில்லென்றார்.
41. பிறர்க்கச்சம்விளைத்தவில்லை விளைத்தவனாகலின் கோரவில்லி என்றார்
42. வேதபாரகன் - வேதபாரனென இடைக்குறைந்தது.
43. தோளாமணி என்றதுபற்றித் துருவின் மாமணி என்றார்.
44. பாம்பணைதுறந்தமை அறத்தை நிறுத்தற்பொருட்டாகலின் அறஞ்செய்காவற்கயோத்தியிற்றோன்றினனென்றார்.

அந்தணாளர்களாகியொடாசனம்
இந்திரன்முகனானுறவேறினான். 46

கங்கர்கொங்கர்கலிங்கர்குலிங்கர்கள்
சிங்காளதிபர்சேரலர்தென்னவர்
அங்கர்சீனர்குலிந்தரவந்திகர்
வங்கர்மாளவர்சோளர்மராடரே. 47

மானமாகதர்மச்சர்மிலேச்சர்கள்
ஏனைவீரவிலாடர்விராடர்கள்
சீனர்தெங்கணர்செஞ்சகர்சோமகர்
சோனசேகர்துருக்கர்குருக்களே. 48

ஏதியாதவரேழ்திறற்கொங்கணர்
சேதிராசர்தெலுங்கர்கருநடர்

மன்னருந்துன்னினார். 49

தீங்கரும்பினுந்தித்திக்குமின்சொலார்
தாங்குசாமரைமாடுதயங்குவ
ஓங்கியோங்கிவளர்ந்தயர்சீர்த்தியின்
பூங்கொழுந்துபொலிவனபோன்றவே. 50

சுழலும்வண்டுமிஞிறுஞ்சுரும்புஞ்சூழ்ந்
துழலும்வாசமதுமலரோதியர்
குழலினோடுறக்கூறுபல்லாண்டொலி
மழலையாழிசையோடுமலிந்தவே. 51

நடை

திங்கடங்கள்குலக்கொடிச்சீதையா
மங்கைமாமணங்காணியவந்தருள்
பொங்கியோங்கித்தழைப்பதுபோன்றதே. 52

ஊடுபேர்விடமின்றியொன்றும்வகை
நீடுமாகடற்றானைநெருங்கலால்
ஆடன்மாமதயானைச்சனகர்கோன்
நாடெலாமொருநன்னகராயதே. 53

---

50. கீர்த்தியை வெண்மையாகக்கூறலின், சாமரை மாடுதயங்குவது கீர்த்தியின் பூங்கொழுந்தென் றுவமித்தார்.

ஒழிந்தவென்னினியொண்ணுதருனைத்தன்
பொழிந்தகாதறொடரப்பொருளெலாம்
அழிந்துவந்துகொண்டாடலினன்புதான்
இழிந்துளார்க்குமிராமற்குமொந்ததே. 54

ஆ திருவிருத்தம் – 1202.

## 21 - வது கோலங்காண்படலம்



தேவியர்மருங்குசூழவிந்திராணிருக்கைசேர்ந்த
ஓவியமுயிர்பெற்றென்னவுவந்தரசிருந்தகாலைத்
தாவில்வெண்கவிகைச்செங்கோற்சனகனையினிதுநோக்கி
மாவியனோக்கினளைக்கொணர்கெனவசிட்டன்சொன்னான்.

உரைசெயத்தொழுதகையனுவந்தவுள்ளத்தன்பெண்ணுக்
கரசியைத்தருதிரீண்டென்றாயிழையவரையேவக்
கரைசெயற்கரியகாதல்கடாவிடக்கடிதுசென்றார்

றார்.

ப்பால

உமிழ்சுடர்க்கலன்கணங்கையுருவினைமறைப்பதோரார்
அமிழ்தினைச்சுவைசெய்தென்னவழகினுக்கழகுசெய்தார்
இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ.

டுண்ணின்றுங்கொடிகளோடியுலகெங்கும்பரந்ததன்ன
வண்ணஞ்செய்கூந்தற்பாரவலயத்துமழையிற்றோன்றும்
விண்ணின்றமதியின்மென்பூஞ்சிகழிகைக்கோதைவேய்ந்தார்.

விதியதுவகையால்வானமீனினம்பிறையைவந்து
கதுவுறுகின்றதென்னக்கொழுந்தொளிகளுலந்தூக்கி
மதியினைத்தந்தமேகமருங்குநாவளைப்பதென்னப்
பொதியிருளளகபந்திபூட்டியபூட்டுமிட்டார்.

1. இந்திராணிருக்கை – அரசனிருக்கை இவ்வாறே வடநூலாரும் இந்திரஸ்தானமென்பர். மாவியனோக்கினளென்றது – சனகியை.

4. சிகழிக்கோதை வேய்தலென்றது–மயிர்முடியிற் பூமாலை முடித்தலை.

வெள்ளத்தின் சடிலத்தான்றன் வெஞ்சிலையிறுத்தவீரன்
தள்ளத்தன்னாவிசோரத் தனிப்பெரும்பெண்மைதன்னை
அள்ளிக்கொண்டகன்றகாளை யல்லன்கொலாங்கொலென்பாள்
உள்ளத்தினூசலாடுங்குழையிழையுமிழவிட்டார். 6

கோனணிசங்கம்வந்துகுடியிருந்தனையகண்டத்
தீனமில்கலன்கடம்மினியையவனவணிதல்செய்தார்
மானணிநோக்கினார்தம்மங்கலக்கழுத்துக்கெல்லாந்
தானணியானபோதுதனக்கணியாதுமாதோ. 7

கோணிலாவானமீன்களினையவனகோத்ததென்கோ
வாணிலாவயங்குசெவ்விவளர்பிறைவகிர்ந்ததென்கோ
நாணிலாநகையினின்றநளிர்நிலாத்தவழ்ந்ததென்கோ
பூணிலாமுலைமேலாரமுத்தையான்புகல்வதென்றோ. 8

மொய்கொள்சீறடியைச்சேர்ந்தமுளரிக்குஞ்செம்மைமீந்த
தையலாளமிழ்தமேனிதயங்கொளிதழுவிக்கொள்ள
வெய்யபூண்முலையிற்சேர்ந்தவெண்முத்தஞ்சிவந்தவென்றாற்
செய்யவர்ச்சேர்ந்துளாருஞ்செய்யராய்த்திகழ்வரன்றே. 9

கொமையுறவீங்குகின்றகுலிசச்செப்பனையகொங்கைச்
சுமையுறநுடங்குகின்றநுசுப்பினாள்பூண்செய்தோளுக்
கிமையுறவிமைக்குஞ்செங்கேழினமணிமுத்தினோடும்
அமையுறவமைவதுண்டாமாகினொப்பாகுமன்றே. 10

தளையவிழ்கோதையோதிச்சானகிதளிர்க்கையென்னு
முளரிகளிராமன்செங்கைமுறைமையிற்றீண்டநோற்ற
அளியனகங்குற்போதுங்குவியலவாகுமென்றுங்
இளவெயில்சுற்றியன்னவெரிமணிக்கடகமிட்டார். 11

சில்லியலோதிகொங்கைத்திரள்மணிக்கனகச்செப்பில்
வல்லியுமனங்கன்வில்லுமான்மதச்சாந்திற்றீட்டிப்

---

6 பெண்மை என்றது - கட்கினிமையாமமைதித்தன்மை.

7. சோவென்றது - அயர்வருமமரர்கட்கிறையை, இதனை 'தேவிற் றிருமா' லென்பதனானறிக. சங்கமென்றது - பாஞ்சசன்னியத்தை.

7. தாவென்றது திருமாமகளை.

10. கொம்மை என்றது - கொமை எனக்குறைந்து நின்றது.

பல்லியனெறியிற்பார்க்கும்பரம்பொருளென்னயார்க்கும்
இல்லையுண்டென்னநின்றவிடையினுக்கிடுக்கண்செய்தார். 12

நிறஞ்செய்கோசிகநுண்டுகினீவிநீவாதவல்குற்
புறஞ்செய்மேகலையுந்தாழுந்தாரகைச்சும்மைபூட்டித்
திறஞ்செய்காசின்றசோதிபேதைசேயொளியிற்றீர்ந்த
கறங்குபுதிரியத்தாமுங்கண்விளக்கற்றுநின்றார். 13

ஐயவாமணிச்சப்போதினதிகமுநொய்யவாடற்
பையரவல்குலாடன்பஞ்சின்றிப்பழுத்தபாதஞ்
செய்யபூங்கமலமன்னச்சேர்த்தியசிலம்புசால
நொய்யவேநொய்யவென்றோபலபடநுவல்வதம்மா. 14

நஞ்சிடையமிழ்தங்கூட்டிநாட்டங்களானவென்னச்
செஞ்செவேநீண்டுமீண்டுசேயரிசிதறித்தீய
வஞ்சமுங்களவுமின்றிமழையெனமதர்த்தகண்கள்
அஞ்சனநிறமோவண்ணல்வண்ணமோவறிதறேற்றாம். 15

மொய்வளர்குவளைபூத்தமுளரியின்முளைத்தமுங்காண்
மெய்வளர்மதியினுப்பண்மீனுண்டேலனையதேய்ப்ப
வையகமடந்தைமார்க்குநாகர்கோதையர்க்கும்வானந்
தெய்வமங்கையர்க்குமெல்லாந்திலதத்தைத்திலதஞ்செய்தார். 16

சின்னப்பூச்செருகுமென்பூச்சேகரப்போதுகோதில்
கன்னப்பூக்களுலமீதுகற்பகக்கொழுந்துமான
மின்னப்பூஞ்சுரும்பும்வண்டுமிஞிறுந்தும்பிகளும்பம்பப்
புன்னைப்பூந்தாதுமானும்பொற்பொடியப்பிவிட்டார். 17

நெய்வளர்விளக்கமாட்டிநீரொடுபூவுந்தூவித்
தெய்வமும்பராவிவேதபாரகர்க்கீந்துசெம்பொன்
ஐயவிநுதலிற்சேர்த்தியாய்நிறவயினிசுற்றிக்
கைவளர்மயிலனுளைவலஞ்செய்துகாப்புமிட்டார். 18

கஞ்சத்துக்களிக்குமின்றேன்கவர்ந்துணும்வண்டுபோல
வஞ்சொற்கள்கிள்ளைக்கெல்லாமருளினுளழைகைமாந்தித்

---

12. பரம்பொருணிலை இல்லையுண்டென நின்றது போன்றிடையுமன்ன தாகலினதனையே யுவமித்தார்.

16. முந்நாள் - ஈண்டு மூன்றாம்பிறையை.

17. கரும்பு முதலியன - நால்வகைவண்டென்க.

18. காப்பு - சூர்முதலியதாக்காமைபொருட்டு இடுவதோர்பொருள்.

தஞ்சொற்கள்குழறித்தந்தங்கைதடுமாறிநின்றார்
மஞ்சர்க்குமாதரார்க்குமனமென்பதொன்றேயன்றே. 19

இழைகுலாமுலையினாளையிடையுவாமதியினோக்கி
மழைகுலாவோதிநல்லார்களிமயக்குற்றுநின்றார்
உழைகுலாநயனத்தார்மாட்டொன்றொன்றேவிரும்பற்கொத்த
தழைகெலாமொருங்கேகண்டால்யாவரேயாற்றவல்லார்.

சங்கங்கையுடைமையாலுந்தாமரைக்கோயிலாலும்
எங்கெங்கும்பரந்துவெவ்வேறுள்ளத்தினெழுதிற்றென்ன
அங்கங்கேதோன்றலாலுமருந்ததியனையகற்பி
னங்கையுநம்பியொத்தாளினிப்புகல்வதென்னே. 21

பரந்தமேகலையுங்கோத்தபாதசாலகமுநாகச்
சிரஞ்செய்நூபுரமும்வண்டுஞ்சிலம்பொடுசிலம்பியார்ப்பப்
புரந்தரன்கோற்கீழானோரம்பையர்புடைசூழ்ந்தென்ன
வரம்பறுமழலைத்தீஞ்சொன்மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார். 22

சிந்தொடுகுறளுங்கூனுஞ்சிலதியர்குழாமுந்தெற்றி
வந்தடிவணங்கிச்சுற்றமணியணிவிதானநீழல்
இந்துவின்கொழுந்துவிண்மீனினத்தொடும்வருவதென்ன
நந்தலில்விளக்கமன்னநங்கையுநடக்கலுற்றாள். 23

வேறு

வல்லியையுயிர்த்தநிலமங்கையிவள்பாத
மெல்லியவுறைக்குமெனவஞ்சிவெளியெங்கும்
பல்லவமலர்த்தொகைபரப்பினவெனத்தன்
னல்லணிமணிச்சுடர்தவழ்ந்திடநடந்தாள். 24

தொழுந்தகையமென்னடைதொலைந்துகளியன்னம்
எழுந்திடைவிழுந்தயர்வதென்னவயலெங்கும்
கொழுந்துடையசாமரைகுலாவவொர்கலாவம்
வழங்கநிழன்மின்னவருமஞ்சையெனவந்தாள். 25

மண்முதலனைத்துலகின்மங்கையருளெல்லாங்
கண்மணியெனத்தகையகன்னியெழில்காண
அண்ணன்மரபிற்சுடாருத்தியொடுதானவ்
விண்ணிழிவதொப்பதொர்விதானநிழல்வந்தாள். 26

---

19. 'மஞ்சரென்றது' ஆடவரை.

21. சங்கு அங்கையுடைமை - சங்கமேந்தியிருத்தல், வளையலணிந் திருத்தல்.

கற்றைவிரிபொற்சுடர்பயிற்றுறுகலாபஞ்

விற்றவழவாணிமிரமெய்யணிகன்மின்னச்
சிற்றிடைநுடங்கவொளிர்சிறடிபெயர்த்தாள். 27

பார்

மின்னினிழலன்னவடன்மேனியொளிமான
வன்னமுமரம்பையருமாரமிர்துநாண
மன்னவையிருந்தமணிமண்டபமடைந்தாள். 28

சமை

சுமைத்திரண்முலைத்தெரிவைதூயவடிவுகண்டார்
அமைத்திரள்கொடோளியருமாடவருமெல்லாம்
இமைத்திலருயிர்த்திலர்கள்சித்திரமெனத்தாம். 29

அன்னவளையல்லளெனவாமெனவயிர்ப்பான்
கன்னியமிழ்தத்தையெதிர்கண்டகடல்வண்ணன்
உன்னுயிர்நிலைப்பமெதாருத்தியொடுழைத்தாண்
டின்னமிழ்தெழக்களிகொளிந்திரனையொத்தான். 30

நறத்துறைமுதிர்ச்சியுறுநல்லமிழ்துபில்குற்
றறத்தின்விளைவொத்துமுகடுந்தியருகுய்க்கு
நிறத்துவரிதழ்க்குயினினிளைப்பினிடையல்லாற்
புறத்துமுளதோவெனமனத்தொடுபுகன்றான். 31

எங்கள்செய்தவத்தினினிராமனெனவந்தான்
சங்கினெடுசக்கரமுடைத்தனிமுதற்பேர்
அங்கணரசாதவினவ்வல்லிமலர்புல்லு
மங்கையிவளாமெனவசிட்டன்மகிழ்வுற்றான். 32

துன்றுபுரிகோதையெழில்கண்டுலகுசூழ்வந்
தொன்றுபுரிகோலொடுதணித்திகிரியுய்ப்பான்
என்றுமுலகேழுமரசெய்தியுளனேனும்
இன்றுதிருவெய்தியதுவென்வயமதென்றான். 33

நைவளநவிற்றுமொழிநண்ணவரலோடும்
வையநுகர்கொற்றவனுமாதவருமல்லார்

---

28. நடையினன்னமும், அழகினரம்பையரும், சொல்லினமிழ்து மொப்பாகாமையினுணவென்றார்.

34. வையநுக கொற்றனென்றது - இராமனை.

கைகடலைபுக்கனகருத்துளதுமெல்லாம்
தெய்வமெனவுற்றவுடல்சிந்தையயமன்றே. 34

மாதவனைமுற்கொளவணங்கிநெடுமன்னன்
பாதமலரைத்தொழுதுகண்கள்பனிசோருந்
தாதையருகிட்டதவிசிற்றனியிருந்தான்
போதினைவெறுத்தரசர்பொன்மனைபுகுந்தாள். 35

அச்செனநினைந்துமுதலந்தணனிருந்தான்
பச்சைமலையொத்தபடிவத்தடலிராமன்
நச்சுடைவடிக்கண்மலர்நங்கையிவளென்றால்
இச்சிலைகிடக்கமலையேழுமிறுமென்றே. 36

எய்யவில்வளைந்ததுமிறுந்ததுமுரைத்து
மெய்வினைவிடத்துமுதலையம்விடலுற்றான்
ஐயனையகத்துவடிவேயலபுறத்துங்
கைவளைதிருத்துபுகடைக்கணினுணர்ந்தாள். 37

கருங்கடைநெடுங்கணொளியாறுநிறைகண்ணப்
பெருங்கடலின்மண்டவுயிர்பெற்றினிதுயிர்க்கும்
அருங்கலனணங்கரசியாரமிழ்தனைத்தும்
ஒருங்குடனருந்தினரையொத்துடறடித்தாள். 38

கணங்குழைகருத்திலுறைகள்வனெனலானான்
வணங்குவிலிறுத்தவனெனத்துயர்மறந்தாள்
அணங்குறுமவிஞ்சைகெடவிஞ்சையினகம்பா
டுணர்ந்தறிவுமுற்றபயனுற்றவரையொத்தாள். 39

சொல்லுயர்களிற்றரசர்கோமகனிருந்தான்
கல்விகரையுற்றமுனிகௌசிகனைமேலோய்
வல்லிபொருசிற்றிடைமடந்தைமணநாளாம்
எல்லையினலத்தபகலென்றுரைசெய்கென்றான். 40

வாளையுகளக்கயல்கள்வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழியமூரியவரான்மீன்
பாளைவிரியக்குதிகொள்பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபகனற்றவனுரைத்தான். 41

சொற்றபொழுதத்தரசர்கைதொழுதெழுந்தன்
பொங்கப்

---

36. அவிஞ்சையென்ற தவித்தையை, அது பிறவித்துயர்க் கேதுவாகலின் அணங்குறுமென விசேடித்தார்.

பொற்றடமுடிப்புதுவெயிற்பொழிதரப்போய்
நற்றவரனுச்சையொடுநன்மனைபுகுந்தான். 42

பொன்னினெடுமாடவரைபுக்கனன்மணிப்பூண்
மன்னவர்பிரிந்தனர்கண்மாதவர்கள்போனார்
மின்னுசுடர்நாயகனுமேருவின்மறைந்தான். 43

ஆ திருவிருத்தம் – 1245.

---

## 22 – வது கடிமணப்படலம்

இடம்படுபுகழ்ச்சனகர்கோனினிதுபேணக்
கடம்படுகளிற்றரசராதியிடைகண்டோர்
தடம்படுபுயத்தசிறுதம்பியர்கள்காறும்
உடம்பொடுதுறக்கநகருற்றவரையொத்தார். 1

தேடருநலத்தபுனலாசைதெறனுற்றார்
மாடொர்தடமுற்றதனையெய்தும்வகைகாணார்
ஈடழிவுறத்தளர்வொடேமுறுவரன்றே
ஆடகவளைக்குயிலுமந்நிலையளானாள். 2

வேறு

உரவேதுமிலாருயிரீதுமெனாக்
கரவேபுரிவாருளரோகதிரோன்
வரவேயெனையாளுடையான்வருமே
யிரவேகொடியாய்விடியாயெனுமால். 3

கருநாயிறுபோல்பவர்காலொடுபோய்
வருநாளயலேவருவாய்மனனே
பெருநாளுடனேபிரியாதுழல்வாய்
ஒருநாடரியாதொழிவாருளரோ. 4

கனையேழ்கடல்போல்கருநாழிகைதான்
வினையேன்வினையால்விடியாவிடினீ
தனியேபறவாய்தகவேதுமிலாய்
பனைமேலுறைவாய்பழிபூணுதியோ. 5

43. மின்னுசுடர் நாயகன் - ஞாயிறு.
5. கருநாழிகை - இரவு.

அயில்வேலனல்கால்வனவாநிழலாய்
வெயிலேயெனநீவிரிவாய்நிழலே
செயிரேதுமிலாருடறேய்வுறுவார்
உயிர்கோளுறுவாருளரோவுரையாய். 6

மன்றற்குளிர்வாசம்வயங்கனல்வாய்
மின்றெறுக்துநிலாநகைவீழ்மலயக்
குன்றிற்குலமாமுழையிற்குடிவாழ்
தென்றற்புலியேயிரைதேடுதியோ. 7

தெருவேதிரிவாரொருசேவகனார்
இருபோதும்விடாரிதுவென்னைகொலாங்
கருமாமுகில்போல்பவர்கன்னியர்பால்
வருவாருளரோகுலமன்னவரே. 8

தெருளாவினைதீயவர்சேரலர்தோய்
அருளாநெறியோடுமொவாதுவோ
கருளார்கடலோகரைகாணரிதாய்
இருளானதுதானெனையூழிகொலாம். 9

பண்ணேமொழியாபகலோபுகுதா
தெண்ணேதவிராவிரவோவிடியா
துண்ணேமொழியாவுயிரோவகலா
கண்ணேதுயிலாவிதுவோகடனே. 10

இடையேவளைசோரவெழுந்துவிழுந்
தடலேய்மதனன்சரமஞ்சினையோ
உடலோய்வுறநாளுமுறங்கலையால்
கடலேயுரைநீயுமொர்கன்னிகொலாம். 11

எனவின்னனபன்னியிருந்துளைவாள்
துனியுன்னிநலங்கொடுசோர்வுறுகான்
மனைதன்னின்மயங்குறும்வைகிருள்வாய்
அனகன்னினைகின்றனயாமமறைவாம். 12

முன்கண்டுமுடிப்பருவேட்கையினால்
என்கண்டுணைகொண்[illegible]ிப்

13 முன்கண்டென்றது - கன்னிகாமாடத்துக் காண்டமலை, என்கண்டுணை கொண்டென்றது என்கண்ணாகிய ஓவியக்கோல் கொண்டென்றதை.

பின்கண்டுமோர்பெண்களைகண்டிலனான்
மின்கண்டவரெங்கறிவார்வினையே. 13

திருவேயனையாண்முகமேதெரியின்
கருவேகனியேவிளைகாமவிதைக்
கெருவேமதியேயிதுவென்செய்தவா
ஒருவேனொடுநீயுறவாகலையோ. 14

கழியாவுயிருந்தியகாரிகைதன்
விழிபோலவளர்ந்ததுவீகிலதால்
அழிபோரிறைவன்படவஞ்சியவன்
பழிபோலவளர்ந்ததுபாயிருளே. 15

நினையாயொருகானெடிதோநெறிதான்
வினவாதவர்பால்விடைகொண்டிலையோ
புனமானனையாரொடுபோயினவென்
மனனேயெனைநீயுமறந்தனையோ. 16

தன்னோக்கெரிகாறகைவாளரவின்
பன்னோக்கினதென்பதுபண்டுகொலாம்
[illegible]
மென்னோக்கினதேகடுவல்விடமே. 17

கல்லார்மலர்சூழ்கழிவார்பொழிலோ
டெல்லாமுளவாயினுமென்மனமோ
சொல்லாரமுதின்சுவையோடினிதாம்
எல்லோதியர்தாம்விளையாடிடமே. 18

வேறு

வானவர்பெருமானும்மனநினைவினனாகத்
தேனகுகுழலாடன்றிருமணவினைநாளைப்
பூநகுமணிவாசம்புனைநகரணிவீரென்
றானையின்மிசையாணையணிமுரசறைவித்தான். 19

---

இதயத்தெழுதி என்றது உள்ளமாகிய ஏட்டிலெழுதி என்றதை, வினை என்றது - காண்டற்றொழிலை. பின்கண்டென்ற - தாசலையிற் கண்டதை. மின்கண்டவரெங்கறிவார் வினையென்றார். மின்னலைக்கண்டார் வேறு பொருளைக் காணாதவாறுபோற் சனகியைக் கண்டதான் வேறொரு பொருளைக் கண்டிலனென்பதனானென்க.

19. வானவர் பெருமானென்ற தயர்வருமமார்கட்கிறையை.

முரசறைதலுமானமுதியருமிளையோரும்
விரைசெறிகுழலாரும்விரவினர்விரைகின்றார்
உரைசெறிகிளையோடுமுவகையினுயர்கின்றார்
கரைசெறிவரிதாருமிரவொருகரைகண்டார். 20

அஞ்சனவொளியானுமலர்மிசையுறைவாளும்
எஞ்சலின்மணநாளைப்புணர்குவரெனவோடுஞ்
செஞ்சுடரிருள்கீறித்தினகரனெழுந்தேர்மேன்
மஞ்சனையணிகோலங்காணியவெனவந்தான். 21

தோரணநடுவாருந்தூறுநறைபொதிவாரும்
பூரணகுடமெங்கும்புனைதுகில்புனைவாருங்
காரணிநெடுமாடங்கதிர்மணியணிவாரு
மாரணமறைவாணர்க்கமுதினிதடுவாரும். 22

அன்னமென்னடையாரும்மழவிடையனையாருங்
கன்னிநன்னகர்வாழைகமுகொடுநடுவாரும்
பன்னருநிரைமுத்தப்பரியனதெரிவாரும்
பொன்னணியணிவாரும்மணியணிபுனைவாரும். 23

சந்தனமகிழுறுஞ்சாந்தொடுதெருவெங்குஞ்
சிந்தினர்திரிவாருஞ்செழுமலர்சொரிவாரும்
[illegible] மாடத்
தந்தமில்விலையாரக்கோவைகளணிவாரும். 24

தளங்கிளர்மணிகாலத்தவழ்சுடருமிழ்தீபம்
இளங்குளிர்முளையார்நற்பாலிகையினமெங்கும்
விளிம்புபொன்வகைநாறவெயிலொடுநிலவீனும்
பளிங்குடையுயர்திண்ணைப்பத்தியின்வைப்பாரும். 25

மந்தரமணிமாடமுன்றிலின்வயினெங்கும்
அந்தமிலொளிர்முத்தினகனிரையொளிவீச
இந்திரனெடுவானம்மீனலர்குவதென்னப்
பந்தரினிழல்வீசப்படர்வெயில்கடிவாரும். 26

வயிரமினொளியீனும்மரகதமணிவேதிச்
செயிரறவொளிர்தீபஞ்சிலதியர்கொணர்வாரும்
வெயில்விரவியபொன்னின்மிடைகொடிமதிதோயும்
எயிலினினடுவாருமகிலெரியிடுவாரும். 27

பண்டியினிறைவாசப்பனிமலர்கொணர்வாருந்
தண்டலையிலையோடுகனிபலதருவாருங்
குண்டலம்வெயில்வீசக்குரகதம்புனைவாரும்
உண்டைகொண்மதவேழத்தோடைகளணிவாரும். 28

கலவைகள்புனைவாருங்கலைநலந்தெரிவாரும்
மலர்குழன்மலைவாரும்மதிமுகமணியாடித்
திலதமுனிடுவாருஞ்சிகழிகையணிவாரும்
இலவிதழ்பொலிகோலமெழில்பெறவிடுவாரும். 29

தப்பினமணிகாசுஞ்சங்கமுமயிலன்னார்
ஒப்பனைபுரிபோதுமூடலினுகுபோதுந்
துப்புறழிளவாசச்சுண்ணமுமுதிர்தாதுங்
குப்பைகளெனவாரிக்கொண்டனர்களைவாரும். 30

மன்னவர்வருவாரும்மறையவர்நிறைவாரும்
இன்னிசைமணியாழினிசைமதுநுகர்வாருஞ்
சென்னியர்திரிவாருஞ்சிலதியர்செறிவாருங்
கன்னலின்மணவேலைக்கடிகைகடெரிவாரும். 31

கணிகையர்தொகுவாருங்கலைபலபயில்வாரும்
பணியணியினமுத்தப்பலவிதநிலமன்னர்
அணிநெடுமுடியொன்றொன்றறைதலினுகுமம்பொன்
மணிமலைதொகுமன்னன்வாயிலின்மிடைவாரும். 32

கேடகம்வெயில்வீசக்கிளரயினிலவீனக்
கோடுயர்நெடுவிஞ்சைக்குஞ்சரமதுபோல
ஆடவர்திரிவாருமரிவையர்களிகூரு
நாடகநவில்வாருநகையுயிர்கவர்வாரும். 33

கதிர்மணியொளிகாலக்கவர்பொருடெரியாவா
றெதிர்சுடர்தரமின்னுற்றெழுதலினிமையோரு
மதுவிரிகுழலாரும்மதிலுடைநெடுவானம்
அதுவிதுவெனவோராதலமாலுறுவாரும். 34

தேர்மிசைவருவாருஞ்சிவிகையில்வருவாரும
ஊர்தியில்வருவாருமொளிமணிநிரையோடைக்
கார்மிசைவருவாருங்கரிணியில்வருவாரும்
பார்மிசைவருவாரும்பண்டியில்வருவாரும். 35

முத்தணியணிவாரும்மணியணிமுனிவாரும்
பத்தியினிமிர்செம்பொற்பலகலன்மகிழ்வாருந்
தொத்துறுதொழின்மாலைசுரிகுழலணிவாருஞ்
சித்திரநிறந்தோயுஞ்செந்துகிற்புனைவாரும். 36

விடநிகர்விழியாருமமுதெனுமொழியாருங்
கிடைபுரையிதழாருங்கிளர்நகையொளியாருந்
தடமுலைபெரியாருந்தனியிடைசிறியாரும்
பெடையனநடையாரும்பிடியெனவருவாரும். 37

உண்ணிறைநிமிர்செல்வமொருதுறைசெலவென்றுங்
கண்ணுறலரிதென்றுங்கருதலரிதம்மா
எண்ணுறுசுடர்வானத்திந்திரன்முடிசூடு
மண்ணுறுதிருநாளேயொத்ததம்மணநாளே. 38

வேறு

கரைதெரிவரியதுகனகம்வேய்ந்தது
வரையெனவுயர்ந்ததுமணியிற்செய்தது
நிரைவளைமணவினைநிரப்புமண்டபம்
அரசர்தமரசனுமணுகன்மேயினான். 39

வெண்குடையிளநிலாவிரிக்கமின்னெனக்
கண்குடையினமணிவெயிலுங்கான்றிடப்
பண்குடைவண்டினம்பாடவாடன்மா
மண்குடைதூளிவிண்மறைப்பமேவினான். 40

மங்கலமுரசினமழையினார்த்தன
சங்குகண்முரன்றனதாரைபோரெனப்
பொங்கினமறையவர்புகலுநான்மறை
கங்குலினொலிக்குமாகடலும்போன்றவே. 41

பரந்ததேர்களிறுபாய்புரவிபண்ணையில்
தரந்தரநடந்தனதானைவேந்தனை
நிரந்தரந்தொழுதெழுநேமிமன்னவர்
புரந்தரன்புடைவருமமரர்போன்றனர். 42

அனையவன்மண்டபமணுகியம்பொனின்
புனைமணியாதனப்பொலியத்தோன்றினான்
முனைவருமன்னருமுறையினேறினார்
சனகனுந்தன்கிளைதழுவவேறினான். 43

மன்னருமுனிவரும்மற்றுளோர்களும்
அன்னமென்னடையணங்கனையமாதருந்
துன்னினர்துவன்றினர்சுடர்கள்சூழ்வரும்
பொன்மலையொத்ததப்பொருவில்கூடமே. 44

புயலுளமின்னுளபொருவின்மீனுள
வியன்மணியினமுளசுடரிரண்டுள
மயன்முதற்றிருத்தியமணிசெய்மண்டபம்
அயன்முதற்றிருத்தியவண்டமொத்ததே. 45

எண்டவமுனிவருமிறைவர்யாவரும்
அண்டரும்பிறரும்புக்கடங்கிற்றுதலின்
மண்டபம்வையமும்வானும்வாய்மடுத்
துண்டவன்மணியணியுதரமொத்ததே. 46

அராவணைதுறந்துபோந்தயோத்தியெய்திய
இராகவன்செய்கையையியம்புவாமரோ. 47

சங்கினந்தவழ்கடலேழிற்றந்தன
சிங்கலிலருமறைதெரிந்ததீர்த்தங்கள்
கங்கையேமுதலியகலந்தநீரினன்
மங்கலமஞ்சனமரபினாடியே. 48

என்றுநான்முகன்முதல்யாரும்யாவையு
நின்றபேரிருளினைநீக்கிநீணெறி
சென்றுமீளாக்குறிசேரச்சேர்த்திடு
தன்றிருநாமத்தைத்தானுஞ்சாத்தியே. 49

கோதறுதவத்துத்தங்குலத்துளோர்தொழும்
ஆதியஞ்சோதியையடிவணங்கினன்
காதியல்கயல்விழிக்கன்னிமார்களை
ப. 50

அழிவருதவத்தினோடறத்தையாக்குவான்
ஒழிவருங்கருணையோருருவுகொண்டென

49. தன்றிருநாமத்தைத் தானுஞ்சாத்தியென்றது - தன்றிருநாமத்தைத் தானுங்கூறிப் புண்டரமிட் டென்பதை. 50. தங்குலத்துளோர்தொழும் ஆதியஞ்சோதி என்றது - ஆயிரமோலியரும்பாஞ்சுடரை.

எழுதருவடிவுகொண்டிருண்டமேகத்தைத்
தழுவியநிலவெனக்கலவைசாத்தியே. 51

மங்கலமுழுநிலாமலர்ந்ததிங்களைப்
பொங்கிருங்கருங்கடல்பூத்ததாமெனச்
தொங்கலுந்துயல்வரச்சூழியுஞ்சூடியே. 52

ஏதமிலிருகுழையிரவுநன்பகற்
காதல்கண்டுணர்ந்தனகதிருந்திங்களுந்
தூதுசென்றுரைப்பனபோன்றுதோன்றவே. 53

கார்விடக்கறையுடைக்கண்ணிச்சிவானவன்
வார்சடைப்புடையினோர்மதிமிலைச்சுந்தான்
சூர்சுடர்க்குலமெலாஞ்சூடினானென
வீரபட்டத்தொடுதிலகமின்னவே. 54

சக்கரத்தயல்வருஞ்சங்கமாமென
மிக்கணிகழுத்தணிதாளவெண்கொடி
மொய்க்குமென்குழலினுண்முறுவலுள்ளுறப்
புக்கணிநிறைத்துமெய்பொடித்தபோன்றவே. 55

பந்திசெய்வயிரங்கள்பொறியிற்பாடுற
வந்தமில்சுடர்மணியழலிற்றோன்றலாற்
சுந்தரத்தோளணிவலயந்தொல்லைநாள்
மந்தரஞ்சுற்றியவரவைமானுமே. 56

கோவையின்பெருவடமுத்தங்கோத்தன
காவல்செய்தடக்கையினடுவட்காந்துவ
மூவகையுலகிற்குமுதல்வனாமென
ஏவரும்பெருங்குறியிட்டபோன்றவே. 57

மாண்டபொன்மணியணிவலயம்வந்தெதிர்
வேண்டினர்க்குதவுவான்விரும்பிக்கற்பகம்
ஈண்டுதன்கொம்பிடையீன்றதாமெனக்
காண்டகுதடக்கையிற்கடகமின்னவே. 58

தேனுடைமலர்மகடிளைக்குமார்பினில்
தானிடைவிளங்கியதகையினாந்தான்

மீனொடுசுடர்விடவிளங்குமேகத்து
வானிடுவில்லெனவயங்கிக்காட்டவே. 59

நணுகவுநிமிரவுநடக்குஞானத்தர்
உணர்வினினொளிதிகழுத்தரீயந்தான்
றணிவருங்கருணைதன்கழுத்திற்சாத்திய
மணியுமிழ்கதிரெனமார்பிற்றோன்றவே. 60

மேவருஞ்சுடரெனவிளங்குமார்பினால்
ஏவருந்தெரிந்தினிதுணர்மினீண்டெனத்
தேவருமுனிவருந்தெரிக்கலாமுதன்
மூவருந்தானெனமுடித்ததொத்ததே. 61

சுற்றுநீடமணியச்சோதிபொங்கமேல்
ஒற்றைமாமணியுமிழுதரபந்தன
மற்றுமோரண்டமுமயனும்வந்தெழப்
பொற்றடந்தாமரைபூத்தபோன்றதே. 62

மண்ணுறுசுடர்மணிவயங்கித்தோன்றிய
கண்ணுறுகருங்கடலதனைக்கைவளர்
தண்ணிறப்பாற்கடறழீஇயதாமென
வெண்ணிறப்பட்டொளிவிளங்கச்சாத்தியே. 63

சலம்வருதாளமுந்தயங்குநீலமும்
அலம்வருநிழலுமிழம்பொற்கச்சினாற்
குலம்வருகனகவான்குன்றைநின்றுடன்
வலம்வருகதிரெனவாளும்வீக்கியே. 64

முகைவிரிசுடரொளிமுத்தின்பத்திவான்
றொகைவரிபட்டிகைச்சுடருஞ்சுற்றிடத்
தகைபுடைவாளெனுந்தயங்குவெய்யவ
னகையிளவெயிலெனத்தொங்கலுற்றியே. 65

காசொடுகண்ணிழல்கஞலக்கைவினை
யேசறுகிம்புரியெயிறுவெண்ணிலா
வீசலின்மகரவாய்விளங்குமின்னென
வாசையையொளிகளாலளந்துகாட்டவே. 66

இனிப்பரந்துலகினையளப்பதெங்கெனத்
தனித்தனித்தடுப்பனபோலுஞ்சால்பின

61. முதன்மூவ ரென்றது - மும்மைப்பெருந்தேவரை.

நுணிப்பருநுண்வினைச்சிலம்புநோன்கழல்
பணிப்பருந்தாமரைப்பாதம்பற்றவே. 67

இன்னணமொளிர்தரவிமையவர்க்கெலாந்
தன்னையேயனையதோர்கோலந்தாங்கினான்
பன்னகமணிவிளக்கழலும்பாயலுள்
அன்னவர்தவத்தினாலனந்தர்னீங்கினான். 68

முப்பரம்பொருளிற்குண்முதலைமூலத்தை
யிப்பாரந்துடைத்தவரெய்துமின்பத்தை
யப்பனையப்பினுளமிழ்தந்தன்னையே
ஒப்பனையொப்பனாயுரைக்கவொண்ணுமோ. 69

பல்பதினாயிரம்பசுவும்பைம்பொனும்
எல்லையினிலனொடுமணிகள்யாவையும்
நல்லவர்க்குதவினானவிலுநான்மறைச்
செல்வர்கள்வழுத்துறத்தேர்வந்தேறினான். 70

பொற்றிரளச்சதுவெள்ளிச்சில்லிபுக்
குற்றதுவயிரத்தினுற்றகட்டது
சுற்றுறுநவமணிசுடருந்தோற்றத்த
தொற்றையாழிக்கதிர்த்தேரொடொத்ததே. 71

நால்வருந்தகையனநுனிக்குநோன்மைய
சால்பெருஞ்செல்வியதருமமாதிய
நாலையுமனையனபுரவிநான்கொரு
பாலமையுணர்ந்தவன்பக்கம்பூண்டவே. 72

அனையதோர்தேரினிலருணனின்றெனப்
பணிவருமலர்க்கணப்பரதன்கோல்கொளக்
குனிசிலைத்தம்பிபின்கூடவேனைய
னினியபொற்கவரிகாலியக்கவேகினான். 73

---

69. முப்பரம் பொருளென்றது சங்கருஷணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்பாரை. முதலையென்றது-பாற்கடற்பரமனை. மூலத்தையென்றது வாசுதேவனை. இப்பாரந்துடைத்தவரெய்து மின்பத்தையென்றது பரமபதநாதனை. அப்பனையென்றது திருவேங்கடமுடையானை. அப்பினுளமிர்தமென்றது ஆவிக்காவியாய்நின்ற பரஞ்சுடரை. அதிமானுடசேட்டிதத்தை யுணர்த்தத் தன்னையே யொப்பனையென்று மிவ்வாரிச்சமயத்தவர் கூறும் பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சாவதார மறிவித்தமை காண்க.

72. தருமமாதிய நாலையும் - அறம், பொருள், இன்பம், வீடு.

அமைவருமேனியானழகினையதோ
கமையுறுமனத்தினற்கருதவந்ததோ
சமைவுறவறிந்திலந்தக்கதாகுக
விமையவராயினாரிங்குளாருமே. 74

வரம்பறுமுலகினைவலிந்துமாய்வின்றித்
திரம்பயிலரக்கர்தம்வருக்கந்தேய்வின்று
நிரம்பியதெனக்கொடுநிறைந்ததேவரும்
அரம்பையர்குழாத்தொடுமாடன்மேயினார். 75

சொரிந்தனர்பூமழைசுண்ணந்தூவினர்
விரிந்தொளிர்காசுபொன்றூசுவீசினர்
பரிந்தனரழகினைப்பருகினார்கொலாந்
தெரிந்திலந்திருநகர்மகளிர்செய்கையே. 76

வள்ளலைநோக்கியமகளிர்மேனியின்
எள்ளரும்பூணெலாமிரியநிற்கின்றார்
உள்ளனயாவையுமுதவிப்பூண்டவும்
கொள்ளையிற்கொள்கெனக்கொடுக்கின்றாரினே. 77

வேறு

எஞ்சலினுலகத்துள்ளவெறிபடையரசவெள்ளங்
குஞ்சரக்குழாத்திற்சுற்றகொற்றவனிருந்தகூடம்
வெஞ்சினத்தனுவலானுமேருமால்வரையிற்சேருஞ்
செஞ்சுடர்க்கடவுளென்னத்தேரிடைச்சென்றுசேர்ந்தான். 78

இரதமாண்டிழிந்தபின்னரிருமருங்கிரண்டுகையும்
பரதனுமிளையகோவும்பரிந்தனரேந்தப்பைந்தார்
வரதனுமெய்திமைதீர்மாதவர்த்தொழுதுநீதி
விரதமெய்த்தாதைபாதம்வணங்கிமாடிருந்தவேலை. 79

சிலையுடைக்கயல்வாட்டிங்களேந்தியோர்செம்பொற்கொம்பர்
முலையிடைமுகிழ்ப்பத்தேர்மேன்முன்றிசைமுளைத்ததன்னாள்
அலைகடற்பிறந்துபின்னையவனியிற்றோன்றிமீள
மலையிடையுதிக்கின்றாள்போன்மண்டபமதனில்வந்தாள். 80

---

74. கண்ணிமைத்தலின்றி நோக்கலின் இமையவராயினா ரிங்குளாருமென்றார்.

77. தன் திருநாமத்தை ஒருகாற்கூறியமாத்திரையின், அன்னோர்க்குவீடுபேறு முதலியவற்றை எண்ணியாங்குவரையாது பயத்தலின் வள்ளல் என்றார்.

வேறு

நன்றிவானவரெலாமிருந்தநம்பிமைத்
துன்றிருங்கருங்கடறுவைப்பத்தோன்றிய
மன்றலங்கோதையாண் மாலேருட்டிய
அன்றினுமின்றுடைத்தழகென்றாரரோ. 81

ஒலிகடலுலகினிலும்பர்நாகரிற்
பொலிவதுமற்றிவள் பொற்பென்றாலிவள்
மலிதருமணம்படுதிருவைவாயினான்
மெலிதருமுணர்வினென்விளம்புகேனரோ. 82

இந்திரன்சசியொடுமெய்தினனிளஞ்
சந்திரமௌலியுந்தையலாளொடும்
அந்தரம்புகுந்தனனழகுகாணவே. 83

நீந்தருங்கடலெனநிறைந்தவேதியர்
தோய்ந்தநூன்மார்பினர்சுற்றத்தொன்னெறி
வாய்ந்தநல்வேள்விக்குவசிட்டன்மையற
ஏய்ந்தனகலப்பையோடினிதினெய்தினான். 84

தண்டிலமவ்வித்தனனருபைசாத்தினன்
மண்டலம்விதிமுறைவகுத்துமென்மலர்
கொண்டவைசொரிந்தெரிகுழுமமூட்டினன்
பண்டுளமறைநெறிபரவிச்செய்தனன். 85

வேறு

மன்றலின்வந்துமணத்தவிசேறி
வென்றிநெடுந்தகைவீரனுமார்வத்
தின்றுணையன்னமுமெய்தியிருந்தார்
ஒன்றியபோகமும்யோகமுமொத்தார். 86

கோமகன்முன்சனகன்குளிர்நன்னீர்
பூமகளும்பொருளும்மெனநீயென்
மாமகடன்மை
ரன். 87

தந்தபல்லாண்டிசைதார்முடிமன்னர்

வந்தனைநாவலர்வாழ்த்தொலிபால
முந்தியசங்கமுழங்கினமாதோ. 88

வானவர்பூமழைமன்னவர்பொற்பூ
வேனையர்தூவுமிலங்கொளிமுத்தந்
தானகுநாண்மலரென்றிவைதம்மான்
மீனகுவானின்விளங்கியதிப்பார். 89

மையறுமந்திரமுற்றும்வழங்கா
னெய்யமையாவுதியாவையுநேர்ந்தான்
றையறளிர்க்கைதடக்கைபிடித்தான். 90

இடம்படுதோளவனோடியையவேள்வி
தொடங்கியவெங்கனல்சூழ்வருபோதின்
மடம்படுசிந்தையண்மாறுபிறப்பின்
உடம்புயிரைத்தொடர்கின்றதையொத்தாள். 91

வலங்கொடுதீயைவணங்கினர்வந்து
பொலம்புரிநூலவர்செய்பொருண்முற்றி
இலங்கொளியம்மிமிதித்தெதிர்நின்ற
கலங்கலில்கற்பினருந்ததிகண்டார். 92

மற்றுளசெய்வனசெய்துமகிழ்ந்தார்
முற்றியமாதவர்தாண்முறைசூடிக்
கொற்றவனைக்கழல்கும்பிடலோடும்
பொற்றொடிகைக்கொடுநன்மனைபுக்கான். 93

ஆர்த்தனபேரிகளார்த்தனசங்கம்
ஆர்த்தனநான்மறையார்த்தனர்வானோர்
ஆர்த்தனபல்கலையார்த்தனபல்லாண்
டார்த்தனவண்டினமார்த்தனவேலை. 94

கேகயமாமகள்கேழ்கிளர்பாதந்
தாயினுமன்பொடுதாழ்ந்துவணங்கா

தூயசுமித்திரைதாடொழலோடும். 95

அன்னமுமன்னவரம்பொன்மலர்த்தாள்
சென்னிபுனைந்தனள்சிந்தையுவந்தார்

90. தடக்கைபிடித்தான் — பாணிக்கிரகணம் செய்தான்.
92. அம்மிமிதித்தலைச் சத்தபதி என்பர் வடநூலார்.

கன்னியருந்திகாரிகைகாறு
நன்மகனுக்கிவணல்லணியென்றார். 96

சங்குவளைக்குயிலைத்தழீஇநின்றார்
அங்கணனுக்குரியாருளராவார்
பெண்களினிப்பிறராருளரென்றார்
கண்கள்களிப்பமனங்கள்களிப்பார். 97

எண்ணிலகோடிபொன்னெல்லையில்கோடி
வண்ணவருங்கலமங்கையர்வெள்ளங்
கண்ணகனொடுகொடாயர்தூசும்
பெண்ணினணங்கனையாள்பெறுகென்றார். 98

நூற்கடலன்னவர்சொற்கடனோக்கி
மாற்கடலன்னமனத்தவனோடுங்
கார்க்கடலொப்பதொர்கணைக்கடல்பண்டைப்
பாற்கடலன்னதொர்பாயலணைந்தான். 99

பங்குனியுத்தரமானபகற்போ
தங்கணிருக்கினிலாயிரநாமச்
சிங்கமணத்தொழில்செய்துதிறந்தான்
மங்கலவங்கிவதிட்டன்வளர்த்தான். 100

வள்ளறனக்கிளையோர்கடமக்கும்
எள்ளலில்கொற்றவனெம்பியளித்த
அள்ளன்மலர்த்திருவன்னவர்தம்மைக்
கொள்ளுமெனத்தமரோடுகுறித்தான். 101

கொய்ந்நிறைதாரன்குசத்துவசப்பேர்
நெய்ந்நிறைவேலவன்மங்கையர்நேர்ந்தார்
மைந்நிறைகண்ணியர்வானுறைநீரார்
மெய்ந்நிறைமூவரைமூவரும்வேட்டார். 102

வேட்டவர்வேட்டபின்வேந்தனுமேனாட்
கூட்டியசீர்த்திகொடுத்திலனல்லால்

---

99. காற்கடல் — காலைவீசுங்கடல்.

101. வள்ளறனக்கிளையோரென்பது பரதன்முதன் மூவரை என்க.

102. குசத்துவசன் என்றது சனகற்கிளையானை, அவன் மக்களாகிய மாளவி, ஊர்மிளை, சுதகீர்த்தி என்பாரைப் பரதன் முதலிய மூவரும் வேட்டனரென்க. ஊர்மிளையைச் சனகன் மகளென்பர் வான்மீகரும்.

ஈட்டியமெய்ப்பொருள்யாவுளவெல்லாம்
வேட்டவர்வேட்டவைவேண்டளவீந்தான். 103

ஈந்தளவில்லதொரின்பநுகர்ந்தா
ஞய்ந்துணர்கேள்வியருந்தவரோடும்
வேந்தனுமந்நகர்வைகினன்மெள்ளத்
தேய்ந்தனநாள்சிலசெய்தது ரைப்பாம். 104

ஆ திருவிருத்தம்–1349.

## 22 - வது பரசுராமப்படலம்



தானுவதொர்வகையேநனிசனகன்றருதையலுந்
நானுவிதமுறுபோகமுநுகர்கின்றவந்நாள்வாய்
ஆறுமறைநெறிமாதவமுனிகோசிகனருளிப்
போனன்வடதிசைவாயுயர்பொன்மால்வரைபுக்கான்.

அப்போதினின்முடிமன்னவனணிமாநகர்செலவே
இப்போதுநமணிகந்துணையெழுகென்றினிதிசையாக்
கைப்போதகநிகர்காவலர்குழுவந்தடிகதுவ
ஒப்போதருதேர்மீதினிலினிதேறினனுரவோன்.

தன்மக்களுமருமக்களுநனிதன்கழறழுவ
மன்மக்களுமயன்மக்களும்வயின்மொய்த்திடமிதிலைத்
தொன்மக்களுமனமுக்குயிர்பிரிவென்பதொர்துயரின்
வன்மைக்கடல்புகவுய்ப்பதொர்வழிபுக்கனன்மறவோன்.

முன்னேநெடுமுடிமன்னவன்முறையிற்செலமிதிலை
நன்மாநகருறைவார்மனநனிபின்செலநடுவே
தன்னேர்புரைதருதம்பியர்தழுவிச்செலமழைவாழ்
மின்னேபுரையிடையாளொடுமினிதேகினன்வீரன்.

ஏகும்மளவையின்வந்தனவலமும்மயிலிடமுங்
காகம்முதலியமுந்தியதடைசெய்வனகண்டா
ஞகம்மனனிடையிங்குளதிடையூறெனநடவான்
மாகம்மணியணிதேரொடுநின்றானெறிவந்தான்.

நின்றேநெறியுணர்வாரொருநினைவாளனையழையா
நன்றேபழுதளதோநடுவுரைநீநயமென்னக்

1. ஆறுமறைநெறி என்பது துவாதசாக்கரமனுவை.

குன்றேறபுரைதோளானெதிர்ப்புள்ளின்குறிகொள்வான்
இன்றேறவருமிடையூறதுநன்றாய்விடுமென்றான். 6

என்னும்மளவினில்வானகமிருள்கீறிடவொளியாய்
மின்னும்படிபுடைவீசியசடையான்மழுவுடையான்
பொன்னின்மலைவருகின்றதுபோல்வானனல்கால்வான்
உன்னுந்தழல்விழியானுருமதிர்கின்றதொருரையான். 7

கம்பித்தலையெறிநீருறுகலமொத்துலகுலையத்
தம்பித்துயர்திசையானைகடளரக்கடல்சலியா
வெம்பித்திரிதரவானவர்வெருவுற்றிரிதரவோர்
செம்பொற்சிலைதெறியாவயின்முகவாளிகடெரிவான். 8

விண்கீழுறவென்றோபடிமேல்கீழுறவென்றோ
எண்கீறியவுயிர்யாவையும்யமன்வாயிடவென்றோ
புண்கீறியகுருதிப்புனல்பொழிகின்றனபுரையக்
கண்கீறியகனலான்முனிவியாதென்றயல்கருத. 9

போரின்மிசையெழுகின்றதொர்மழுவின்சிகைபுகையத்
தேரின்மிசைமலைசூழ்வருகதிருந்திசைதிரிய
நீரின்மிசைவடவைக்கனனெடுவானுறமுடுகிப்
பாரின்மிசைவருகின்றதொர்படிவெஞ்சுடர்படர. 10

பாழிப்புயமுயர்திக்கிடையடையப்புடைபடருஞ்
சூழிச்சடைமுடிவிண்டொடவயல்வெண்மதிதோற்ற
ஆழிப்புனலெரிகானிலமாகாயமுமழியும்
ஊழிக்கடைமுடிவிற்றனியுமைகேள்வனையொப்ப. 11

அயிர்சுற்றியகடன்மாநிலமடையத்தனிபடருஞ்
செயிர்சுற்றியபடையானடன்மறமன்னவர்திலதன்
உயிருற்றதொர்மரமாமெனவோராயிரமுயர்தோள்
வயிரப்பணைதுணிவத்தொடுவடிவாய்மழுவுடையான். 12

நிருபர்க்கொருபழிபற்றிடநிலமன்னவர்குலமுங்
கருவற்றிடமழுவாள்கொடுகளைகட்டுயிர்கவரா
விருபத்தொருபடிகாலெழுகடலொத்தலையெறியுங்
குருதிப்புனலதனிற்புகமுழுகித்தனிக்குடைவான். 13

கமையொப்பதொர்தவமுஞ்சுடுகனலொப்பதொர்சினமுஞ்
சமையப்பெரிதுடையானெதிர்தளர்வுற்றிடைதவிரும்

---

6. புள்ளின்குறி - சகுனம். 12. அயிர் - நுண்மணல், நீர் என்பாருமுளர்.

அமையத்துயர்பறவைக்கினிதாறும்வகைசீறுச்
சிமயக்கிரியுருவத்தனிவடிவாளிகடெரிவான். 14

சையம்புகநிமிரக்கடறழுவும்படிசமைவான்
மையினுயர்மலைநூறியமழுவாளவன்வந்தான்
ஐயன்றனையரிதிற்றருமரசன்னதுகண்டான்
வெய்யன்வரநிபமென்னைகொலெனவெய்துறுமெல்லை. 15

பொங்கும்படையிரியக்கிளர்புருவங்கடைநெரிய
வெங்கண்பொறிசிதறக்கடிதுருமேறெனவிடையாச்
சிங்கம்மெனவுயர்தேர்வருகுமரன்னெதிர்சென்றான்
அங்கண்ணரசவனும்மிவனாரோவெனுமளவில். 16

அரசன்னவனிடைவந்தினிதாராதனைபுரிவான்
விரைசெய்முடிபடிமேலுறவடிமேலுறவிழலுங்
கரைசென்றிலனனையானெடுமுடிவின்கனல்கால்வான்
முரசின்குரல்படவீரனெதிர்நின்றிவைமொழிவான். 17

இற்றோடியசிலையின்றிறமறிவென்னினியானுன்
பொற்றோள்வலிநிலைசோதனைபுரிவானசையுடையேன்
செற்றோடியதிரடோளுறுதினவுஞ்சிறிதுடையேன்
மற்றோர்பொருளிலதிங்கிதென்வரவென்றனனுரவோன். 18

அவனன்னதுபகரும்மளவையின்மன்னவனயர்வான்
புவனம்முழுவதும்வென்றொருமுனிவற்கருள்புரிவாய்
சிவனும்மயனரியும்மலர்சிறுமானிடர்பொருளோ
இவனும்மெனதுயிரும்முனதபயம்மினியென்றான். 19

விளிவார்விளிவதுதீவினைவிழைவாருழையன்றோ
களியாலிவனயர்கின்றனவுளவோகனலுமிழும்
ஒளிவாய்மழுவுடையாய்பொரவுரியாரிடையல்லால்
எளியாரிடைவலியார்வலியென்னாகுவதென்றான். 20

நனிமாதவமுடையாயிதுபிடிநீயெனநல்குந்
தனிநாயகமுலகேழையுமுடையாயிதுதவிராய்

---

15. மழுவாளவனென்றது பாசுராமனை. நிபமென்ற தேதுவை.

19. அரி - இந்திரன், திருமாலென்பாருமுளர், ஸ்ரீராமபிரானேயவனாதலால் அது பொருந்தாதென்றொழி

பனிவார்கடல்புடைசூழ்படிநரபாலரையருளா
முனிவாறினைமுனிகின்றதுமுறையோவெனமொழிவான். 21

புறனின்றவரிகழும்படிநடுவின்றலைபுணராத்
திறனின்றுயர்வலியென்பதொரறனின்றருசெயலோ
விறனின்றதனிலைநின்றுயர்புகழோன்றுவதன்றே
மறனென்பதுமறவோயிதுவலியென்பதுவலியோ. 22

சலத்தி[illegible]மகனனையா[illegible]கடிமல்
உலத்தோடெதிர்தோளாயெனதுறவோடுயிருகுவே
னிலத்தோடுயர்கதிவானுறநெடியாயுனதடியேன்
குலத்தோடறமுடியேலிதுகுறைகொண்டனெனென்றான். 23

என்றுவடிவிழுவானையுமிகழாவெரிவிழியாப்
பொன்றூர்கலைபணிவானெதிர்புகுவானிலையுணராத்
தன்றொலொருசெயலின்மையைநினையாவுயிர்தளரா
மின்றலையர்வுறும்வாளரவெனவெய்துறலுற்றான். 24

மானம்முடைமுடிமன்னவன்மதிசேர்வுறன்மதியான்
றனந்நிலையுறுவானுறுவினையுண்டதுதவிரான்
ஆனம்முடையுமைபண்ணலையங்நாளுறுசிலைதான்
ஊனம்முளததன்மேனிலைகேணீயெனவுரைப்பான். 25

ஒருகால்வருகதிராமெனவொளிகால்வனவுலையா
வருகார்தவழ்வடமேருவின்வலிசால்வனவையம்
அருகாவினைபுரிவானுளனவனாலமைவனதாம்
இருகார்முகமுளயாவையுமேலாதனமேனுள். 26

வேறு

ஒன்றினையுமையாள்கேள்வனுவந்தனன்மற்றையொன்றை
நின்றுலகளந்தநேமிநெடியவனங்கைகொண்டான்
என்றிதுவுணர்ந்தவிண்ணோரிரண்டினும்வன்மையெய்தும்
வென்றியதியாவதென்றுவிரிஞ்சனைவினவநாள். 27

[illegible]யென்பதுன்னி
வேரியங்கமலத்தோனுமியைவதோர்வினயந்தன்னால்

25. ஆனம் என்றது ஒரு வாச்சியவிசேடம்.

யாரினுமுயர்ந்தமூலத்தொருவராமிருவர் நம்மை
மூரிவெஞ்சிலேமேவிட்டுமொய்யமர்மூட்டிவிட்டான். 28

இருவருமிரண்டுவில்லுமேற்றினருலகமேழும்
வெருவரத்திசைகள்பேரவெங்கனல்பொங்கமேன்மேற்
செருமலேகின்றபோழ்திற்றிரிபுரமெரித்ததேவன் 29

மீட்டும்போர்தொடங்கும்வேலேவிண்ணவர்விலக்கவல்வில்
நீட்டினன்றேவர்கோன்கைநெற்றியிற்கண்ணன்வெற்றி
காட்டியகரியமாலுங்கார்முகமதனைப்பாரில்
ஈட்டியதவத்தின்மிக்கவிரிசிகற்கீந்துபோனன். 30

இரிசிகனெந்தைதக்கியவெந்தையுமெனக்குத்தந்த
வரிசிலையிதுநீநொய்தின்வாங்குதியாயின்மைந்த
குரிசில்கணின்னெடொப்பாரில்லையான்குறித்தபோரும்
புரிகிலெனின்னேடின்னம்புகல்வதுகேட்டியென்றான். 31

ஊனவில்லிறுத்தமொய்ம்பைநோக்குவதூக்கமன்றுன்
மானவமற்றுங்கேளாய்வழிப்பகையுடையனும்பால்
ஈனமிலெந்தைசீற்றநீக்கினனென்னமுன்னோர்
தானவனனையமன்னன்கொல்லயான்சலித்துமன்னே. 32

மூவெழுமுறைமைபாரின்முடியுடைவேந்தையெல்லா
மேவெழுமழுவின்வாயால்வேரறக்களேகட்டன்னார்
தூவெழுகுருதிவெள்ளத்துறையிடைமுறையினெந்தைக்
காவனகடன்களேர்ந்தேதனருஞ்சினமடக்கிப்போந்தேன். 33

உலகெலாமுனிவற்கீந்தேதனுறுபகையொடுக்கிப்போந்தேன்
அலகின்மாதவங்கள்செய்தோரருவரையிருந்தேனுண்டைச்
சிலையைநீயிறுத்தவோசைசெவியுறச்சீறிவந்தேன்
மலைகுவென்வல்லையாகில்வாங்கிடித்தனுவையென்றான். 34

28. மூலத்தொருவராமிருவரென்றது மும்மைப்பெருந்தேவரிருவரை.

31. எந்தை என்றது சமதக்கினியை.

32. மானவ என்பது மனுவின்வழி வந்தானென்பதனை. தானவனனைய மன்னன் - கார்த்தவீரியன்.

33. தூ - ஊனே.

34. முனிவற்கென்றது - காசிபனே.

என்றனனென்னநின்றவிராமனுமுறுவலெய்தி
நன்றொளிர்முகத்தனாகிநாரணன்வலியினாண்ட
வென்றிவிற்றருகவென்னக்கொடுத்தனன்வீரன்கொண்டான்
றுன்றிருஞ்சடையோனஞ்சத்தோளுறவாங்கிச்சொல்லும். 35

பூதலத்தரசையெல்லாம்பொன்றுவித்தனையென்றாலும்
வேதவித்தாயமேலோன்மைந்தனீவிரதம்பூண்டாய்
ஆதலிற்கொல்லலாகாதம்பிதுபிழைப்பதன்றால்
யாதிதற்கிலக்கமாவதியம்புதிவிரைவினென்றான். 36

வேறு

நீதியாய்முனிந்திடனீயிங்கியாவர்க்கும்
ஆதியானறிந்தனனலங்கனேமியாய்
வேதியாவிறுவதேயன்றிவெண்மதிப்
பாதியான்பிடித்தவில்பற்றப்போதுமோ. 37

பொன்னுடைவனைகழற்பொலன்கொடாளினாய்
மின்னுடைநேமியானாதன்மெய்ம்மையால்
என்னுளதுலகினுக்கிடுக்கண்யான்றந்த
உன்னுடைவில்லுமுன்னுரத்துக்கீடன்றால். 38

எய்தவம்பிடைபழுதெய்திடாமலென்
செய்தவம்யாவையுஞ்சிதைக்கவேயெனக்
கையவனெகிழ்தலுங்கணையுஞ்சென்றவன்
மையறுதவமெலாம்வாரிமீண்டதே. 39

எண்ணியபொருளெலாமினிதுமுற்றுக
மண்ணியமணிநிறவண்ணவண்டுழாய்க்
கண்ணியயாவர்க்குங்களைகணாகிய
புண்ணியவிடையெனத்தொழுதுபோயினான். 40

அழிந்தவன்போனபினமலனையுணர்
வொழிந்துதன்னுயிருலைந்துருகுதாதையைப்
பொழிந்தபேரன்பினாற்றொழுதுமுன்புபுக்
கிழிந்தவான்றுயர்க்கடற்கரையினேற்றினான். 41

---

37. வெண்மதிப்பாதியானென்றது - ஒற்றைக்கலை புனைந்த சிவனை.

41. ஐயுணர்வென்றது - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றை.

வெளிப்படுமுணர்வினன்விழுமநீங்கியே
தளிர்ப்புறுமதகரித்தானையானிடைக்
குளிப்பருந்துயர்க்கடற்கோடுகண்டவன்
களிப்பெனுங்கரையிலாக்கடலுளாழ்ந்தவன். 42

பரிவறுசிந்தையப்பரசுராமன்கை
வரிசிலைவாங்கியோர்வசையைநல்கிய
ஒருவனைத்தழுவிநின்றுச்சிமோந்துதன்
னருவியங்கண்ணெனுங்கலசமாட்டினான். 43

பொய்ம்மையில்சிறுமையிற்புரிந்தவாண்டொழின்

மெய்ம்மையிச்சிறுவனேவினைசெய்தோர்களுக்
கிம்மையுமறுமையுமீயுமென்றனன். 44

பூமழைபொழிந்தனர்புகுந்ததேவருள்
வாமவேல்வருணனைமானவெஞ்சிலை
சேமியென்றுதவித்தன்சேனையார்த்தெழ
நாமநீரயோத்திமாநகரநண்ணினான். 45

நாளிடை

நானையா

வண்ணலப்பரதனைநோக்கியாண்டகை
எண்ணருந்தகையதோர்பொருளியம்புவான். 46

ஆணைநின்றன்முதுதாதையையநிற்
காணியவிழைவதோர்கருத்தனாதலாற்
கேணியில்வளைமுரல்கேகயம்புகப்
பூணெளிர்மார்பநீபோதியென்றனன். 47

ஏவலுமிறைஞ்சிப்போயிராமன்சேவடிப்
பூவினைச்சென்னியிற்புனைந்துபோயினான்
ஆவியங்கவனலதில்லையாதலான்
ஓவலிலுயிர்பிரிந்துடல்சென்றென்னவே. 48

---

42. கோடென்றது கரையை.

44. வினை ஈண்டு சற்கருமத்தை.

46. ஆண்டகை என்றது தயாதனை.

48. இராமன் வனத்திற் புகற்கிடமாதல் வானவர் செய்த மாதவமாகலா லிங்ஙனங் கூறினார்.

உளைவிரிபுரவித்தேருந்தாசித்தென்றெனும்
வளைமுரருணையான்மருங்குபோதப்போ
இளையவன்றன்னொடுமேழுநாளிடை
நளிர்புனற்கேகயநாடுநண்ணினான். 49

ஆனவன்போனபின்னரசர்கோமகன்
ஊனமில்பேரரசுய்க்குநாளிடை
வானவர்செய்தமாதவமுண்டாகலான்
மேனணிநிகழ்ந்தனவிளம்புவாமரோ. 50

ஆக திருவிருத்தம் — 1299.

பாலகாண்டம் முற்றிற்று.

---